## நவரத்தினக் கதைகள்











தமிழ்ப் புத்தாண்டுச் சிறுகதைச் சிறப்பு மலரிலே தமிழகத்தின் தலைசிறந்த எழுத்தாளர்களில் ஒன்பது பேர்களுடைய சிறுகதைகள் இடம் பெற்றிருக்கின்றன. கல்கி வாசகர்களின், தமிழ் கூறும் நல்லுலக அன்பர்களின் இதயங்களிலே இடம் பெற்றுள்ள இந்த ஒன்பது எழுத்தாள அன்பர்களைத்தான் மேலே காண்கிறீர்கள்.

1. திரு அகிலன். 2. திரு கு. அழகிரிசாமி
3. திரு ஆர்வி.. 4. திரு கோவி. மணிசேகரன்
5. ஸ்ரீமதி ஆர். சூடாமணி, 6. திரு சோமு
7. திரு இ. சா. ராஜு. 8. திரு பி. வி. ஆர்.
9. திரு பொன்னித்துறைவன்


K·T·R



# கல்கி பொருளடக்கம்



படவிளக்கம்
பக்கம் 9

கீலக சித்திரை 2 — ஏப்ரல் 14


| | | |
|---|---|---|
| மதுவிலக்கு மகாநாடு | — | 5 |
| எல்லா வரங்களையும் தருவான் | — | 11 |
| மகாபாரதம் | — | 14 |
| இனிக்கும் நினைவுகள் | — | 21 |
| பொன்னிவனத்துப் பூங்குயில் | — | 33 |
| தம் பொருள் என்பது... | — | 42 |
| அதிருப்தி | — | 52 |
| பெரியம்மா என்ன வேண்டினாள்? | — | 58 |
| மக்களின் பண்பு நாட்டின்.... | — | 66 |
| கூட்டுக் கல்வியால்... | — | 72 |
| தூக்குக் கயிறு | — | 75 |
| சிவப்பு விளக்கும்... | — | 78 |
| நாம் செய்த பாவம் | — | 82 |
| ஓநாய்க் கோட்டை | — | 94 |
| பஞ்ச கல்யாணி | — | 97 |
| கலைக் கண்ணாடி | — | 104 |
| எப்பவும், எதையும்! | — | 112 |
| பாதுஷாவின் பாதுகை | — | 122 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.







ராஜாஜி அவர்களின் 'கள் ஒழிக' புத்தகத்திலிருந்து.



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 ☐ இதழ் 37



# மதுவிலக்கு மகாநாடு

எல்லா வரிகளும் விருப்பமில்லா மலேதான் மக்களால் செலுத்தப்படு கின்றன, மக்கள் சின்னஞ் சிறு சமுதாயங்களாக இருக்கும்போது ஒரு பொதுக் காரியத்தை உத்தேசித்துத் தங்களுக்குள் வரி விதித்துக் கொண்டால் அவர்கள் அவ்வரியை மனமுவந்து உற்சாகத்துடன் செலுத்துவார்கள் என்று எதிர் பார்க்கலாம். தாங்கள் குறித்த நோக்கத்துக்காக அப் பணம் செலவழிக்கப் படுவதைக் கண்டு மகிழ்ச்சியும் அடைவார்கள். ஆனல் அரசாங்கம் எளிய அமைப்பிலிருந்து சிக்கல் நிரம்பிய பெரிய விஸ்தாரமான அமைப்பாக மாறிவிட்டது. அதனல் பட்ஜெட் உரைகள் மணிக்கணக்கில் நீள்வதும், அதற்குப் பார்லிமென்டில் விளக்கங்கள் கோருவதும் அளிப்பதும் சம்பிரதாய மாகப் போய்விட்டன. இந்த நிலையில் மக்கள் வரி செலுத்தத் தவறினல் ஏதோ ஒருவிதமான தண்டனைக்கு ஆளாக நேருமே என்ற பயத்தினல் தான் செலுத்தி வருகிருர்கள் என்பதை யாரும் சுலபமாக ஊகிக்கலாம்.

மறைமுக வரி கண்டுபிடிக்கப்பட்டதிலிருந்து வரி முறையிலேயே ஒரு புதுத் திருப்பம் ஏற்பட்டு விட்டது. அரசாங்க வருமான வரி அதிகாரிகளிடம் வரி விதிக்கப்பட்டவர் தாமே நேராக வரி செலுத்துவதில்லை. தமக்குத் தேவைப் பட்ட சாமான் வாங்கும்போது சாமானுக்குரிய நியாய விலை மட்டுமின்றி அரசாங்கத்துக்குச் சேர வேண்டிய வரியையும் சேர்த்துச் செலுத்தி விடுகிருர். வியாபாரி சாமான்மீது விதிக்கப்பட்ட வரியை முன்னதாகவே அரசாங்கத்துக்குச் செலுத்திவிட்டுப் பின்னல் அந்தத் தொகையை அப்பொருள் வாங்குபவரிடமிருந்து வசூலித்துக் கொள்ளுகிருர். 'வியாபாரிகள் கொஞ்சம்கூட மனச்சாட்சி யில்லாமல் விலைகளை ஏற்றி விற்கிருர்கள்' என்று வைது கொண்டே மக்கள் இம்மறைமுக வரிகளைச் செலுத்தி வந்தார்கள். ஆனல் கல்வி அறிவு பெற்று முன்னேற, முன்னேற விலைகள் இவ்வளவு உயர்வதன் மர்மத்தை அறியத் தலைப் பட்டார்கள். பொருள் உற்பத்திச் செலவு, நிர்வாகச் செலவு, முதலீடு செய்ததற்கான நியாயமான லாபம், வியாபாரத்தில் விளையக்கூடிய எதிர் பாராத நஷ்டத்துக்கு ஈடு ஆகியவற்றுடன் வரிகளும் இவ்விலையில் சேர்ந்திருப் பதை உணர்ந்தார்கள். வரிகள் என்ருலே மக்களுக்கு வெறுப்புத்தான்; இருந்தாலும் செலுத்தி வருகிருர்கள். இம்மறைமுக வரி மீதும் வெறுப்புக் கொள்ளத் தலைப்பட்டார்கள்.

ஆனல் இதற்கும் ஒரு விதிவிலக்குள்ள மறைமுக வரியுண்டு. போதை தரும் பொருள்கள்மீது விதிக்கப்படும் மறைமுக வரியைக் குடியர்கள் விருப்பத்தோடும், ஆர்வத்தோடும் செலுத்துகிருர்கள். தான் குடிக்கும் பொருளி லுள்ள மயக்கும் தன்மையால் இந்தப் பழக்கத்துக்கு அடிமைப்பட்டவன் தான் ஏதோ பெருத்த பயனை அடைந்து விட்டதாக நினைக்கிருன். உண்மையில் இதற்கு மாருக அவனது தேகமும் அறிவும் சீர்கெட்டுப் போகின்றன. குடிக்குப் பழக்கப்பட்டவன், இந்தக் கொடிய வலையில் சிக்கிக் கொள்கிருன். அவன் தன் மனைவி மக்களுக்குச் சேர வேண்டியதை பணிக்காமல் வஞ்சித்துச் சூறையாடுகிருன். இதை அவன் உணர்ந்தாலும்கூட இப்பழக்கத்திலிருந்து விடுபட முடியாமல் மீண்டும் குடி வலையில் சிக்கிக் கொள்கிருன். இந்தக் குடிக்குப் பழக்கப்பட்ட மக்கள் நடமாடும் இடமாகப் பார்த்துச் சாமர்த்தியமாக அரசாங்கங்கள் லைசென்ஸ் வழங்கிக் கடைகளை வைக்கின்றன. அப்போது தானே மக்களை வழி மடக்கி, யாதொரு தொந்தரவும் இல்லாமல் கொள்ளையடிக்க முடியும். இக்கொடிய பழக்கத்துக்கு அடிமைப்பட்ட மக்கள் அக் கடைகளைக் கண்டவுடன் அவர்களாகவே நின்று அரசாங்கத்துக்கு வரியைச் செலுத்திவிட்டு வீட்டுக்கு வெறுங்கையுடன் போய்ச் சேருகிருர்கள். இத்தகைய வரிமுறை இரண்டு விதத்தில் அதர்மமானது. இத்தகைய மனிதர்களின்மீது

வரி விதிப்பதும் அதர்மம். மக்களுக்கு இத் தகைய பொருளை விற்பதும் அதர்மம்.

மக்களைக் கெட்ட குடிப் பழக்கத்துக்கு உள்ளாக்கும் இந்தப் போதை தரும் வஸ்துக்களை விற்பதனால் கிடைக்கும் வருவாயை அரசாங்கம் தானாகவே மக்கள் சபைத் தீர்மானத்தின் மூலம் விட்டுக் கொடுத்திருக்கிறது என்பதையும், இந்த அதருமமான வருவாயைத் துறப்பதை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒரு முக்கியமான . அம்சமாக ஏற்றுக் கொண்டிருக்கிறது என்பதையும் முன்பே குறிப்பிட்டிருக்கிறேன்.

இந்தத் தீர்மானம் மக்கள் சபையில் 1956 மார்ச்சு 2ம் தேதி கொண்டு வரப்பட்டது. அதில் அரசியல் சாஸனத்தின் முக்கியமான குறிக்கோள்களுக்கு அனுசரணையாக மதுவிலக்கைக் குறிப்பிட்ட காலத்துக்குள் தேசம் முழுவதிலும் அமுல்படுத்த ஒரு நாளும் குறிப்பிடப்பட்டது. அதன் மீது மக்கள் சபையில் விரிவான விவாதம் நடைபெற்றது. அதில் உள்துறை மந்திரியும் கலந்து கொண்டார். அதன் மீது 1956 மார்ச்சு 31ம் தேதி பின்வரும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது:

> ''மதுவிலக்கை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலிருந்து பிரிக்க முடியாத முக்கிய அம்சமாக இச்சபை கருதுகிறது. ஆகவே, இதனை விரைவாகவும் திறமையாகவும் தேசம் முழுவதிலும் அமுல் படுத்த ஒரு செயல் திட்டம் தயாரிக்கும்படி திட்டக்கமிஷனுக்குச் சிபாரிசு செய்கிறது.''

இந்தத் தீர்மானம் சபையில் நிறைவேற்றப்பட்டதுடன் நின்று விடவில்லை. இந்திய அரசாங்கம் இதனை அங்கீகரித்து ஏற்றுக் கொண்டதன் விளைவாக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட நகலில் (அத்தியாயம் 29, பாரா 20) மதுவிலக்குத் திட்டத்தை நியாயமான குறித்த காலத்துக்குள் தேசம் முழுதும் அமுல்படுத்துவதாக உறுதியும் அளிக்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் ஜவாஹர்லால் நேரு மக்கள் சபையில் 1956 செப்டம்பர் 11, பிரேரித்து, அரசாங்கம் ஏற்றுக் கொண்டதாகும். தற்சமயம் நிலவும் பல்வேறு ராஜ்ய காங்கிரஸ் அரசாங்கங்களின் போக்கு, 1956ல் பாரத அரசாங்கம் செய்த தீர்மானத்துக்கு முற்றும் விரோதமானதாகும்.

அகில இந்திய மதுவிலக்குக் குழுவினை ஊக்கிச் செயல்படுத்தும் வாய்ப்பாகக் காந்தி நூற்றாண்டு விழா அமைந்தது குறித்து மகிழ்கிறேன். மதுவிலக்குச் சங்கத்தின் மகாநாடு சென்னையில் காங்கிரஸ்காரர் அல்லாத ஒரு முதல் மந்திரியால் தொடங்கி வைக்கப்படுகிறது. அண்டைய ராஜ்யங்கள் மதுவிலக்கைக் கைவிட்டு, ஏராளமான கள் — மதுபானக் கடைகளைத் திறந்து பழைய வாடிக்கைக்காரர்களிடமிருந்தும் புதிதாகப் பழக்கப்பட இருப்போரிடமிருந்தும் ஏராளமாக நிதி வசூலிப்பதைப் பார்த்தும், தமது மதுவிலக்குக் கொள்கையிலிருந்து பிறழாமல் உறுதியாக நிற்கிறார் சென்னை முதன் மந்திரி. அவர் இம்மகாநாட்டினைத் தொடங்க இருப்பது கண்டு மகிழ்கிறேன்.

நமது அரசியல் சாஸனம், நிறைவேற்ற வேண்டிய குறிக்கோள்களில் மதுவிலக்கு ஒன்று எனத் திட்டமாகக் கூறுகிறது. 1956ல் மக்கள் சபையும் தேசம் முழுவதிலும் மதுவிலக்கு அமுல்படுத்தப்பட வேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றி அதை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முக்கிய அம்சமாகச் சேர்த்திருக்கிறது. இத்தனையையும் புறக்கணித்துப் பல ராஜ்ய அரசாங்கங்கள் குடியை மீண்டும் புகுத்தியிருப்பதை இந்த மகாநாடும், அகில இந்திய மதுவிலக்குக் குழுவும் மாற்ற முயலும், அதற்குரிய சக்தியைப் பெறும் என்று நம்புகிறேன்.

ஆரோக்கியத்தைப் பாதிக்கும் இந்தப் பொருளை மக்கள் வாங்க முடியாதபடி அதிகபட்ச வரி விதிப்பதுதான் நியாயம் என்று வாதாடலாம். ஆனால் இவ்வாதம் மிக ஆபத்தானது. இவ்வரி அரசாங்கத்தின் வருமானத்தைப் பெருக்கிக் கொள்ள விதிப்பதாகும். குடிப் பழக்கமுள்ளவர்கள் அதைத் துறந்துவிடாதபடியும் சர்க்காருக்குப் போதிய வருமானம் கிடைக்கும் வகையிலும் மிகச் சாமர்த்தியமாக விதிக்கப்படுகிறது. ஏழை மக்களின் தார்மிக, பொருளாதார நஷ்டத்தின் மீது அரசாங்க நிதி வசூலிக்கப்பட வேண்டும் என்றால், அது எந்த வகையிலும் நியாயமாகாது. உண்மையில் அத்தகைய வருவாய் வருவாயே அல்ல. மாயை. ஏனெனில், இந்த வருவாயைத் தொடர்ந்து எத்தனையோ கொடிய விளைவுகள் ஏற்படும். ஏழை மக்கள் அறியாமைக்கும் மோகத்துக்கும் ஆட்பட்டுக் கெட்டுப் போகாமல் காப்பாற்ற வேண்டிய கடமை அரசாங்கத்தினுடையது. மதுபானக் கடைகளைத் திறக்கும் திட்டத்தை மேற்கொள்வது இக்கடமையைப் புறக்கணித்து, ஏழை மக்களுக்குத் துரோகம் செய்வதாகும்.

(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது.)

மதுவிலக்கும் பற்றி ஒரு கையேடு 1931ல் ராஜாஜி Indian Prohibition Manual என்ற தலைப்பில் சேலம், திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்திலிருந்து வெளியிட்டார். அதற்கு ஜவாஹர்லால் நேரு அவர்கள் ஓர் அருமையான முன்னுரை அளித்திருக்கிறார். ★

# மதுவிலக்கு பற்றி நேருஜி

ஒத்துழையாமையும் சத்தியாக்கிரகமும் குறுகிய ஆனால் நேரான பாதைகள். காங்கிரஸ் ஒத்துழையாமை சத்தியாக்கிரகம் என்ற பாதைகளை மேற்கொண்டதிலிருந்து அதன் செயல் திட்டங்களில் மிகப் பெரிய அம்சமாக மதுவிலக்கு இருந்து வந்திருக்கிறது. நமது

தேசிய இயக்கத்தின், நமது மாபெரும் ஸ்தாபனத்தின் செல்வாக்கெல்லாம், இந்தச் செய்தியைப் பாமர மக்களுக்கு உணர்த்தவே பயன்பட்டு வந்திருக்கிறது. இது சிரமமான காரியமல்ல. போதை தரும் குடியையோ, மருந்துகளையோ மக்கள் அருந்தக் கூடாது என்பதை நமது பழம் சம்பிரதாயங்களும், சமயாசாரங்களும், சமூக நீதிகளும் எல்லாமே வற்புறுத்துகின்றன. இந்தியாவில் உள்ள பிரிட்டிஷ் அரசாங்கம் மட்டும் குறுக்கிடவில்லையானால், காங்கிரஸின் முயற்சிகள் என்றோ வெற்றி பெற்றிருக்கும். அரசாங்கத் தரப்பிலிருந்துதான் இவ்வியக்கத்துக்கு — உண்மையான தொல்லை வருகிறது. அதனால் மதுவிலக்கு இயக்கம் ஓரளவு அரசியல் இயக்கமாகவும் அரசாங்க எதிர்ப்பு இயக்கமாகவும் மாறி விட்டது. தடுமாறிக் கொண்டிருக்கும் அரசாங்கத்தைத் தாங்கி நிறுத்தவும் அரசாங்க இயந்திரத்தின் ஊதாரித்தனமான செலவுகளுக்கு நிதி தேடும் ஆசையிலும், நாட்டு மக்களின் நலனைச் சர்க்கார் புறக்கணித்து விட்டது. நாட்டின் உண்மையான செல்வம் மக்களைக் கசக்கிப் பிழிந்து வசூலிக்கும் செல்வத்தில் இல்லை—மக்கள் மக்களாக வாழ்வதில் இருக்கிறது. அவர்களது ஆண்மையிலும் பெண்மையிலுமிருக்கிறது! பிரிட்டிஷார் இந்தியாவுக்கு வந்ததிலிருந்து, எத்தனையோ விஷயங்கள் நமது சிறப்பான மக்களை இன்றுள்ள இழிநிலைக்குக் கொண்டு வந்து விட்டன! அவற்றில் ஒன்று அரசாங்கத்தின் மதுபானத் திட்டம்.

இந்தச் சிறு நூலை மக்களுக்கு அறிமுகப்படுத்த என்னைப் போன்ற பாமரன் முன்வருவது சிறிது அதிகப் பிரசங்கித்தனமாகும். இத்துறையில் ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரியார் முற்றும் அறிந்தவர் என்பதும் இந்திய மதுவிலக்கு இயக்கத்தின் தன்னிகரற்ற தலைவர் என்பதும் யாவரும் ஒப்புக்கொண்ட விஷயமாகும். அப்படிப்பட்ட அவர் எழுதும் விஷயம் யாவருடைய கவனத்துக்கும் உரியதாகும். ஒரே ஒரு கருத்தை மட்டும் குறிப்பிடத் துணிகிறேன். குடிப் பழக்கமுள்ளவர்களுக்கு அடிக்கடி தர்மசாஸ்திரங்களைப் பற்றியே கூறப்படுகிறது. மதுவிலக்குப் பிரசாரத்துக்கு ஆதாரமாகத் தர்மசாஸ்திரங்களையே பெரும் வாதமாக எடுத்துக் கூறப்படுகிறது. பலர் இவ்வாதங்களால் திருத்தப் படலாம். ஆனால் மதுவிலக்கு வெற்றியடையப் போகிறது என்றால், அது நாட்டின் முன்னேற்றத்துக்கும் மக்களின் நலனுக்கும் மதுவிலக்கு அவசியம் என்ற விஞ்ஞான ரீதியான காரணங்களால் எழுந்த நம்பிக்கையின் அடிப்படையிலேதான் சாத்தியமாகும். குடிப் பழக்கமுள்ள தனிமனிதனுக்கோ, சமுதாயத்துக்கோ ஏற்படும் மாபெரும் தீங்கு எது என்றால் அவனுக்கு அல்லது அந்தச் சமுதாயத்துக்கு ஏற்படும் உடல் — உள்ள நலிவுதான். ஆகவே, பிரச்னையை விஞ்ஞான ரீதியாக அணுக வேண்டும். ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரியார் அவ்வாறு அணுகி, மதுவிலக்கு நாட்டுக்கு அவசியம் என்பதைத் தகர்க்க முடியாத காரணங்கள் காட்டி நிலைநாட்டியிருக்கிறார். சேவாதளத் தொண்டர்களும் மற்ற காங்கிரஸ்காரர்களும் இச்சிறு புத்தகத்தைப் படித்துப் பயனடைவார்கள் என்று நம்புகிறேன்.

அலகாபாத்
நவம்பர் 27, 1931 — ஜவாஹர்லால் நேரு

Quality is never an accident.
It is always the
result of intelligent effort.
There must be the will
to produce a superior thing.

John Ruskin

Mahindra & Mahindra Ltd.



# ராஜாஜியின் கருத்துக்கள்

சென்னையில் மாணவர்களுக்கும் சர்க்கார் பஸ் தொழிலாளர்களுக்குமிடையே நிலவிய தகராறு பற்றி நான் ஏன் என் கருத்தைத் தெரிவிக்கவில்லை என்று பல நண்பர்கள் என்னைக் கேட்கிறார்கள். சட்டபூர்வமான நீதி விசாரணைக்கு ஏற்பாடு செய்யப்பட்டபின், விசாரணைக்குரிய விஷயம் பற்றிக் கருத்துத் தெரிவிப்பதோ, அறிக்கைகள் விடுவதோ சட்ட சம்மதமாயினும், சரியான முறையல்ல.

ஃஃஃ

லிண்டன் ஜான்ஸனைப் பற்றி நான் எப்போதுமே உயர்வாக எண்ணி வந்தேன். ஆனால் சமீபத்தில் தாம் மீண்டும் ஜனாதிபதி பதவிக்குப் போட்டியிடப் போவதில்லை என்று அவர் அறிவித்த அந்தப் பேச்சைப் படித்த பிறகு அவர் என் மதிப்பில் பத்து மடங்கு உயர்ந்து விட்டார். அவரது அறிக்கை, கொள்கை அளவிலும் நடவடிக்கை அளவிலும் தனிச் சிறப்புடன் திகழ்கிறது. இப்போது உள்ளது போன்ற ஒரு நெருக்கடி நிலையில் அமெரிக்க ஜனாதிபதி பதவியை வகிப்பவருக்குத் தமது நேரத்தில் ஒரு சிறு பகுதியையோ அல்லது தமது சக்தியின் ஒரு சிறு பகுதியையோகூட நாட்டு நிர்வாகத்துக்கு அப்பாற்பட்ட விஷயங்களுக்காகச் செலவழிக்க உரிமை கிடையாது. தமது நேரத்தைத் தமது சொந்த அரசியல் நோக்கங்களுக்காகச் செலவிடவும் உரிமை இல்லை. இந்த அடிப்படையிலேதான் ஜான்ஸன் தாம் ஜனாதிபதி பதவிக்குப் போட்டியிடப் போவதில்லை என்று அறிவித்துத் தமது நண்பர்களையும் அரசியல் எதிராளிகளையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியிருக்கிறார். நமது காலத்தில் அபூர்வமாக நிகழும் ஓர் அரிய அரசியல் சம்பவம் இது. ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக நாம் நினைவில் இருத்திக் கொள்ள வேண்டிய சம்பவம்.

ஃஃஃ

இரண்டாம் உலகப் போரின்போது ஜப்பான் முழுத் தோல்வியை ஒப்புக்கொண்டு, தனது நாட்டின் சக்கரவர்த்தியோடு அவரது கௌரவமும் காப்பாற்றப்படும் என்ற உத்தரவாதத்தை மட்டுமே எதிரிகளிடம் கோரிய போது நேசநாடுகள் அந்த வேண்டுதலை ஏற்க மறுத்தன. மாறாக, நிபந்தனைகள் ஏதுமற்ற முறையில் ஜப்பான் சரணடைய வேண்டும் என்றன. அதைத் தொடர்ந்து அமெரிக்கா நாகஸாகி, ஹிரோஷிமா நகரங்கள் மீது அணுகுண்டுகளை வீசி ஜப்பானிய மக்களை நிபந்தனை ஏதுமற்ற முறையில் சரணாகதியடைய வைத்தது.

காலச் சக்கரம் சுழலும்போது பழிவாங்கும் படலமும் வருகிறது. இப்போது உள்ள சூழ்நிலையைப் பார்த்தால் அமெரிக்க மக்கள் வியட்நாம் விவகாரத்தில் நிபந்தனைகள் ஏதுமற்ற முறையில் சரணாகதி அடைய வேண்டும் என்று கம்யூனிஸ நாடுகள் தட்டிக் கேட்கும் என்று தோன்றுகிறது. செஞ்சீனா. இந்தோனேசியா முழுவதையும் விழுங்கிவிடப் பசியோடு காத்திருக்கிறது. இது நடக்கவும் கூடும், அமெரிக்கா பின்வாங்கி விட்டால்.

ஃஃஃ

கல்கத்தாவில் ஸ்ரீமதி இந்திராகாந்தி மத்திய அரசாங்கம் எவ்வளவு கச்சிதமாக, சிறப்பாக இருக்கிறது என்று நிறையப் பெருமையடித்துக் கொண்டதாகத் தெரிகிறது. வன்முறைகளும் சதிச் செயல்களும் ஏகமாகப் பெருகி வரும் ஒரு பகுதியில் அவர் இப்படிப் பேசியது அந்தச் சந்தர்ப்பச் சூழ்நிலைக்கு ஏற்றது என்று அனுமதிக்கலாம். ஆனால் ஒரு சந்தர்ப்பச் சூழ்நிலையை ஒட்டிக் கூறியதைப் பிரதமர் தாமே நம்பிவிடாமல் இருப்பார் என்று எதிர்பார்ப்போம். மத்திய அரசு முதல்தரமான நிலையில் இருப்பதாக எண்ணிக் கொள்வது சரியாகாது.

இன்று பதவியில் இல்லாதவர்களும், பதவியைத் தேடாதவர்களும், மிகுந்த திறமைசாலிகளும், அநுபவசாலிகளும், தமது அருமை நாட்டின் நிலவரம் பற்றி மனத்தில் தோன்றியதை மறைக்காமல் கூறுவோருமான சிறந்த ராஜநீதி நிபுணர்கள் பலர் பிரதமர் நினைப்பது போல் எண்ணவில்லை.

ஃஃஃ

அதிகாரம் இதயத்தை மட்டுமல்ல; புரிந்து கொள்ளும் சக்தியைக்கூடக் கெடுத்து விடும் என்று பர்க் கூறியுள்ளார். அதிகாரம் கெடுக்கும்; முழுமையான அதிகாரம் முழுமையாகக் கெடுக்கும் என்று லார்ட் ஆக்டன் கூறியதற்கு வெகு காலம் முன்பே பர்க் மேற்சொன்னவாறு எழுதியுள்ளார். அதிகாரம் பெற்றவன் கெடுவது ஒழுக்கத்தில் மட்டுமல்ல. மிகுந்த புத்திசாலியாக இருந்து நியாயத்துக்குட்பட்டு நடக்காது போனால் அவனது அறிவாற்றலும் கெட்டு விடுகிறது.

ஃஃஃ

'ஸாட்டர்டே ரெவ்யூ'வின் ஒரு விசேஷ மலரில் ஹென்றி பிரான்டன் எழுதியுள்ள

---

## மகிழ்ச்சிக் குடும்பம்!

"அப்பாவுக்கு 'டாட்டா' சொல்லு!" என்று பங்களாவின் வாசலிலிருந்து காரில் ஏறும் தன் கணவரைக் காட்டுவாள் நாகரிக நாரிமணி.

குடிசையில் வசிக்கும் குடும்பத்தின் தலைவி "அப்பாவுக்கு ஒரு முத்தம் கொடு! வரும்பொழுது உனக்கு மிட்டாய் கொண்டு வருவாரு!" என்பாள். "காலையில் வேலைக்குப் போகும்பொழுது நல்ல முகத்தைப் பார்த்துட்டுப் போ. இன்னிக்குப் பொழுது நல்லா இருக்கும்!" என்பாள்.

பொருளடக்கப் பகுதியில் படம்: ஏ. எம். ஹுஸைன்

போக்கியோ கடிதத்திலிருந்து மேற்கண்ட கலையான அம்சங்களை எடுத்துக்காட்டுகிறேன். யுத்தத்துக்கு முன்னும் ஜப்பானியர் ஐரோப்பிய மக்களை முன்னோடியாகக் கொண்டிருந்தனர். ஆனால் இப்போது அமெரிக்கர்களைப்போல் நடந்து கொள்வதுதான் நாகரிகமாகக் கருதப்படுகிறது. தானாகவே முன்னுக்கு வந்த மனிதன்தான் இன்று ஜப்பானில் போற்றப்படுகிறான். 'வெற்றி காண்பதன் மூலம்மகிழ்ச்சி' என்பதே இன்று அனைவருக்கும் லட்சியமாக இருக்கிறது. இரண்டாவது உலக யுத்தத்தில் ஏற்பட்ட தோல்வியின் காரணமாக உருவான தாழ்வு மனப்பான்மை, குற்றமிழைத்த மனப்பான்மை இவற்றையெல்லாம் அவர்கள் வென்றுவிட்டனர். சுய நம்பிக்கையும் பெருமிதமும் கொண்டு விளங்குகின்றனர். பொறுப்புடன் பேசும் அறிஞர்கள், ஜப்பான் வெகுசீக்கிரமே மேற்கு ஜெர்மனியைவிட அதிகமாக முன்னேறித் தொழில் துறையில் உலகநாடுகளிடையே மூன்றாவது ஸ்தானம் வகிக்கும் என்று எதிர்பார்க்கின்றனர். ''பொருளாதாரத் துறையில் இந்த மகத்தான முன்னேற்றத்துக்கு முக்கியமான காரணங்களுள் ஒன்று அரசாங்கத்துக்கும் பெரிய தொழிலதிபர்களுக்கும் இடையே நிலவிய ஒத்துழைப்பும் கூட்டுறவுமேயாகும். பெரிய தொழில் தலைவர்களை அமைதியான முறையில் கலந்தாலோசியாமல் அரசாங்கம் எந்த முக்கியமான கொள்கையையும் வகுப்பதில்லை. தொழிற்சங்கங்களோ அவற்றின் தொழிலதிபர்களிடம் அசைக்க முடியாத விசுவாசம் கொண்டுள்ளன. உலக நாடுகளுள் ஜப்பானே இன்று மக்களின் விருப்பமறிந்து நடக்க வேண்டும் என்பதில் அதிக நாட்டம் கொண்ட நாடாக விளங்குகிறது.''

* * *

எந்தக் கணமும் போருக்குத் தயாராக இருப்பதற்காக ராணுவச் செலவுகள் என்ற தாங்க முடியாத சுமையைத் தாங்குவதன் மூலம் நம்மை நாமே அழித்துக் கொள்ள வேண்டும்; 'அல்லது இவ்விஷயத்தில் இக்காலத்துக்கு ஒத்து வராத பழைய கொள்கைகள் எவையாயினும் அவற்றை ஒதுக்கிவிட்டு நமது அயல்நாட்டுக் கொள்கைகளில் மாறுதல்கள் செய்து கொள்ள வேண்டும். பொது வாழ்வில் ஈடுபடத் தொடங்கியுள்ள எந்த இளைஞனும் தெளிவாகக் காணக் கூடிய விஷயம் இது.

ஒரு காலத்தில் நமது சகோதரர்களாக விளங்கி இன்று தனி நாட்டவராக இருப்போருடன் நட்புறவு பூண்டு வாழும் கொள்கையை அழுத்தமாகப் பின்பற்றுவதே தேவைப்படும் மிக முக்கியமான மாறுதல். தீவிரமான புனராலோசனை, திரும்பத் திரும்பக் கூறப்பட்டு வரும் உளுத்துப் போன கொள்கைகளை உதறித் தள்ளுவது. யதார்த்த நோக்கில் சரிப்பட்டு வராத உரிமைகளில் சற்று விட்டுக் கொடுப்பதற்குரிய உண்மையான தைரியம் — இவையெல்லாம் தான் இன்று தேவைப்படுகின்றன. இந்த விஷயங்களில் தேசத்தின் நலனைக் கணக்கிட்டு ஆட்சியில் அமர்ந்து அதிகாரம் செலுத்துவோரே நமக்குத் தேவை; தேர்தலில் வெற்றி பெறும் வழிகளைக் கணக்கிடுவோர் அல்ல. 'அவசியம் ஏற்பட்டால் ஜனாதிபதி ஜான்ஸனைப் போலவே, நான் நாட்டுக்காக என்னவெல்லாம் செய்ய முடியுமோ, அவற்றை யெல்லாம் செய்வேன்; மற்ற விருப்பங்களை யெல்லாம் இதற்குச் சம்பந்தமில்லாதவை என ஒதுக்கி விடுவேன்' என்று சொல்லி அதன்படி நடக்கவும் கூடிய தலைமை இன்று நமக்குத் தேவை.

இந்த உயர் நோக்கத்தை, வலியுறுத்தும் ஒரே கட்சி சுதந்திரக் கட்சியே. முஸ்லிம்களை அவர்கள் முஸ்லிம்கள் என்ற ஒரு காரணத்துக்காகவே நம்பக் கூடாது என்பவர்களோ; இரவிலும் பகலிலும் தொழில் துறையில் அமைதி குலையச் செய்வது பற்றியும் சதிச் செயல்கள் பற்றியுமே கனவு கண்டும் திட்டம் போட்டும் வருகிறவர்களோ நாட்டுக்கு இந்தச் சீர்கேடான நிலைமையில் உதவ முடியாது.

---

## காமகோடியின் கருணைமொழி



புத்தாண்டு பிறக்கப் போவதற்கு அறிகுறியாக இயற்கை அன்னை தனது மர வர்க்கங்களின் அரசிளங் குழந்தைகளாக உள்ள அரசையும், வேம்பையும் முதலில் அடியோடு இலையுதிரச் செய்கிறாள். பிறகு வேம்பைப் பூக்கச் செய்கிறாள். அரச— வேம்பின் அடியில் வீற்றிருக்கும் விநாயகருக்கும் ஆதிசேஷனுக்கும் சிவபெருமானுக்கும் பாம்பில் ஆடும் கண்ணனுக்கும் முதலில் பூரண சூரிய பூஜை செய்வித்து, சூரியன் கடுமையாகப் போகும் நாட்களில் குளிர்க் குடை பிடிக்கிறாள்.

புத்தாண்டில் பூக்கும் முதல் வேப்பம் பூவை அருந்துகிறோம். பொங்கலன்று இனிய கரும்பைக் கடித்தோம். வருஷப் பிறப்பன்றோ கசப்பை அருந்துகிறோம். ஆரம்பத்தில் கசப்பாக இருக்கும் அநுபவங்களெல்லாம் முடிவில் தித்திக்கும். ஆரம்பத்தில் தித்தித்துவிட்டால் முடிவில் கசக்கும். இது இன்றும் என்றும் உள்ள அநுபவம். கசப்பென்று ஒன்றையும் வெறுக்காமல், புத்தாண்டின் தொடக்கத்தில் மருந்தாம் கசப்பையே இயற்கை அன்னையின் அருளாக எதிர்கொண்டு வரவேற்போம். ஒன்றிலும் வெறுப்பு வேண்டாம்.

# எல்லா வரங்களையும் தருவான்



தனி மக்களுக்கும் ஜன சமூகத்துக்கும் அரசாங்கங்களுக்கும் அனைவருக்கும் வருகிறது புத்தாண்டு. வருஷப் பிறப்பன்று நாம் செய்ய வேண்டியதென்ன? இராத்திரி செய்த பாவங்கள் இராத்திரியோடு ஒழிந்து போகவேண்டும், பகவானே, பகவதியே என்று பிரார்த்திக்க வேண்டும். இராத்திரி என்பது அவிவேகமாகிய இருள். அவிவேகத்தினால் சென்ற ஆண்டில் செய்த தவறுகளும், பாபங்களும், எல்லாம் முடிந்துபோன வருஷத்தோடு ஒழிந்து போய், புத்தாண்டில் விவேகம் உதயமாகிக் குற்றங்களினின்று தப்புவோமாக என்று கருணைக் கடலாகிய மகாலக்ஷ்மியை இறைஞ்சுவோமாக. தேவியின் கருணை இல்லாமல் அவிவேகப் புகையினின்று தப்புவது அரிது. புத்தாண்டு காலையில் உதயமாகும் சூரிய பகவான் நமக்கு அன்னமும், ஆரோக்கியமும், பலமும், தெளிந்த புத்தியும், தைரியமும் தருவானாக. சர்வ ரத்தின மயமான சந்தியா காட்சியை நமக்குத் தரும் சூரியபகவான் நம் தாயும் தகப்பனும் ஆவான். எல்லா வரங்களையும் தருவான்.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

# On festive occasions



PRESENT

"Bentex"

STRAPS
BRACELETS



Creative Unit-Ben-98

## நேருஜி நினைவு நிதிக்கு நன்கொடை

1966-ம் ஆண்டு விஜயதசமியன்று நமது சங்கீதம் உலகத்தை வெற்றி கொண்டு அதன ஜெயக்கொடி ஏற்றுவிக்கப்பட்டது நேயர்களுக்கெல்லாம் நினைவிருக்கும். அந்த நன்னாளில்தான் ஐக்கிய நாட்டுச் சபையில், ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் இன்னிசை நிகழ்த்தினார். கிராமபோன் கம்பெனியார் ஐ. நா. சபையில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் நிகழ்த்திய முழுக் கச்சேரியையும் அச்சபையின் அங்கீகாரத்துடன் மூன்று பெரிய அளவு (எல்.பி.) கிராமபோன் ரிகார்டுகளில் பதிவு செய்து உலகம் முழுவதும் விற்பனையாக ஏற்பாடு செய்துள்ளனர். ஸ்ரீமதி எம். எஸ். அவர்களும் தமது உதார குணத்துக்கேற்பத் தமக்குக் கிடைக்கக் கூடிய 'ராயல்டி' தொகை முழுவதையும் ஜவாஹர்லால் நேரு ஞாபகார்த்த நிதிக்குத் தம் காணிக்கையாகத் தந்திருக்கிறார்.

மூன்று ரிகார்டுகளும் அடங்கிய 'செட் டைச் சமீபத்தில் புதுடில்லியில் நமது ராஷ்டிரபதி ஜாகிர் ஹுஸைன் அவர்கள் வெளியிடுவதையும், பிரதம மந்திரியிடம் டில்லி கிராமபோன் கம்பெனியின் மானேஜர் திரு கௌதம் ஒரு செட் அளிப்பதையும் காணலாம்.



# மகாபாரதம்

## 21. ஜராசந்தன் வதம்

**ராஜாஜி**

மூன்று அக்ஷௌஹிணி சேனைகளுக்குத் தலைவனும் மிக்க பராக்கிரமசாலி என்று புகழ் பெற்றவனுமான பிருகத்ரதன் என்பவன் மகத நாட்டை ஆண்டான். காசி ராஜனுக்கு இரட்டையாகப் பிறந்த இரண்டு பெண்களை அவன் விவாகம் செய்து கொண்டான். ''உங்கள் இருவரில் யாருக்கும் நான் எந்த விதத்திலும் பட்சபாதமாக நடக்க மாட்டேன்'' என்று பிருகத்ரதன் தன் இரு மனைவிகளுக்கும் சபதம் செய்து கொடுத்தான்.

பல நாட்கள் காத்தும் பிருகத்ரதன் சந்தானப் பேறு பெறவில்லை. இளமைப் பருவம் தாண்டி முதுமைப் பருவம் அடைந்தான். பிறகு ராஜ்யத்தை மந்திரிகளிடம் விட்டு விட்டு மனைவிகளுடன் வனம் சென்று தவத்தில் ஈடுபட்டான். கௌதம வம்சத்தைச் சேர்ந்த சண்ட கௌசிகர் என்ற முனிவரிடம் ஒரு நாள் சென்று தன் குறையைச் சொல்லிக் கொண்டான். அவர் இவனிடம் கருணை கொண்டு, ''உனக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டார்.

பிருகத்ரதன், ''சுவாமி! ராஜ்யத்தை விட்டு விட்டுச் சந்ததி இல்லாமல் தபோவனத்துக்கு வந்திருக்கும் பாக்யமற்ற எனக்கு என்ன வேண்டுமாயிருக்கிறது?'' என்று சொன்னான்.

முனிவர் இந்தச் சொல்லைக் கேட்டு மனமிரங்கித் தியானத்தில் ஆழ்ந்தார். அப்போது மரத்தடியிலிருந்த அவர் மடியில் ஒரு மாங்கனி விழுந்தது. அதை அவர் எடுத்து ''இதைப் பெற்றுக்கொள். உன் குறை தீரும்'' என்று சொல்லி அரசனை ஆசீர்வதித்து அனுப்பினார்.

அரசன் அந்தப் பழத்தைத் தன் இரண்டு மனைவிகளுக்கும் இரண்டு பங்காகச் செய்து கொடுத்தான். பட்சபாதம் செய்ய மாட்டேன் என்கிற பிரதிக்ஞையைக் காப்பாற்ற இவ்வாறு செய்தான். அவர்கள் அதை உண்ட பின் சில நாட்கள் கழித்துக் கருப்பம் தரித்தார்கள். காலத்தில் பிரசவமும் ஆயிற்று. ஆனால் இரண்டு மனைவிகளும் மனம் நொந்து முன்னைவிட அதிகமாகத் துயரத்தில் அழுந்தும்படி நேரிட்டது. குழந்தைகளுக்குப் பதில் ஒரு தேகத்தின் இரண்டு கூறாக, ஒரு மனைவி ஒரு கூறும், மற்றொரு மனைவி மற்றொரு கூறும் மாம்பழத்தின் இரு கூறுகளைப் போல் பெற்றார்கள். ஒரு கை, ஒரு கால், அரை முகம், ஒரு கண், ஒரு காது இவ்வாறு பயங்கரமாக உயிருள்ள இரண்டு உடற்கூறுகளை இருவரும் பெற்றார்கள்.

துக்கத்தினால் பீடிக்கப்பட்டு, அமங்கலமான பிண்டங்களைத் துணியில் மூடி எங்கேயாவது கொண்டுபோய் எறிந்துவிடும்படி தாதிகளிடம் சொன்னார்கள். அவ்வாறே அந்த இரண்டு மாமிசப் பிண்டங்களையும் தாதிகள் கொண்டு போய்த் தெருக் குப்பையில் எறிந்து விட்டார்கள்.

மாமிசம் தின்னும் ஓர் அரக்கி அந்த இடத்தில் வந்தாள். அவள் அந்தப் பிண்டங்களைப் பார்த்துப் பசியைத் தீர்த்துக் கொள்ளலாம் என்று மகிழ்ச்சியடைந்து இரண்டு துண்டங்களையும் ஒன்றாகச் சேர்த்து எடுக்கப் போனாள். உடனே இரண்டும் ஒன்று கூடி உயிர் கொண்டு ஒரு சிசுவாயிற்று. அரக்கி இதைக் கண்டதும் இக்குழந்தையைக் கொல்லத் தகாது என்று எண்ணி, அழகிய மானிட உருவம் தரித்துக் கொண்டு, அரசனிடம் போய் 'இது உன் குழந்தை' என்று சொல்லிக் கொடுத்தாள்.

அரசன் அளவு கடந்த மகிழ்ச்சி அடைந்து குழந்தையைப் பெற்றுக் கொண்டு அதை மனைவியரிடம் ஒப்புவித்தான்.



இந்தக் குழந்தையே ஜராசந்தன். முனிவர் வரத்தினால் ஜராசந்தன் அளவு கடந்த உடல் வன்மை பெற்று வளர்ந்தான். ஆனால் அவனுடைய உடல் இரண்டு கூறுகளாகப் பிறந்து ஒன்று கூடிய உடலானபடியால், இரு உருவாகப் பிரியும் தன்மையும் பெற்றிருந்தது.

இந்த வினோதக் கதையில் ஒரு தத்துவத்தைப் புராணம் செய்தவர் அடக்கியிருக்கிறார். பிரிந்த பின் மறுபடியும் கூடினாலும் பலம் குறைந்தே இருக்கும் என்பது ஜராசந்தன் ஜன்மக் கதையில் காட்டப்படுகிறது.

ஜராசந்தனுடைய துணையாளர்களான ஹம்சன், இடிம்பகன், கம்சன் இவர்கள் இறந்து விட்டார்கள். ஜராசந்தனை வதம் செய்வதற்கு இதுதான் சமயம். சேனைகளையும் படைகளையும் கொண்டு அவனை எதிர்த்துப் போர் செய்யப் பார்ப்பதில் பயனில்லை. அவனைத் தனிச் சண்டையில் இழுத்துத் தான் வெல்ல வேண்டும் என்று கண்ணன் நிச்சயித்தான்.

அக்காலத்து வழக்கத்தின்படி பகைவன் போருக்கு அழைத்தால் க்ஷத்திரியன் ஒப்புக் கொண்டே தீர வேண்டும். மல் யுத்தமானாலும் அல்லது வில்லும்

தேரும் சாதனமாகக் கொண்ட யுத்த மானாலும் க்ஷத்திரிய வழக்கப்படி பகைவன் கோரியபடி வீரன் ஒப்புக் கொண்டு யுத்தம் நடத்த வேண்டும். இந்த வழக்கத்தை உத்தேசித்துக் கிருஷ்ணனும் பாண்டவர்களும் சதி செய்தார்கள்.

தருப்பையும் மரவுரியுமாக விரதம் பூண்டவர்களுடைய வேஷம் கொண்டு நீர்வளமும் அழகிய கிராமங்களும் நகரங்களும் நிறைந்த மகத தேசம் போய்ச் சேர்ந்தார்கள். ஜராசந்தனுடைய ராஜதானியை அடைந்தனர்.

ஜராசந்தன் அபசகுனங்களைக் கண்டான். அதற்காகப் புரோகிதர்களைக் கொண்டு சாந்தி செய்வித்து அரசனும் உபவாச விரதமிருந்தான். ஆயுதமில்லாமல் கிருஷ்ணனும் பீமார்ச்சுனர்களும் அரண்மனைக்குள் பிரவேசித்தார்கள். ஜராசந்தன் யாரோ உயர் குலத்து அதிதிகள் வந்தார்கள் என்று எதிர் கொண்டு அழைத்து வழக்கப்படி மரியாதை செய்து, ''சுவாகதம்'' என்றான். பேசினால் பொய் சொல்ல வேண்டி நேரிடும் என்று அதர்மத்துக்குப் பயந்து பீமனும் அர்ச்சுனனும் தங்கள் எண்ணத்தை வெளிப்படுத்தாமல் மௌனமாக இருந்தார்கள்.

கிருஷ்ணன், அரசனுக்குச் சமாதானமாக, ''இவர்கள் இருவரும் இப்போது விரதம் எடுத்துக் கொண்டிருக்கிற காரணத்தால் பேசவில்லை. நடு இரவு ஆன பிறகுதான் பேச முடியும்'' என்றான்.

ஜராசந்தன் அவர்களைத் தன் யாக சாலையில் இருக்கச் செய்து தன் மாளிகைக்குச் சென்றான்.

பிறகு ஜராசந்தன் நடு இரவில் வந்து மறுபடியும் அவர்களைக் கண்டான். எந்த வேளையானாலும் உயர்குலத்தைச் சேர்ந்த சநாதனர்களை அவர்கள் சௌகரியப்படி கண்டு பேசுவது ஜராசந்தனுடைய வழக்கம். ஆகையால் நடுநிசியில் வந்து தனக்காகக் காத்திருந்த அதிதிகளைக் கண்டு விசாரிப்பதற்காக வந்தான். அவர்களுடைய நடத்தையைக் கண்டு ஜராசந்தனுக்குச் சந்தேகம் தோன்றிற்று. அதன் பின் கைகளில் வில்லின் நாண் உரைத்த காய்ப்புக்களையும் மற்ற க்ஷத்திரியச் சின்னங்களையும் கண்டு கொண்டான்.

'' உண்மையைச் சொல்லுங்கள் '' என்று ஜராசந்தன் கேட்க, அவர்களும், ''நாங்கள் உன் சத்துருக்கள். உடனே யுத்தத்துக்கு ஆயத்தமாவாய்! எங்கள் மூவரில் யாருடன் வேண்டுமானாலும் உன் இஷ்டப்படி தீர்மானித்துச் சண்டை செய்யலாம்'' என்றார்கள்.

வந்தவர்கள் மூவரும் யார் என்று தெரிந்து கொண்ட பின் ஜராசந்தன், ''கிருஷ்ணா! நீ இடையர் குலத்தில் பிறந்தவன். அர்ச்சுனனோ சிறுவனாக இருக்கிறான். பீமன் தேக பலத்தில் புகழ் பெற்றவன். ஆகையால், அவனுடன் யுத்தம் கோருகிறேன்'' என்று சொல்லி, உடனே பீமனுடன் கைகளையே ஆயுதமாகக் கொண்டு மல் யுத்தம் செய்யும்படி அழைத்தான். பீமன் ஆயுதமின்றி நின்றபடியால் ஜராசந்தனும் அவ்வாறே ஆயுதங்கள் ஏதுமின்றி மல் யுத்தம் செய்யத் தீர்மானித்து அழைத்தான்.

பீமனும் ஜராசந்தனும் ஒருவரையொருவர் எட்டிப் பிடித்தும் தாக்கியும் பதின்மூன்று நாட்கள் ஆகாரமாவது ஓய்வாவது இல்லாமல் இரவும் பகலும் சண்டை செய்தார்கள். பதினான்காவது நாள் ஜராசந்தன் களைப்புற்றுத் தயங்கினான்.

''இதுதான் இவனை வதம் செய்ய வேண்டிய சமயம்'' என்று கிருஷ்ணன் பீமனைத் தூண்டினான். உடனே பீமன் ஜராசந்தனைத் தூக்கி நூறு முறை சுழற்றிக் கீழே போட்டுக் கால்களைப் பிடித்து உடலை இரண்டாகக் கிழித்துப் போட்டுக் கர்ஜித்தான்.

கிழிபட்ட இரண்டு பாகங்கள் உடனே தாமாக ஒன்று சேர்ந்து கொண்டன. ஜராசந்தன் மறுபடியும் உயிருடன் எழுந்து பீமனுடன் யுத்தத்தைத் தொடங்கினான்.

இதைக் கண்டு பீமன் ஏக்கமடைந்தான். என்ன செய்வது என்று தோன்றவில்லை. அச்சமயம் கிருஷ்ணன் ஒரு புல்லை எடுத்து இரண்டாகக் கிழித்துக் கால்மாற்றிப் போட்டுச் சமிக்ஞையாகக் காட்டினான். பீமசேனன் உடனே இதன் பொருளை அறிந்து கொண்டு மறுபடியும் ஜராசந்தனை இரண்டாகக் கிழித்து அப்படியே போடாமல் கால் மாற்றிப் போட்டு எறிந்தான்.

ஃ ஃ ஃ

சிறைப்பட்ட அரசர்களை விடுவித்து ஜராசந்தனுடைய குமாரன் சகாதேவனுக்கு இராஜ்யாபிஷேகம் செய்து விட்டுக் கிருஷ்ணனும் பீமார்ச்சுனர்களும் ஊர் திரும்பினார்கள்.

அதன் பின் பாண்டவர்களை எதிர்ப்பவர்கள் யாரும் இல்லாமல் திக்விஜயம் செய்து ராஜசூய யாகத்தைச் சிறப்பாக நடத்தி வைத்தார்கள். யுதிஷ்டிரன் ராஜாதிராஜன் என்கிற பதவியை அடைந்தான். அப்போது கூடிய ராஜசபையில்தான் அவமரியாதையாக நடந்துகொண்ட சிசுபாலன், கிருஷ்ணனால் கொல்லப்பட்டான். **(தொடரும்)**



# காஞ்சி ஜகத்குரு

## மிஸ் யுஜீனியா போர்கினி

[இக்கட்டுரை ஆசிரியை இத்தாலி நாட்டுப் பெண்மணி. தென் அமெரிக்காவிலுள்ள போனஸ் அயர்ஸில் வசிப்பவர். உலகச் சுற்றுலா வழிகாட்டியாகப் பணியாற்றுபவர்.]

**கா**ஞ்சி காமகோடி பீடத்தின் புனித ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் என்பவர் யார்? பொதுவாக மனிதர் என்றும் பொருள் கொள்கிறோமே அப்படிப்பட்ட மனிதரா அவர்? அல்லவே அல்ல. அவரது சந்நிதியின் முன் நான் எப்போது நின்றாலும் சரி, அல்லது அவரை நான் எப்போது ஸ்மரித்தாலும் சரி, அவரை ஒரு மனித உருவமாகப் பார்ப்பதில்லை. ஓர் ஒளியாகவே அவரைப் பார்க்கிறேன். மதுரையைச் சேர்ந்த என் மதிப்புக்குரிய நண்பர்கள் முதன் முதலில் அவரது சந்நிதிக்கு என்னை அழைத்துச் சென்ற நாள் முதல் அவரை இவ்வாறு ஒளியாகவே கண்டு வருகிறேன். அவர் முக்கியமாக ஜோதியாலேயே ஆக்கப்பட்டவர் என்று கண்டேன். பல சமயங்களில் தீபத்தின் கொழுந்து போலவே அவர் ஓங்கி வளருவதையும் குறுகுவதையும் கண்டு திக்பிரமை கொண்டிருக்கிறேன். இப்படியோர் அசாதாரண வியக்தியை நான் ஒருபோதும் கண்டதில்லை.

முதலில் நான் அவரைக் கண்டபோது மதுரைக்கருகேயுள்ள இளையாற்றங்குடியில், ரமணீயமான ஆலயத்துக்கருகே அவர் முகாமிட்டிருந்தார். அங்கு நான் மூன்று அல்லது நான்கு தினங்கள் தங்கினேன். எனினும், அவரது உருவ அமைப்பை நிர்ணயிக்க இயலாமலே தான் அங்கிருந்து புறப்பட்டேன். மெழுகில் வார்த்ததுபோல் அவரது உருவ அங்கங்கள் எப்போதும் மாறிக்கொண்டு இருப்பதாகத் தோன்றியது. அவர் நல்ல உயரமாக இருப்பதாகவே அப்போது என் மனத்தில் பதிந்திருந்தது !

அடுத்துப் பல முறை அவரை நான் சென்றடைந்த போது எனக்கு இன்னோர் அதிசய அநுபவம் உண்டாயிற்று. அவர் தமது ஜோதியைத் திடீரென்று ஏதோ ஒரு விதத்தில் அணைத்துக் கொண்டுவிட முடிகிறது—ஸ்விட்ச்சைக் கிழே தள்ளித் தீபத்தை அணைப்பதுபோல் அவர் ஏதோ செய்கிறார் என்று கண்டேன். இம்மாதிரிச் சமயங்களில் நம்மில் எல்லோரையும் போல அவரது பௌதிகமான தோற்றத்தையும் பார்க்க முடிந்தது. இப்படிப் பார்க்கும் போது அவர் உயரமானவரல்ல, சிறிய உருவத்தினரே என்று தெரிந்தது. நுட்பமான மேனி படைத்தவர் என்றும் தெரிந்தது. ஆனால் குருவின் உடம்பு என்பது என்ன? ஆன்மாவைத் தன் உள்ளே வாங்கிக் கொண்டு, உள்ளே இருப்பது வெளியே தெரிகிற ஸ்படிகம் போன்ற ஒன்றுதான் குருவின் மேனி என்று நான் நேரடி அநுபவத்தின் மூலம் நிச்சயமாகக் கண்டுகொண்டுவிட்டேன்.

நம்முடைய உள்ளம் அதிகம் ஆடாமல் அசையாமல் இருந்து விட்டால் போதும், குரு என்ற ஒருவரைச் சுற்றிப் பல மைல்களுக்கு ஒரு விசேஷமான சாந்திச் சூழலை அநுபவிக்க முடியும். அம்மாதிரி சூழலுக்கு வந்தாலே நாம், ''இந்தப் பிராந்தியத்தில் எங்கோ ஒரு மகாத்மா இருக்க வேண்டும். அவரைக் கண்டு, அவர் பாதத்தில் விழ



வேண்டும்'' என்று சொல்லிக் கொள்ளலாம். இவ்வாறு நாம் சூழலை வைத்தே மகானின் இருப்பை அநுமானிக்க முடியும் என்று நான் நிச்சயமாகச் சொல்வதற்குக் காரணம், ஆசாரிய சுவாமிகள் ஒருவரது அண்மையில் இருக்கும்போது என்னாலேயே அவரது சக்தி வாய்ந்த ஆன்ம அலையை உணர முடிந்ததுதான். அவர் ஓரிடத்தில் இருக்கிறார் என்பதற்கு நான் அவரது ரூபத்தையே தரிசித்தாக வேண்டும் என்பதில்லை. என்றாலும் அவர் இருக்குமிடத்திலும் எல்லாம் சர்வ சாதாரணமாக நடப்பது போலவே தோன்றும். மக்கள் வருவதும் போவதுமாய் இருப்

பார்கள்; குழந்தைகள் சிரித்து விளையாடும். காலம் போய்க் கொண்டே இருக்கும். ஆனாலும் ஏதோ ஒரு விசித்திரமான விதத்தில் அங்கு எல்லாம் 'வித்தியாசமாக' இருக்கின்றன. மனம் அசையாமல் இருக்கிறது; காலம் அசையாமல் இருக்கிறது; நிகழ்ச்சிகளுக்குப் பொருளே இல்லாமல் போகிறது.

அவரது முகாமில் இருக்கையில் ஒரு சமயம் நான் நன்றாக விழுந்து அடிபட்டுக் கொண்டேன். கால் உடைந்தே விட்டது என்று நினைத்தேன். கால் உடைந்துவிடவில்லைதான். என்றாலும் உடைந்ததற்குச் சமமாக ஏதோ ஆகியிருந்தது. அன்றிரவு பயங்கரமாகக் கழிந்தது. இடதுபுற விலா எலும்புகளிலிருந்து இடது கால் விரல்வரை உள்ளுக்குள்ளே எல்லாம் கூழாகியிருப்பது போலிருந்தது. என் கையை அழுத்தமாகக் கடித்துக் கொண்டு, விடியும்வரை வலியில் அரற்றிக் கொண்டிருந்தேன்.

சந்தர்ப்பம் துளிக்கூடச் சரியில்லை. பக்கத்தில் பல மைல்களுக்கு நகரம் எதுவுமே கிடையாது. தமிழகத்தின் கிராமப்புறத்தில் இன்ன இடம் என்றே குறிப்பிட முடியாமல் தன்னை இழந்து கொண்டிருக்கும் ஓரிடத்தில் ஆற்றுக்கும் கடலுக்கும் நடுவே உள்ள ஒரு மனோகரமான தென்னஞ் சோலையில் நான் கிடக்கிறேன். அப்போது ஆசாரிய சுவாமிகள் பக்தர் ஒருவரது தோட்டத்தில் தங்கி அதற்குக் கௌரவம் தந்துகொண்டிருந்தார். நானும் அங்கே இருக்க அநுமதி அளித்தார். ஆனால் எனக்குப் புறப்படக் காலம் வந்து விட்டது. ஐரோப்பாவில் எனக்கு முக்கியமான ஓர் அலுவல் இருந்தது. அதைத் தள்ளிப் போடுவதற்கில்லை. அடிபட்டுக் கொண்ட அன்று காலைதான் நான் புறப்படுவதற்கு ஆசாரிய சுவாமிகளின் அநுமதி கேட்டிருந்தேன். ஆனால் இப்போது நான் எப்படிப் புறப்படுவது? பக்கத்தில் டாக்டர் யாரும் கிடையாது. என்ன செய்யப் போகிறேன்?

இதையெல்லாம் நினைத்துக் குழம்பாமல் என்னை அமைதிப்படுத்திக் கொண்டேன். பூரண அமைதியும் வாய்த்தது. பயங்கரமான உடலுபாதை இருந்தது வாஸ்தவம். ஆனால் நாம் பரம சாந்தமான இடத்தில் இருக்கிறோம், சர்வ ஜாக்கிரதையாக இருக்கிறோம் என்ற உணர்வு ஏற்பட்டது. எல்லாம் சரியாகிவிடும் என்ற நம்பிக்கை பூரணமாக ஏற்பட்டது. கண்ணாலும் காணவொண்ணாத ஆசாரிய சுவாமிகளுடைய சாந்நித்தியத்தின் வலுவான, கதகதப்பான அலைகளை என்னால் உணர முடிந்தது. பைபிள் துதி ஒன்றின் வாக்குகள் என் மனத்தில் ஓடியது இன்னும் நினைவிலிருக்கிறது: ''ஆண்டவன் தன் இறகுகளால் உன்னை அணைத்துக் கொள்வான்; அவனது சிறகுக்குள்ளே நீ சுகமேயிருப்பாய்!''

ஆசாரிய சுவாமிகளின் இறகின் கீழ் நான் ஜாக்கிரதையாகச் சுகமே இருந்தேன்.

விடியும் வேளையில் நான் தூங்கிப் போனேன். எழுந்திருக்கும்போது எப்போதும்போல் என் கால் ஆரோக்கியமாக இருந்தது. அன்றைக்கே நான் எதுவும் நடவாதது போல் சுவாமிகளின் முன்னால் என் கால்களைக் குறுக்கே மடித்துப் போட்டுச் சப்பணமிட்டமர்ந்தேன். அவர் என் பிரயாணத்துக்கு ஆசி வழங்கினார். ஐரோப்பாவில் நான் மிகவும் முக்கியமாகக் கருதிய காரியம் முற்றிலும் நன்றாக நிறைவேறும் என்று புரிந்து கொண்டு புறப்பட்டேன். அப்படியே நடந்தது. நடக்காமல்? தாயின் கை அணைப்பில் உள்ள குழந்தைக்குத் தீங்கு வருமா என்ன? குருவின் இறகுகளால் அணைத்து மூடப்பட்ட நம்மில் எவருக்குமே தவறாக எது நடக்க முடியும்?

---

தி. நகர் ஹிந்து தர்ம மன்றத்தினர் வெளியிட்டுள்ள 'ஆசாரிய சுவாமிகளின் பீடாரோஹண மணி விழா சர்வதேச மல'ரில் இக்கட்டுரையின் ஆங்கில மூலம் வெளியாகியுள்ளது. ஆங்கிலத்திலும், தமிழிலும் இதுபோல் உள்நாட்டுப் பக்தர்களும் வெளிநாட்டுப் பக்தர்களும் எழுதிய பல உருக்கமான அரிய கட்டுரைகளும், அருமையான புகைப்படங்களும், ஸ்ரீ பெரியவர்களின் பல மணிவாக்குகளும் அடங்கிய இம்மலர் கிடைக்குமிடம் : ஹிந்து தர்மசங்கம், 1-23, ராமசுவாமி தெரு, தி. நகர், சென்னை — 17. விலை : ரூ. 3.00.

# ஆகாச வெடி

*''ரயில் பிரயாணத்தில் தாங்கள் வைத்திருந்த நம்பிக்கையை மக்கள் இழக்கத் தலைப்பட்டு விட்டனர்.''*

— லோக சபையில் ஓர் அங்கத்தினர்

புகார் உண்மைதான், நம்பிக்கை இருந்தால், சற்று எழுந்து செல்லும் போதெல்லாம் தன் இடத்தில் துண்டை விரித்துப் போட்டு விட்டுப் போவாரா என்று கூறுகிறார் பக்கத்தில் நின்றுகொண்டிருக்கும் பிரயாணி ஒருவர்.

ஃ ஃ ஃ

*''சற்றுத் தாராளமான விலை பேரத்தில், இந்தியாவிடமிருந்து சோவியத் ரஷ்யா பத்து லட்சம் ஜதை தரமான மிதியடிகள் வாங்க முன்வந்திருக்கிறது.''*

விலை நமது கையைக் கடிக்காத வரையில் தயாராகும் மிதியடிகளும் அவர்களுடைய காலைக் கடிக்காது என்பதைக் கூறவா வேண்டும் ?

*''ஸ்பெஷல் தாசில்தாரின் வேண்டுகோளுக்கிணங்க மதுராந்தகம் ஹோட்டல் உரிமையாளர்கள் தின்பண்டங்களின் விலையைக் குறைக்க முன்வந்திருக்கின்றனர்.''* —செய்தி

மெனு போர்டில், ''இன்றைய ஸ்பெஷல்— விலை குறைப்பு'' என்று குறிப்பிட்டிருந்தால் ஆச்சரியமில்லை!

ஃ ஃ ஃ

*''காலையில் அஸ்திவாரக்கல் நாட்டு விழா; மாலையில் புது வீடு திறப்பு விழா! — இவ்வாறு கோவையில் திரு ஜி. டி. நாயுடு தயாரித்த மலிவு வீடு கட்டும் விழா ஒன்று நடந்தேறிற்று.''*

— செய்தி

இந்த மலிவு வீடுகளுக்குக் கிராக்கி அதிகரித்துப் பொழுது விடிவதற்குள் அவை பறந்து விடுமானால்கூட ஆச்சரியம் இல்லை.

## கலிங்கா பிலிக்ரி

### காதணிகளை அணியுங்கள்

தாதுரா, பிரேமதினி, ரோஸ், லலித், ஜுயி, விஜயா ஆகிய டிசைன்களில் கிடைக்கின்றன.

- நுண்ணிய வேலைப்பாடமைந்த வெள்ளி நகைகள்
- இன்றைய நாகரிகத்தைப் பிரதிபலிக்கும் ஏராளமான டிசைன்கள்
- ஒவ்வொரு நகையும் ஒரு கலைச்சின்னம்

எல்லா நகைகளும் 92.5% சுத்த வெள்ளி அடங்கியவை. ஒவ்வொரு நகையிலும் அரசாங்கத்தால் அளிக்கப்பட்ட தர உத்திரவாத அடையாளச் சீட்டு இருக்கிறதா என்று பார்த்து வாங்கவும்.




**தலைமை ஆபீஸ் & தொழிற்சாலை :**

ஸ்ரீ கலிங்கா, கோவாபரேடிவ் ஸில்வர் பிலிக்ரீ ஒர்க்ஸ் லிமிடெட்

மதுபட்னு. கட்டாக்-3 ஒரிஸ்ஸா.

சென்னையில் கீழ்க்கண்ட இடங்களில் கிடைக்கின்றன.

- கலிங்கா பிலிக்ரி ஒர்க்ஸ் எம்போரியம்
  2/47A, ராயப்பேட்டை ஹைரோடு, சென்னை-4
  ஸபையர் தியேட்டர் பில்டிங், மவுண்ட் ரோடு, சென்னை-6
- காமதேனு சூப்பர் மார்க்கெட்
  தேனாம்பேட்டை, சென்னை-18

EP-KFW.4

# இப்பொழுது II வகுப்புப் பெட்டிகளிலும் தூங்கும் வசதி!



இணைப்புப் பெட்டித் தொழிற்சாலை இது வரைத் தயாரித்துள்ள மொத்த ரயில் பெட்டிகள் ஆறுயிரத்துக்கும் அதிகமானவை. புத்தாண்டில் புதிய புதிய ரகப் பெட்டிகள் செய்ய ஆரம்பித்திருக்கும் எங்கள் நோக்கம் உங்கள் சுகமான, சௌகரியமான பிரயாணமே!

[II வகுப்புப் பெட்டி]

இணைப்புப் பெட்டித் தொழிற்சாலை, சென்னை-38

## தெய்வத்துக்கு அடுத்தபடி சுத்தம்

உங்கள் வீட்டைச் சுத்தமாக வைத்துக் கொள்ளப் பிரியப்படுவீர்களல்லவா? கட்டணம் செலுத்தி வாசம் செய்யும் தற்காலிக இல்லமான ரயில்வே கம்பார்ட்மெண்டையும் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டாமா? அது உங்களுக்குச் சொந்தமல்ல என்று கருதி அசுத்தப் படுத்தாதீர்கள். நீங்கள் அதற்குக் கட்டணம் செலுத்துகிறீர்கள். அதைத் தயாரிக்கவும், செவ்வனே பாதுகாப்பதற்கும் கட்டணம் செலுத்துகிறீர்கள். அதைத் துப்புரவு செய்யும் பணியாளர்களுக்காகவும் பணம் செலுத்துகிறீர்கள். எங்கே அந்தப் பணியாளர்கள் தென்பட்டாலும், அவர்கள் உதவியுடன் சுத்தமாக வைத்துக் கொள்ளுங்கள்.

பிளாட்பாரத்தில் வைக்கப்பட்டுள்ள குப்பைத் தொட்டிகளில், கழிவுப் பொருள்களையும், காகிதங்களையும் போடுங்கள்; ரயில்வே நிர்வாகம் உங்களுக்குச் சுத்தமான, சுகமான பிரயாண வசதியளிக்க, உதவுங்கள்.

...... வெளியிட்டோர்: **தக்ஷிண ரெயில்வே**

# 1. ஆருயிர் அன்னை

மணி ஏழடித்து விட்டது. நான்கு மணிக்கே கலகலப்புடன் விழித்தெழுந்துவிடும் உலகம் அது. உல்லாசத்தை உணர்த்தும் சீட்டியும், மன வேகத்தைச் சுட்டும் கூப்பாடுகளுமாய் விடுதி அறைகள் பரபரப்புற்றிருந்தன. விறுவிறுப்பான உலகத்தின் ஒட்டுறவு விலகி விட்டாற் போல் முதல் மாடியின் மூன்றாவது அறை மட்டும் ஒருக்களித்துச் சாத்திக் கிடந்தது. மூவர் வசிக்கும் அறை அது. இருவர் எழுந்து எப்போதோ தங்கள் கடமைகளைக் கவனிக்கச் சென்று விட்டிருந்தனர். ஒரு படுக்கை மட்டும் இன்னும் ஓய்வு பெறவில்லை. ஆம், அதில் தலையிலிருந்து கால் வரையில் போர்த்தியபடியே முனகலுடன் தன் நினைவின்றிப் படுத்திருந்தான் வசந்தன்.

கடந்த சில நாட்களாகவே அவனுக்குத் தன்னைச் சுற்றியிருந்த உலகத்தின் தொடர்பு துண்டித்து விட்டாற்போன்ற ஒரு பிரமை. அவனுக்கு மனமெல்லாம் நொந்து புண்ணாகிக் கிடந்தது. எனவே, அதன் ஜீவ இசை தடம் புரண்டிருந்தது. அடிக்கொரு முறை வேதனை மூச்சை வடித்த



அவனுக்கு, இதம் கூறத் திவாகரன் மட்டும் இல்லாதிருந்தால்...!...?

''வசந்தன்! என்னப்பா இது? இன்னுமா நீ எழவில்லை?'' என்று கேட்டுக் கொண்டே வந்தது திவாகரன்தான்.

பதில் வராமல் போகவே, திவாகர் அவசரமாக வசந்தனின் போர்வையை நீக்கினான். பளபளப்பான அனல் முகம், சோர்ந்து தொய்ந்த கண்ணிமைகள், வறண்ட உதடுகள், இவற்றைக் கண்ட திவாகர் சட்டென்று வசந்தனின் மணிக்கட்டைப் பற்றிநாடித் துடிப்பைப் பார்த்தான். பிறகு, அவன் தோள்களை மெதுவாகத் தொட்டு எழுப்பினான். வசந்தன் மிகுந்த பிரயாசையுடன் கண் விழித்தான். கண்களின் சிவப்பில் வெய்யில் கூசியது. வெளியுலகின் வெளிச்சம் இனம் புரியா வெறுப்பைத் தரவே, மறுபடியும் கண் மூடினான் அவன்.



''காலையில் நான் விடுதிக்கு வரவேயில்லை. இரவு 'டியூட்டி'யில் 'வார்டி'லிருந்த ஒரு பெண்ணுக்குக் கொஞ்சம் 'சீரியஸா'கி விடவே இத்தனை நேரமும் தங்கிவிட்டு வந்தேன். மறுபடியும் ஓ. பி. அட்டெண்ட் பண்ண வேண்டுமே என்று ஓட வந்தேன். பேஷண்டுக்குப் பரவாயில்லை......''

''போதும், திவாகர்! என் 'பேஷன்ஸ்' போய்விடும் போல் உள்ளது....'' என்று தன் பொறுமையின்மையைக் காட்டிக் கொண்டான் வசந்தன்.

திவாகரன் வசந்தனை விநோதமாகப் பார்த்தான். பிறகு தன் கையிலிருந்த ரொட்டியையும், பாலையும் அவன் அருகே தள்ளி, ''வாய் கொப்புளித்து




விட்டுப் பிடித்தவரையில் சாப்பிடு'' என்று சொன்னான்.

வசந்தன் எழுந்து முகம் கழுவும் தொட்டியருகே சென்று பற்பசையைக் கையில் எடுத்துத் துலக்கினான். முகம் கழுவிவிட்டு மறுபடியும் கட்டிலில் வந்து உட்கார்ந்து ரொட்டியைப் பிட்டுப் பாலில் தோய்த்து வாயிலிட்டான். ''ஆமாம், திவாகர்! நான் சாப்பிடாதது உனக்கு எப்படித் தெரியும்?'' என்றான் வியப்புடன்.

''மெஸ்ஸில் நுழையும் போதே உன் அன்புக்குரிய ஸர்வர் சோலை ஓடி வந்தான். 'எங்கே, வசந்தன் சார்?' என்றான். எனவே, உனக்குரியதைச் சுமந்துகொண்டு ஓடி வந்தேன். கிடக்கட்டும். ஒரு நோயாளியின் சாதாரண நிலையை வினவினால்கூட நொந்து விடும் நீ. ஏது ஆபத்தான நோயாளியைக்கூட அலட்சியப்படுத்தி விட்டாய்?'' என்றான் திவாகரன்.

வசந்தன் ரொட்டி தோய்த்து மிகுந்த பாலைப் பருகிவிட்டுக் கைகளைக் கழுவிக் கொண்டான். தன் மேஜையருகேயிருந்த ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் படத்தருகே சென்று வணங்கி விட்டுக் கட்டிலில் வந்து அமர்ந்தான். ''திவாகர்! கண் விழித்ததும் பரமஹம்ஸரைத் தொழாமல் நான் ஒரு நாள்கூட இருந்ததேயில்லை. இது என் அன்னை கற்றுத் தந்த பாடம். இதற்காக மற்றவர்களின் கேலிக்கு நான் ஆளானதும் உண்டு. இன்று.... இன்றுதான் நான் தவறிவிட்டேன். அந்த நினைவே மங்கி விட்டது. எந்த அன்னை கற்றுத் தந்த பாடமோ, அந்த அன்னை நினைவில் சூழ்ந்த இறுக்கம் மறதியைத் தந்துவிட்டது.... இது ஏதாவது கெட்டதற்கு அறிகுறியோ?'' என்று கேட்டான்.

திவாகரன் மெதுவாகச் சிரித்தான். ''முதலிலேயே உணர்ச்சிமிக்க இதயம் உனக்கு. எதையும் பெரிதுபண்ணி அலட்டிக் கொள்வாய். இப்போது நெஞ்சுறுதியற்ற பலஹீனம்! மனக் குழப்பம் மிகுந்தாலே இப்படித்தான். செய்ததற்கும் வருந்துவோம், செய்

யாததற்கும் வருந்துவோம். பேசாமல் ஓய்வாக இரு'' என்றான்.

''உண்மைதான், திவாகர்! என் குழப்பத்துக்கு ஓய்வு கிடையாது. கடந்த மூன்று தினங்களாக அம்மாவைச் சானடோரியத்தில் சேர்க்க நான் பட்டபாடு போதும். நேற்றுக் காலை அம்மா அலுப்புத் தாளாமல் பெஞ்சில் படுத்து விட்டாள். 'என்னை எப்பாடுபட்டாவது சேர்த்து விட்டுப் போயிடுடா ராஜா ; என்னால் இனியும் நடந்து நாளையும் இங்கே வர முடியாது' என்று தீனக் குரலில் கூறினாள். அதை நினைத்தாலே என் நெஞ்சம் துடிக்கிறது, திவாகர்.''

''நேற்றுத்தான் அட்மிஷன் கிடைத்து அம்மாவைச் சானடோரியத்தில் சேர்த்து விட்டாயே; இனி பூரண ஓய்வும், நல்ல சிகிச்சையும் கிட்டிவிடும். பின்னும் அதையே எண்ணுவானேன்? அம்மாவுக்கு இனி சரியாகிவிடும், கவலைப்படாதே!''

வசந்தன் விரக்தியாகச் சிரித்தான். ''நானும் ஒரு சாதாரண மாணவனாக இருந்தால், நேற்றோடு அம்மாவை ஆஸ்பத்திரியில் சேர்த்த திருப்தியோடு மனநிறைவுற்றிருப்பேன். நான் மருத்துவமே பயில்கிறேனே. எக்ஸ்ரேயின் நெளிவு சுளிவுகளும் இதயத்தின் துடிப்புக்களும் எனக்கு அம்மாவின் உண்மையான உருவை எடுத்துக் காட்டுகின்றனவே!'' என்றான்.

வசந்தனின் துயரம் பேசி மாளக் கூடியதா? திவாகரன் வசந்தனின் முதுகுக்கு இதமாகத் தலையணையை நகர்த்தி வைத்து விட்டு, ''நான் சாப்பிட்டு விட்டு வார்டுக்குக் கிளம்புகிறேன், வசந்த்!'' என்றான்.

''ஓ! நீ இன்னும் சாப்பிடவில்லையா, திவாகர்? வர வரச் சுயநலமும், சுய துக்கமும்தான் எனக்குப் பெரிதாகி விட்டன! போய் வா, திவாகர்!'' என்று விடை கொடுத்தான் வசந்தன்.

திவாகரனின் செருப்பொலிகள் தேய்ந்து மங்கிவிட்டன. மாடிப்படியோரமிருந்த டெலிபோனில் யாரோ மிக மெல்லிய குரலில் 'யெஸ் டார்லிங், யெஸ் டார்லிங்' என்று கூறிக்கொண்டேயிருப்பது தெரிந்தது. ஓ! சங்கரன் லீலாவோடு பேசுகிறான் போலிருக்கிறது! மற்ற நேரமாக இருந்தால் வசந்தன்கூட, 'என்னடாப்பா, 'யெஸ் மேன்?' இத்தனை நேரமும் நீ ஆமோதிக்கும்படியாகவே அவன் என்னத்தைப் பேசுகிறான்?' என்று வழக்கமான கேலியைத் தொடர்ந்திருப்பான்.

முன்பெல்லாம் வசந்தன் குதூகலமான வாலிபனாகத்தான் இருந்தான். அவன் அநாயாசமாக உதிர்க்கும் புதுப் புது நகைச்சுவைகளை மற்றவர்கள் ரசிக்கும்போது அவன் வேடிக்கைகள் தொடரும். ஒரு முறை வெடித்த ஹாஸ்ய வெடியை மறுமுறை கூறி அவர்கள் 'ட்ரில்' 'போர்' 'படு போர்' என்று கேலி பேச இடம் வைத்ததில்லை அவன். கையில் 'ஸ்டெத்'தைத் தூக்கிக் கொண்டு உல்லாசமாகச் சுழற்றியவாறே செல்லும் நூற்றுக் கணக்கான மாணவர்களில் ஒருவனாக வசந்தன் மருத்துவக் கல்லூரி விடுதியில் சேர்ந்தபொழுது ஒரு புதிய உலகமே அறிமுகமாகியது. புதிய மாணவர்களைப் பழைய மாணவர்கள் படுத்தும் பாடு கொஞ்சநஞ்சமா ?

அவ்வளவுக்கும் ஈடு கொடுத்து நின்ற வசந்தன் முதல் வருட முடிவில் ஊருக்குக் கிளம்பியபோது சென்னையில் உயர்ந்த பட்டுப் புடவை ஒன்று விலைக்கு வாங்கினான். யாருக்கு? தன் அன்னைக்கு. ஆனால் அவன் சொற்களைச் சக மாணவர்கள் யாரும் உண்மையென நம்பத் தயாராக இல்லை. 'இந்தக் கலியுகத்தில் ஒரு நாகரிக வாலிபன் போயும் போயும் தனது அன்னைக்காகவா புடவை எடுப்பான்?' என்பது அவர்கள் வாதம்! கடைசியில் வசந்தன் விடுதித் தையற்காரனை அழைத்து வந்து கெஜக் கோலால் புடவை ஒன்பது கெஜம் என்பதை நிரூபித்த பிறகுதான் விட்டார்கள். இந்த அமர்க்களத்தில் தன் தங்கைக்காக எதுவுமே வாங்காதது புறப்படும் போதுதான் நினைவுக்கு வந்தது!

மருத்துவக் கல்லூரியிலிருந்து விடுமுறைக்குத் திரும்பி வந்த மகனைக் கண்டதும் செல்லம்மாவின் மகிழ்ச்சிக்கு ஓர் எல்லை இல்லை. அவன் தந்தை சீதாபதியோ எப்போதும் போலவே ஆழ்ந்த அமைதியான புன்னகையால் வரவேற்றார். தந்தையிடம் அவனுக்கு அன்பைவிடப் பக்தியும், பயமும் அதிகம். அன்னையிடமோ அவன் கண்டதெல்லாம் அன்பு, அன்பு, அன்பு தான் !

வசந்தனின் தங்கை கீதா உள்ளூரிலேயே மணமாகிக் குடும்பம் நடத்தி வந்தாள். பெரிய குடும்பத்தில் வாழ்க்கைப்பட்டதால் நாளொரு முறைகூட அவன் தாய் வீடு வர முடிந்ததில்லை.

''ஏனடா, வசந்த்! உன் தங்கை மணமாகிப் பிறர் வீட்டில் இருக்கிறாளே, அவன் நினைவில்லையா உனக்கு? ஒன்றுமே வாங்காதிருந்தாலும் சரி. எனக்கு

shilpi-MP.153

ப்ளேடோ குடும்பத்தின் புதிய பேனா இதுதான் — ப்ளேடோ 222





இந்தப் புதிய ப்ளேடோ 222 பேனாவை கையில் பிடித்துப் பாருங்கள். கையில் எவ்வளவு சுகமாக உட்காருகிறது; தொப்பியைச் சற்றே மேல்நோக்கி அழுத்தவும்—எழுதத் தயாராகச் சடுதியில் முன்வருகிறது—எழுதத் தொடங்குங்கள்—மெல்லிய நிப்பு வழவழவென்று நழுவிக் கொண்டே ஓடுகிறது—மூடப்பட்ட உதட்டில் மை கசிந்து ஊறுகிறது. அதன் தங்க நிற மூடியைப் பாருங்கள்—ரசாயன பூச்சு பூசப்பட்டது—துரு ஏறாது—எப்போதும் தங்க நிறமாகவே இருக்கக் கூடியது! பல வண்ணப் பேனாக்களிலிருந்து பிடித்த வண்ணத்தையும் மை ஊற்றும் லாகவத்தையும் தேர்ந்தெடுங்கள். என்ன விலை என்கிறீர்களா? வெறும் 5 ரூபாய் 50 காசுதான்.



**plato 222** a mhatre product




பூரண விநியோகஸ்தர்கள் :

பெஸ்ட் பவுண்டன் பென் டெப்போ :

79, தேவ்கரன் மான்ஷன், பிரின்ஸஸ் தெரு, பம்பாய்-2

வாங்கிவிட்டு அவளுக்கு எதுவும் வாங்கி வரவில்லையென்றால், அவள் கணவன் வீட்டினர் என்ன நினைப்பார்கள்? அவளுக்கும் உன்னைக் குறித்து வருத்தமாக இராதா? இந்தப் புடவையைக் கீதாவுக்குத் தந்து விடுகிறேன்.'' தனக்கு வந்திருக்கும் புடவையைப் பார்த்துத் தாயார் சொன்னாள். இதைக் கேட்டபொழுது வசந்தனுக்கும் கீதாவின் திருமணத்தை ஒட்டிய நிகழ்ச்சி ஒன்று நினைவுக்கு வந்தது.

ஏழைமையின் பிடியில் சீதாபதி அவதிப்பட்டபோதுதான் விசுவநாதன் கீதாவை மணந்து கொண்டார். ஆனாலும் கொஞ்சமும் பண்பில்லாமல் சீர்வரிசைத் தகராறு செய்து கொஞ்சநாள் கீதாவை வீட்டுக்கு அழைக்காமலேகூட இருந்தார்கள். சீதாபதி அதைப் பொருட்படுத்தாமல் இருந்த போது, வாழ வேண்டிய பெண்ணை வீட்டில் வைத்துக் கொண்டு வதைக்கும் கொடுமையைச் சகிக்க மாட்டாமல் செல்லம்மா நகைகள் என்ற பெயரில் தன் கழுத்திலிருந்த தாலிச் சரட்டைக் கழற்றிவிட்டு மஞ்சள் நூல் முடிந்தாள். கண் கொட்டாமல் அந்தக் கொடுமையைக் கண்ட வசந்தனின் கோபம் கீதாவின் மீது பொங்கியது. ''இப்படியாகிலும் நீ அந்தக் கணவனுடன் வாழ வேண்டுமா ?'' என்று சீறினான். கீதா தேம்பியவாறே அம்மாவின் சங்கிலியைப் பெற்றுக் கொள்ள மறுத்தாள். ''எனக்குத் தெரியும், நீ போடா! வாழ வேண்டிய பெண்ணை வீட்டில் வைத்துக் கொண்டு எனக்கு நகையா கேட்கிறது? வசந்த்! என் கோபத்தைக் கிளறாதே ! நீ சம்பாதித்துச் செய்து போடு ; இப்போது வாயால் எதுவும் பேசாதே!'' என்று கடிந்தாள்.

வசந்தன் வாயடைத்துப் போனான். கீதா கணவன் வீடு சென்றாள். இன்று அவன் அங்கு சென்றால் ஏக உபசாரங்கள் செய்கிறார்கள்!

அத்தகைய அன்பே உருவான அன்னையின் உடம்பு ஐந்து வருடங்களில் எப்படியாகிவிட்டது! இத்தனைக்கும் உடம்பு இப்படி என்று ஒரு கடிதம் அவனுக்கு வராது. 'நலம், நலம்' என்றே கடிதம் வரும். விடுமுறையில் அவன் ஊர் சென்றிருக்கும்போது கிராமத்தில் எத்தனையோ பேர் தலைவலி, கால் வலி என்று அவனிடம் காட்ட வருவார்கள். செல்லம்மாளை 'ஹெல்த் செக்கப்' செய்யக்கூட அனுமதி தரவில்லை அவள். ஓரிரு முறை ஜுரத்தால் அவதியுற்று இருமியபோது அவன் ஸ்டெத்தைக் கையில் எடுத்தால் போதும் ; கோபமாகக் கடிந்துகொண்டு, 'எனக்கு ஒன்றுமில்லை; உஷ்ணத்தால் இருமல், ஜலதோஷத்தால் ஜுரம்' என்று ஏதேதோ சாக்குப் போக்குச் சொல்லி விடுவாள்.

இவ்வாண்டு கிராமத்துக்குச் சென்றவன், கண்கள் குழி விழுந்து உடம்பின் சதைப் பிடிப்புக் கரைந்து, தாடைகள் மெலிந்து நின்ற அன்னையைக் கண்டபோது பதறித் துடித்து விட்டான். உடனடியாகச் சேத்துப்பட்டுக்கு அழைத்து வந்தான். 'அட்வான்ஸ்டு கேஸ்' என்று அறிந்த போது அவன் அயர்ந்துவிட்டான். எக்ஸ்ரேயை நோக்கிய அவன் கண்கள் இருண்டன. நாடித் துடிப்பைப் பரிசோதித்த போது அவன் நாடித் துடிப்பே திசை மாறியது. 'இனி மேல்.....?' என்று எதிர்காலத்தை எண்ணும்போதே மங்கலான, குழப்பமான கேள்விக்குறிகள் எழுந்தன.

**"சா**ர்! உங்களுக்கு போன் வந்திருக்கு, சார் !''

''எனக்கா?'' வசந்தன் துள்ளி எழுந்தான். உடலின் களைப்புப் போன இடம் தெரியவில்லை. ரிசீவரைப் பற்றி அவசரமாக, ''ஹலோ!'' என்றான்.

அம்மா பேசினாள். அவளே பேசவே அவனுக்கு நிம்மதியாயிருந்தது.

மாடிப் படியைக் கடக்கும்போது மனத்தில் கொஞ்சம் தெளிவு பூத்திருந்தது. நினைவில் நிறைந்திருந்த பயங்கரக் காட்சிகள் மறைந்து, அப்போது நடந்த சம்பாஷணையின் இனிமையில் சொக்கி நின்றது.

''வசந்தன்! ஒரு மகிழ்ச்சிச் செய்தி. இன்றிரவு நாம் பிரசவ ஆஸ்பத்திரிக்குக் 'காம்ப்' போகிறோமில்லையா ? எனக்கு 'பார்ட்னர்' லீலா. உனக்கு 'பார்ட்னர்'...! சீலியா ! வெரி லக்கி மேன். கங்க்ராஜுலேஷன்ஸ்!'' வராந்தாவின் மறுகோடியிலிருந்து கூச்சலிட்டவாறே சங்கரன் அவனை நெருங்கி வந்தான்.

வசந்தன் யோசனையோடு ஆரப் பார்த்தான். அன்றிரவே பிரசவ ஆஸ்பத்திரி 'காம்ப்' என்பது அவனுக்குப் பிடிக்காத செய்தி.

''என்னடா வசந்த் இது! ஒரு பெண் துணை கிடைத்திருக்கிறது. அதுவும் சீலியாவின் துணை. இப்படி முகத்தைத் தொங்கப் போட்டுக் கொள்கிறாயேடா பாவி !'' என்ற சங்கரனுக்கு, ஏதும் பதில் சொல்லாமல் வசந்தன் தன் அறைக்கு வந்து இரண்டொரு நிஜார்கள், சட்டைகள்,

'ஓவர் கோட்டு'கள் முதலியவற்றை எடுத்து ஹோல்டாலில் சுற்றி வைத்து விட்டுக் குளிக்கப் புறப்பட்டான், கையில் சோப்பும், டவலுமாக. அன்றோடு முடியப் போகும் தனது விடுமுறையை அடுத்து, வரப் போகும் வேலை நாட்களின் பளு அவன் மனத்தில் கனத்தது. ஆனாலும் அதையும் மீறும் சுறுசுறுப்போடு குளித்து முடித்து விட்டு உடை மாற்றிக் கொண்டு உணவு மேசையை நாடும் போது மணி ஒன்றடித்து விட்டது. திவாகரனும் அவன் அருகில் வந்து அமர்ந்தான்.

''திவாகர்! உணவருந்தி விட்டுச் சானடோரியத்துக்குப் போய் வருகிறேன்! இனமும் சென்று பார்க்க முடியாது போலிருக்கிறது. ஏனெனில், பிரசவ ஆஸ்பத்திரி 'டியூட்டி' வந்து விட்டது!'' என்ற வசந்தன், ''ஏன் திவாகர்! அம்மாவை நான் சென்று பார்க்க முடியாத நாட்களில் உனக்குப் போன் பண்ணி விடுகிறேன். நீ போய்ப் பார்த்து விட்டு வருகிறாயா?'' என்று கேட்டான்.

''ஓ! அம்மாவைப் பார்க்கும் போது, நீ வரமுடியாத நாட்களில் நான் வருவேன் என்று சொல்லிவிட்டு வந்துவிடு!'' என்றான் திவாகரன்.

ஆறுதலான பேச்சு வசந்தனின் மனத்தை நிறைத்தது.

## 2. முதல் அனுபவம்

தாம்பரம் சானடோரியத்தில் மூன்று தினங்கள் அட்மிஷனுக்காக வந்து நின்று திரும்பியதனாலும், ஒரு பகல், ஓர் இரவு வார்டில் தங்கியதனாலும் செல்லம்மாவுக்கு எல்லா விஷயங்களும் தெளிவாகி விட்டன.

ஒரு மருத்துவக் கல்லூரி மாணவனின் தாயார் என்ற முறையில் எல்லோரும் அவளிடம் மரியாதை காட்டினார்கள். வசந்தன் டாக்டரிடம் நூறு தடவையாவது சொல்லியிருப்பான், அம்மாவைக் கவனித்துக் கொள்ளும் படி. மாலையில் மலையோரம் வரை நடக்கும்படி அன்னையிடம் கூறியவன், ''நாளை முதல் நான் பிரசவ ஆஸ்பத்திரிக்குப் போகிறேன். அதனால் நான்கு தினங்களுக்கு ஒரு முறைதான் வரமுடியும். இடையில் என் நண்பன் திவாகரன் வருவான்!'' என்று கூறி அன்னையிடம் விடைபெற்றான். அவன் புகைப் படத்தையும் அடையாளத்துக்காக அன்னையிடம் கொடுத்தான்.

அவன் மின்சார ரயிலைப் பிடித்து விடுதிக்கு வந்தபொழுது, பெட்டி படுக்கையெல்லாம் பிரசவ ஆஸ்பத்திரிக்குச் செல்லத் தயாராயிருந்த கல்லூரி பஸ்ஸில் அடுக்கப்பட்டிருந்தது. வசந்தன் 'மெஸ்'ஸுக்குப் போகவில்லை. பஸ்ஸில் ஏறிவிட்டான்.

புதிதாக இரண்டு மாத அநுபவத்துக்கெனத் தங்க வந்திருந்த ஹவுஸ் ஸர்ஜன்கள் அனைவரும் அந்தப் பெரிய ஹாலில் மொத்தத்துக்கும் கடை விரித்துப் படுக்கைகளை உதறிப் போட்டிருந்தனர். கட்டில்கள் இல்லாததால் அவரவர் போக்கில் பற்பல திசைகளில் படுக்கைகள் விரிக்கப்பட்டு, இரவு வேலையில்லாதோர் தூங்க ஆரம்பித்தனர். இரவு வேலை மேற்கொள்ள இருந்தோரில் சிலர் குளித்துக் கொண்டும், சிலர் உடைமாற்றிக் கொண்டுமிருந்தனர். வசந்தனுக்கு இரவு வேலை. மாடிக் கைப்பிடியோரம் நின்று கீழே பார்த்தான். அந்த இரவு வேளையில் கூட அங்கு பெண்களின் கூட்டம்! ரிக்ஷாக்களும் டாக்ஸிகளும் இறக்கி விட்டுப் போய்க் கொண்டிருந்தன.

வசந்தன் வெண்மையான தன் ஓவர்கோட்டில் ஒரு கையை மட்டும் விட்டுக் கொண்டு முதுகுப்புறம் மீதியும் தொங்க, கடிகாரத்தைப் பார்த்தவாறே படி இறங்கினான். வார்டுகளைக் கடக்கும்போது மெல்லிய விளக்கொளியில் நிதானமான அவன் ஸ்லிப்பர்கள் சத்தம் அவனுக்கே இதமாக இருந்தது. தனக்குரிய வார்டு வந்ததும் அறிவிப்புப் பலகையை நோக்கினான்.

**டாக்டர் வசந்தன்.**
**டாக்டர் சீலியா.**

வயது முதிர்ந்த நர்ஸ் ஒருத்தி வந்து புன்னகையோடு, ''டாக்டர் வசந்தனா?'' என்று கேட்டு அவனை வரவேற்றாள். பதிலுக்கு மரியாதைப் புன்னகை வழங்கிய வசந்தன் ஆமோதித்துத் தலையசைத்தான். வயது முதிர்ந்த அவளது தோற்றமும், பழகும் கனிவும் அவனுக்கு மிகவும் பிடித்திருந்தன. அவள் உபசரிப்போடு வார்டின் நடுவில் போடப்பட்டிருந்த நாற்காலியில் உட்கார்ந்தான். சிறிது நேரத்துக்கெல்லாம் மல்லிகை மணம் கமழ ஒருத்தி உள்ளே நுழைந்தாள். வார்டு நர்ஸ் அவளையும் கனிவாக வரவேற்று, ''நீங்கள்தானே சீலியா?'' என்று கேட்டாள். சீலியா வசந்தன் அருகில் கிடந்த மற்றொரு நாற்காலி

# கோல்டன் பிளாஸ்டிக்ஸ்

தங்கத்திற்கொப்பான

இன்றைய நாகரீக வாழ்விற்கு



**கோல்டன் பிளாஸ்டிக்ஸ்**
தயாரிக்கும் கவர்ச்சிகரமான
பொருள்கள் இப்பொழுது
கிடைக்கிறது. பல வகைகள்
உங்களுக்கு ஏற்ற விலையில்

**பக்கெட்டுகள் • பேசின்கள் •**
**கூடைகள் • கோப்பைகள் •**
**தொட்டிகள் •**
**பிக்னிக் பக்கெட்டுகள் •**
**குருயெட்டுகள் •**
**சாறு பிழியும் கிண்ணங்கள்**

உறுதியாக உழைக்கவல்ல
கோல்டன் பிளாஸ்டிக்ஸ்
தரத்திலே தன்னிகரற்றவை.
கண்குளிரும் வண்ணங்களிலே
உங்களது வீட்டை
அலங்கரிக்க வருகின்றன.








## கோல்டன் பிளாஸ்டிக்ஸ்

67-69, பஜார்கேட் தெரு, பம்பாய்-1

Criterion-GP-1510 Ta

*மாநில விநியோகஸ்தர்கள் :*

**M/s. யுனிவர்ஸல் ஏஜன்ஸிஸ்**
9, மவுண்ட் ரோடு, **சென்னை-2** போன்: 86098

ஏரியா விநியோகஸ்தர்கள் : **M/s. J. K. பீர்ஜி & கோ.**
4, பந்தர் தெரு, **சென்னை-1** போன்: 21797

**M/s. மதுரை இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன், மதுரை.**

**M/s. வரன் & கோ., கல்விவன்ஸ் தெரு, கோயமுத்தூர்.**

யில் அமர்ந்தாள். வியர்வை பொடித்திருந்த முகத்தினைக் கைக்குட்டையால் அழுத்தித் துடைத்தவாறே நிமிர்ந்தாள்.

சீலியாவைச் சில முறைகள் பார்த்திருந்தாலும், வசந்தனுக்கு அவளோடு நேரிடை பரிச்சயம் கிடையாது. மற்ற மாணவர்கள் அவளைக் காண நேரும் போதெல்லாம் 'ரோஸ் பியூட்டி' என்று பெயர் சூட்டிப் பேசுவார்கள். பெயரைக் கொண்டு அவளை ஓர் ஆங்கிலோ-இந்தியப் பெண்ணோ என்று அவன் ஆரம்பத்தில் எண்ணினான். நிறமும் ஜாடையும் அப்படி இருந்த போதிலும், அவள் புடவை அணிந்திருந்தாள். சோலி போட்டிருந்தாள். 'ஹீல்ஸ்' இல்லாத சாதாரணச் செருப்பணிந்திருந்தாள். தலையில் கூந்தல் செழித்து, அடர்ந்து கிடந்தது.

மருத்துவ சம்பந்தமான ஒரு புத்தகத்தைப் புரட்டியவாறே தூக்கத்தை விரட்டிக் கொண்டிருந்தான் வசந்தன். சீலியாவும் புத்தகமும் கையுமாக அவனைப் போலவே போராடிக் கொண்டிருந்தாள். அமைதியான சூழ்நிலைக்குத்தான் என்ன சுகந்தம்!

வார்டு நர்ஸ் அமைதிக்குக் குந்தகம் நேராமல், ஆனால் பரபரப்பாக வந்தாள். "டாக்டர்! மிகவும் அதிகமாக இடுப்பு வலி எடுத்துவிட்ட பெண்ணை 'லேபர்' ரூமில் படுக்க வைத்து விட்டேன். புறப்படுங்கள். உங்களில் யார் விரும்புகிறீர்களோ, வரலாம்....." என்றாள்.

"இருவருமே வருகிறோம்." சீலியா குரல் கொடுத்தாள். நர்ஸ் தன் வேலையைக் கவனிக்க ஓடி விட்டாள்.

வசந்தன் தயங்கினான். படித்தும், ஆபத்தான பிரசவங்களைப் பார்த்திருந்தும்கூட அவனுக்கு முதன் முதல் தனியாக ஒரு கேஸைப் பார்க்க மனம் கூசியது. இந்த மென்மையான உணர்வுகளைக் கொன்றால்தான் ஓர் உயிருக்கு இயன்ற அளவு சீக்கிரமாக உதவமுடியும் என்று தீர்மானித்துத் தயக்கத்தை உதறி எழுந்தான் அவன்.

"டாக்டர்! எடுத்ததுமே கேஸ் கிடைத்தது நல்லதுதானே? ஏன் தயக்கம்? உங்கள் பெயரில் போட்டுக் கொள்ளுங்களேன்..." என்றாள் சீலியா.

"நோ, நோ. அதற்காகத் தயங்கவில்லை. இது முதல் அனுபவம்! வேறு ஒன்றுமில்லை, டாக்டர்!"

சீலியாவைத் தொடர்ந்த வசந்தன் படுக்கையருகே வந்தபோதும் சிறிது கூசினான். சீலியா முதலுதவியாகப் பிரசவிக்க விருந்த பெண்ணின் ஆடைகளை நெகிழ்வித்தாள். வசந்தன் ஒருகணம்



உன்னை ஒருவன் ஒரு முறை ஏமாற்றினால் அது உன் குற்றமன்று; இரு முறை உன்னை ஒருவன் ஏமாற்றினால் அது உன் குற்றமே.

— ரூமேனியப் பழமொழி

---

கண்களை மூடிக்கொண்டான். இயற்கையின் படைப்பில் பெண்ணுக்கு இத்தனை பெரிய தண்டனையா? 'அம்மா' என்ற தீனமான முனகல் அவன் உடலைக் குலுக்கியது. வசந்தன் அடுத்தகணம் ஒரு டாக்டராக மட்டும் ஒன்றினான். கைகள் டெட்டாலில் சுத்தமாகின. பஞ்சும், மருந்தும், பேசினும் அவன் அருகே வந்தன. அவன் துயர் தீர்க்கும் பணிக்குத் தன்னை ஒப்படைத்தவனாக உருகிக் கனிந்து உதவினான். சீலியா அருகில் இருந்து செய்த உதவி அவளைப் புத்திசாலியாகக் காட்டியது.

"குவா, குவா.....!"

தாய் சோர, குழந்தை வீரிட்டது. வசந்தன் எழ முயலும்போதே நர்ஸின் குரல் தடுத்தது. "டாக்டர்! நஞ்சுக் கொடி விழுமுன் உங்கள் கடமை நிறைவேறி விட்டதா?"

"நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று சீலியா நோயாளியின் வயிற்றில் கைகளால் அழுத்தினாள். நஞ்சுக் கொடி அப்புறப்படுத்தப்பட்டபின் வசந்தன் எழுந்து கைகளில் சோப்பிட்டுக் கழுவினான். தன்னருகே தள்ளப்பட்ட கேஸ் ஷீட்டில் குறிப்புக்கள் எழுத ஆரம்பித்தாள் சீலியா.

குழந்தையின் கண் இமைகளைத் துடைத்தவாறே வார்டு நர்ஸ் சிரிப்பான குரலுடன், "ஆமாம்! கேஸ் ரெக்கார்டு யார் எழுதப் போகிறீர்கள்?" என்று வேடிக்கையாகக் கேட்டாள்.

"அவர் பெயரில்" — சீலியா வசந்தனைச் சுட்டினாள்.

"இல்லை. உங்கள் பெயரிலேயே இருக்கட்டும்."

"ஆல்ரெடி, ரோட்!" சீலியா கேஸ் ஷீட்டை மூடித்துக் தூர வைத்தாள். "கேஸ் ரெக்கார்டு அப்புறமாக எழுதி விடுங்கள்" என்று வசந்தனைப் பார்த்தாள்.

கொஞ்ச நேரத்துக்குமுன் உயிர்ப் போராட்டம் நடந்த இடத்தில் மற்றொரு சின்ன உயிர் கிளைத்த மகிழ்ச்சி அங்கு நிலவியது. சோர்வான தாயின் புன்னகை அவர்களை வாழ்த்திற்று.

வசந்தன் தன் இருப்பிடம் வந்தபோது கைக் கடிகாரம் மணி பன்

விரண்டு எனக் காட்டியது. அப்போது தான் கடவுள் செய்த தவற்றைச் சங்கரன் ஒருநாள் சுட்டிக் காட்டியது நினைவுக்கு வந்தது. உண்மைதான். 'கடவுள் பிரசவத்தை இரவு பகல் பாராமல் நடக்கும் படி செய்துவிட்டது எத்தனை பெரிய தவறு?' இத்தனை நோயுற்று, துயருற்று, நோவுற்றுப் பெறும் குழந்தைகளைத் தாயின் அன்புதானே மேலும் மேலும் வளர்க்கிறது? எத்தகைய தியாகத்தையும் செய்யத் தூண்டுகிறது? ஆகா! அம்மா என்ற சொல்லின் குளிர்ச்சி தென்றலுக்குச் சமம். அந்தச் சொல்லின் பொருள் தலைசிறந்த தியாகத்துக்கு ஈடு. அந்த உருவம், அவள் தியாகம், அவள் துன்பம், அவள் அன்பு எல்லாம் ஆராதனைக்கு உரியன. பூஜைக்கும் தியானத்துக்கும் அப்பாற்பட்ட பேரின்பமயமான சிலிர்ப்பைத் தருகிறவள் அன்னை!

''டாக்டர்! இப்போதைக்கு வேறு கேஸ் எதுவும் இருக்காதென நினைக்கிறேன். நீங்கள் உங்கள் தங்குமிடத்துக்கே போய்க் கொஞ்ச நேரம் படுத்துத் தூங்கலாம். அவசியமானால், 'மெமோ' அனுப்புவோம்'' என்றாள் வார்டு நர்ஸ். ''சீலியா! நீகூடப் போய்ப் படுத்துத் தூங்கம்மா.''

வந்தனம் கூறிவிட்டு வசந்தனும் சீலியாவும் வார்டின் வெளிப் பக்கம் வந்தனர்.

**கா**லை வேளையானாலும் கான்டீனில் கூட்டம் நெருக்கியது. ஏழு மணிக்கெல்லாம் வார்டை நோக்கிச் செல்ல வேண்டிய டாக்டர்கள் அங்கு குழுமிப் பசியாறிக் கொண்டிருந்தனர். வசந்தன் காலியாக இருந்த ஒரு ஆசனத்தில் அமர்ந்து நிமிர்ந்தபோது எதிரே சீலியா சிரித்தவாறே, ''குட்மார்னிங், டாக்டர்!'' என்றாள்.

''வெரி குட் மார்னிங்!''

ஆவி பறக்கும் பானத்துக்குச் சொல்லிவிட்டுக் காத்திருந்த போது, தனக்கு வந்த தோசையை அவன் அருகில் தள்ளிவிட்டு மற்றொன்றுக்கு உத்தர விட்டாள் சீலியா. மறுப்பது இங்கிதமாகப் படவில்லையாதலால், அவனுக்குத் தோசை வரும் வரை காத்திருந்து, பின் இருவரும் உண்ண ஆரம்பித்தனர். பேச்சு அதிகமில்லை. எழுந்து இருவரும் வார்டுப் பக்கம் நடந்த போது சங்கரனும் லீலாவும் எதிரே வந்தனர். சங்கரனின் பார்வை ஒரு மாதிரியாகத் தன் மீது கவியவே, வசந்தன் துரித நடையோடு முன்னேற முயன்றான்.

''வசந்த்! ஒரு நிமிடம்......!'' என்றான் சங்கரன்.

சீலியா லீலாவுக்கு வந்தனம் கூறி விட்டு முன்னே நடந்தாள். வசந்தன் பின்தங்கினான்.

''கேஸ் கிடைத்ததா, வசந்த்?''

''ஓ! ஒரு கேஸ் இரவே பார்த்தோம்.''

''ஓ! பார்த்தோமா? என்ன 'தோம்?' நீயும் சீலியாவும் சேர்ந்து பார்த்தீர்களா?''

''ஆமாம்.''

''ஏன்டா பழி! கேஸ் உன் பேரிலா, அவள் பேரிலா?'' சீலியா வெகுதூரம் போய்விட்ட தைரியத்தில் கொஞ்சம் வழக்கமான குரலெடுத்துக் கத்தினான் சங்கரன்.

''என் பெயரில்தான்'' — வசந்தன் நிதானமாக இப்படிக் கூறவும், சங்கரன் உண்மையிலேயே வாயடைத்து நின்றான். தன்னைச் சமாளிக்கவே அவனுக்குக் கொஞ்ச நேரமாயிற்று.

''அடே வஸந்த்! நீ உண்மையிலேயே வேடிக்கையானவன்தான்டா.. அவளுக்கு விட்டுக் கொடுக்கும் குதூகலமே உனக்கு இல்லையடா. உம்! இனி மேலாவது உனக்கு அது வரட்டும். நேற்றிரவு முழுக்க முழுக்க நான் பார்த்த கேசை லீலாவின் பெயரில் பதிந்து விட்டு நான் அவளைச் சுற்றிக் கொண்டிருக்கிறேன்.''

''வரட்டுமா சங்கர்? உனக்கு இதைத் தவிர வேறு பேச்சு ஏது?''

''வேறு மூச்சேது?'' என்று நடித்த சங்கரை விட்டு விலகிய வசந்தன் தன் வார்டுப் பக்கம் நடந்தான்.

அவனைக் கண்டதும் சீலியாவின் நடை தயங்கியது. இருவரும் படுக்கைகளின் இரு வரிசைகளிலும் இசை மாறித் தத்தம் கடமைகளில் மூழ்கினர். வார்டு நர்ஸ் மிஸஸ் பயஸ் அவர்களை விநோதமான கண்களோடு நோக்கி விட்டுத் தனக்குத் தானே சிரித்துக் கொண்டாள். வசந்தனின் வேலைகள் சீக்கிரம் முடிந்து விட்டன. தன் இருப்பிடம் வந்து 'கேஸ் ரெக்கார்டு' எழுத அமர்ந்தான். பிரசவித்த விதம் பற்றி எழுதுமிடத்தில் 'நேச்சுரல்' அதாவது ''இயற்கையான பிரசவம்'' என்று எழுதும்போது அவனுக்கு வேதனையான சிரிப்புப் பீறிட்டது. 'ஐயோ! இயற்கையானதே இப்படியானால் கஷ்டமானது எப்படியோ?' என்று மனம் நடுங்கியது. அந்த நடுக்கத்தினூடே ஸானடோரியத்தில் இருக்கும் தன் தாயின் மெலிந்த நொடிந்த உருவத்தையும் கண்டான் அவன்.

''என்ன எழுதிக் கொண்டிருக்கிறீர்கள், டாக்டர்!'' சீலியா கைகளைத் துடைத்தவாறே எதிர் ஆசனத்தில் வந்து அமர்ந்தாள். **(தொடரும்)**

# பொன்னிவனத்துப் பூங்குயில்

## கொத்தமங்கலம் சுப்பு

### அத்தியாயம் 16

### "டம் டமக் டமக்!"



காய்ச்சலுக்கும் கள்ளுக்கும் குளிர்ந்த காற்று மேலே படவே கூடாது. இளங்காற்று இருவருக்கும் மேலே படவே வெறி மேலும் ஏறியது. "நீ அந்தப் பொண்ணை எனக்குக் கட்டிக் குடு. அப்புறம் பாரு? பொம்மைகளையே ஆட்டி வைக்கிறவன், பொம்புளையை ஆட்டி வைக்கமாட்டேன்? கைகால் எல்லாம் அக்கு அக்காய் எடுத்து வச்சுடறேன் பார்" என்றான் பாவைக் கூத்துப் பஞ்சவர்ணம்.

"டேய், அடிக்கிற வேலே மாத்திரம் வச்சுக் காதே."

"என் பெண்டாட்டியை நான் அடிச்சா கேக்க நீ யாரு மாமா?"

"என் மருமவளை அதுக்குள்ளே நீ எப்படிடா உன் பொஞ்சாதின்னு சொல்லலாம்."

"என்னடா, என்னையா எதிர்த்துப் பேசறே?" இது பஞ்சவர்ணம்.

"அறைஞ்சேன்னு தெரியுமா?" இது குயிலியின் மாமன்.

அந்தக் காலமோ குடுமி இருந்த காலம். ஒருவன் குடுமியில் ஒருவன் கை போட்டான். இருவரும் தெருவிலே கட்டிப் புரண்டார்கள். திடீரென்று ஒரு நல்ல எண்ணம் வந்தது. "தெருவிலே நடப்பவர்களுக்கு நாம் இடைஞ்சலாக இருக்கக் கூடாது" என்ற கருத்தில் தஞ்சாவூர் சாக்கடைக்குள் விழுந்தார்கள்.

குடிகாரனும் குரங்கும் ஒரே இனம். குரங்கு கிளைக்குக் கிளை தாவுவதுபோல் குடிகாரனும் எண்ணத்துக்கு எண்ணம் மாறிக்கொண்டு இருப்பான்.

"மாப்ளே! இப்ப எங்கே இருக்கோம்?" என்று கேட்டான் குயிலியின் மாமன்.

"காசியிலே இருக்கோம். கங்கைத் தண்ணியிலே குளிச்சிக்கிட்டிருக்கோம்" என்றான் பஞ்சவர்ணம். அவன் மெல்லக் குயிலியின் மாமனின் தோள் மேல் ஏறிச் சாக்கடையிலிருந்து வெளியே குதித்தான். குதித்த பின் ஒரு வேடிக்கை செய்தான்.

"மாமா! நீ இங்கேயே கிட. நான் போறேன்" என்றான்.

"மாப்ளே! என்னை விட்டுட்டுப் போகாதே மாப்ளே!" என்று கத்தினான் மாமன்.

"உன்னைக் கையைப் பிடித்து வெளியே தூக்கறதுன்னு நீ எனக்குக் கை கொடுக்கணும். நீ சொன்னியே, அந்தப் பெண்ணை இன்னிக்கே பார்த்துக் கலியாணத்தைப் பேசி முடிக்கணும்."

"இதுக்குத்தானா மாப்ளே. வா போகலாம்" என்று கையை நீட்டினான். கையைக் கொடுத்து மாமனை ஏற்றி விட்டான் பஞ்சவர்ணம்.

அறைக்குள் மாமனால் அடைக்கப் பட்ட குயிலிக்கு நேரம் ஆக ஆக நெஞ்சில் என்னமோ செய்தது. அந்த அறையின் வாசலிலேயே நின்று கொண்டு இருந்த கிழவி பொன்னம்மாள், "குயிலே, குயிலே! கவலைப் படாதே. இப்ப வாரணன் வந்துடுவான். உடனே கதவைத் திறந்து விடச் சொல்றேன்" என்று ஆறுதல் சொல்லிக் கொண்டே இருந்தாள்.

"பாட்டி, நான் கொஞ்ச நேரம் தூங்கறேன். நீங்க சும்மா இருங்க" என்றாள் குயிலி.

"நீ அழலியே?"

"இல்லை பாட்டி!" என்றாள் குயிலி. மெள்ளக் கிழவியும் தன்னுடைய அறைக்குத் திரும்பிச் சென்றாள். குயிலி யோசித்தாள். அடைபட்டுக் கிடந்த நேரத்தில்கூட அவளது விளையாட்டுப் புத்தி அடைபடவில்லை. அந்த அறையின் தரை ஈரத்தின் நாற்றம், அவளைத் திணற வைத்தது. நெஞ்சிலே வேடிக்கையாகப் பல எண்ணங்கள் தோன்றின. "அடியம்மா! இந்தத் தஞ்சாவூர்லே எல்லாத் தெருவும் மணக்குது. நம்ம தெரு மட்டும் நாறுது. ஐயன் கடைத் தெருவுக்குள்ளே நுழைஞ்சா அத்தரு மணக்குது. ஐயன் குளத்திலே பால் சௌக்காரம் மணக்குது. கருந்தட்டான் குடியிலே வீடெல்லாம் கன்னித் தமிழ் மணக்குது. மேல வீதிப் பக்கமாப்போனா ஓமத் தீயிலே நெய் மணக்குது. கொஞ்ச நேரம் போனா, லட்டுவும், போளியும் மணக்குது. தாஸ்தா மகால் சந்துலே வீட்டுக்கு வீடு பா மணக்குது. அப்படிப் பாடுறாங்க. பூக்காரத் தெருவிலே தெருவெல்லாம் ரோஜாப் பூவும், மல்லிகைப் பூவும், சம்பங்கிப் பூவும் கொட்டிக் கொட்டி வச்சிருக்காங்க. அந்தத் தெருவே பூ மணக்குது. சதாசிவத் தண்ணன் கடை வாசல்லே கொய்யாப் பழம் மணக்குது. காக்காயின் மூக்கிலே முந்திரிப் பருப்பும் மணக்குது. பட்டு நூல்காரத் தெருவிலே அவரிச்சாயம் மணக்குது. கீழ வாசலிலே சித்திரம் எழுதறவங்க, என்ன என்னவோ பச்சிலைகளைக் கலந்து சித்திரம் தீட்டறாங்க. அங்க போனா சித்திரமே மணக்குது. கங்கணம், வளையல் செய்யுறவங்க கடை வாசலிலே அரக்கு மணக்குது. வாத்திய சாலையிலே வச்சிரம் மணக்குது. வீதியிலே யாராவது நடந்து போனா சந்தனம் மணக்குது. நம்ம ஊருலே அத்தனை பையன்களும்தான் எத்தனை அழகா கல்பனை பேசறாங்க. அவங்களுக்கு நா மணக்குது. மொத்தத்திலே தஞ்சாவூர்த் தெருவே மணக்குது. ஆனா நம்ம ஒரு தெருவிலே மாத்திரம் பொய் மணக்குது. இத்தனை தெருவுக்கும் மாறுதலா ஏன்



ஒரு தெருவிலே போய் மணக்கணும்? ஏன் இவங்களும் மத்தவங்களைப் போல இருக்கக் கூடாது?'' என்று அவன் எண்ணிக் கொண்டே இருக்கும்போது திடீரென்று அவன் மூக்குக்குள் ஊதுபத்தியின் மணம் ஏறியது. ''ஓஹோ, பக்கத்து வீட்டிலிருந்து வருதோ? ஊம் அந்த வீட்டுப் பொண்ணு பார்வதி ஊதுபத்தியைக் கொளுத்தி வைக்குது. அதுக்கடுத்த வீட்டிலே இன்னும் ரெண்டு பேர் நின்னுக்கிட்டுச் சாம்பிராணி எல்லாம் போட்டு வீட்டையே மணக்கச் செய்வாங்க. அதுக்கடுத்த வீட்டிலே ரெண்டு பொண்ணு, வாசல் கதவோரத்தில் நின்னுக்கிட்டு, ''தெருவில் வாரானோ? என்னைச் சற்றே திரும்பிப் பாரானோ?'' என்று பாடிக்கிட்டு இருப்பாங்க. குயிலி சிரித்துக் கொண்டாள். ''நமக்கு என்ன அதைப் பற்றி'' என்று எண்ணும்பொழுது ஒரு வீட்டில் இருந்து நாட்டியம். ஆடும் சத்தம் கேட்டது. தெருவிலே



சத்தம் குறைந்தது. பொழுது போய் விட்டது. விளக்கேற்றி விட்டார்கள். இனி இந்தத் தெருவிலே நல்ல மனிதன் நடமாட மாட்டான். ஒருசிலரின் நடமாட்டம் அதிகம் இருக்கும். மாமனும் வந்து விடுவான். வந்தால் அவன் எந்த முறையில் வருவான் என்று யார் கண்டார்கள் அவன் வருவதற்குள் வீட்டை விட்டுத் தப்பிவிட வேண்டுமே? இப்படிக் குயிலியின் மனம் வேதனைப் பட்டது. எங்கேனும் ஒரு பரணை இருந்தால் அதன் மீது ஏறி ஓட்டைப் பிரித்துக் கொண்டு சென்று விடலாம் என்று அவள் எண்ணினாள். சுவரில் ஒவ்வொரு இடமாகக் கை வைத்துக் கொண்டே வந்தாள். அங்கே பழைய பரணி யிருந்த இடத்தில் அடிக் கட்டை மாத்திரம் சுவரிலே ஒட்டிக் கொண்டிருந்தது. கதவிலே ஒரு காலை வைத்து அந்தக் கட்டையைப் பிடித்துக் கொண்டு, குயிலி ஏறினாள். மளமளவென்று கட்டை முறிந்தது. குயிலி தொபுகடீர் என்று கீழே விழுந்தாள். அவளது வலது கால் தரைக்குள்ளே போயிற்று. 'ஐயோ' என்று மெதுவாக மெல்லச் சிரமப்பட்டுக் காலை வெளியே எடுத்தாள். அவள் காலில் இலேசாகச் சிராய்த்திருந்தது. அவளையும் அறியாமல் ஒரு சொட்டுக் கண்ணீர் வந்தது.

அப்போது, ''குரங்கு குரங்கு'' என்று கிழவி கத்தும் குரல் கேட்டது. குயிலி திடுக்கிட்டாள். தன் அறையிலிருந்து சத்தம் கேட்டதால்தான் கிழவி இவ்வாறு கூறுகிறாளோ என்று பயந்தாள். அப்போது முற்றத்தில் ஏழெட்டு மாங்காய்கள் விழுந்து கொண்டிருந்தன. அதைப் பார்த்து விட்டுத்தான் கிழவி 'குரங்கு' என்று கத்தினாள்.

தஞ்சாவூரிலே சில நேரங்களில் ஆகாயத்திலிருந்து காசு மழை பொழியும். வெள்ளரிக்காய் மழை கூடப் பெய்யும். பக்கத்து வீட்டில் உலர்த்தி யிருக்கும் அப்பளம், கறிவடாம் முதலியன மழையாய்ப் பெய்யும். பஜனை மடத்தின் ஜாவர்கள் வீட்டுக் கூரையில் கேட்கும். குரங்குகள் அத்தனை அதிகம். ''ஏதோ ஒரு குரங்கு பின் வீட்டு மாமரத்திலிருந்து மாங்காய்களைப் பறித்துப் போடுகிறது. ஊறுகாய்க்கு ஆகும்'' என்று மகிழ்ச்சியுடன் மாங்காய்களை எடுத்தெடுத்து வைத்துக் கொண்டாள் சின்னம்மா. மாங்காய் போடுவது நின்று விட்டது. குயிலி என்னவென்று கவனித்தாள். அவள் காதிலே மெதுவாக 'டம் டமக்' டம் டமக்' என்று டோலக் வாசிக்கும் சத்தம் கேட்டது. 'அட! சின்னத்தம்பி'' என்று எண்ணினாள் குயிலி. ஆம்! குயிலியின் வீட்டுப் பின்புறத்திலிருந்த மாமரத்தின் மீது சின்னத்தம்பி உட்கார்ந்திருந்தான்.

அதே சமயத்தில் வாசற்புறத்திலிருந்து ''மல்லியப் பூ, மல்லியப்பூ'' என்ற குரல் கேட்டது. சின்னம்மா அவசரமாக வாசலுக்கு விரைந்தாள். வெளியே முந்திரிக்கொட்டையும் நாலைந்து பையன்களும் நின்றிருந்தார்கள். அவர்களில் ஒருவன், மல்லிகைப் பூக்களைத் துண்டிலே முடிந்து கொண்டு, ''மல்லியப்பூ வேணுங்களா?'' என்று கேட்டான்.

''காசு நாளைக்கு வாங்கிக்குவியா?'' என்றாள் சின்னம்மா.

''கடனா? சோறுக்கு எங்க போவது?'' என்றான் அவன். அதற்குள் முந்திரிக் கொட்டை ''நம்மளைப் பட்டினி போட்டுடுவாங்களா? மல்லிகைப் பூவாட்டம் சம்பா அரிசிச் சாதம் போடுவாங்கடா'' என்றான்.

''பழையது இருக்கு போடறேன். நாலு முழம் கொடு.''

''நாலு பேருக்கும் சோறு போட்டா நாலு முழம் தருகிறேன்.''

''அதுக்கு வடிச்சா வச்சிருக்குது? உனக்கு மாத்திரம் போடுகிறேன். இஷ்டமிருந்தா நாலு முழம் கொடு.''

''சரி, இந்தாங்க'' என்று ஒரு கைப் பூவை அள்ளிக் கொடுத்தான்.

''வெறும் பூவை வாங்கி என்ன செய்யறது? கட்டித் தா.''

''பின்னே நார் கொஞ்சம் தாங்க.''

சின்னம்மா உள்ளே சென்று அவசர அவசரமாக வாழை நாரை எடுத்துக் கொண்டு வெளியே வந்து அவனிடம் கொடுத்தாள்.

''என்னம்மா, நனைக்காமக் கொண்டாந்திருக்கீங்களே?'' என்று சொல்லிக் கொண்டே அந்தப் பையன் உள்ளே ஓடி முற்றத்தின் அருகிலிருந்த அடுக்குத் தண்ணீரில் அதை நனைத்துக் கொண்டே கண்ணால் ஒருமுறை வீட்டை நோட்டம் விட்டான். வெளியே ஓடி வந்தான்.

''ஏண்டா அவங்களைக் கேட்டா நனைச்சுக் கொடுக்க மாட்டாங்க? அதிகப் பிரசங்கி!'' என்று கத்தினான் ஒரு பையன். இதைக் கேட்டு அவன் வெளியே ஓடி வந்தான்.

''அவனை ஏன் கோவிக்கிறே? எனக்கு ஒரு நடை மிச்சம்'' என்றாள் சின்னம்மா. ஒரு முழத்துக்கு மூணு கண்ணிகளை வைத்துக் கட்டினான் முந்திரிக் கொட்டை. சின்னம்மாவுக்குக் கோபம் வந்தது. ''என்ன, உன்னிடம் மாலை கேட்டா, நாருதான் தருவே போல இருக்கே? நெருக்கமாக் கட்டு'' என்று கோபித்தாள்.

''சரி, நீங்களே பூவை அடுக்கித் தாங்க'' என்றவுடன், கண்ணிக்கு நான்கு பூக்களாக எடுத்துக் கொடுத்தான் சின்னம்மா. முந்திரிக் கொட்டை கட்டிக்கொண்டே இருந்தான். மற்றவர்கள் ''இவன் சோறு திங்கப் போறான் அதுக்கு நம்ம ஏண்டா நிக்கணும்?'' என்று சொல்லிப் புறப்பட ஆரம்பித்தார்கள்.

அப்போது பின்னாலிருந்து 'டே, இங்க என்னடா கூட்டம்?'' என்று ஓர் இடிக் குரல் வரவே, பையன்கள் திடுக்கிட்டுத் திரும்பினார்கள்.

''தொடுக்கறானுங்க!''

''மல்லியப்பூ கட்டுறேனுங்க'' என்று பயந்து கொண்டே சொன்னான் முந்திரிக் கொட்டை.

''என்ன என்ன? மாமரத்துக்கதயா தொடுப்பீங்க! கட்டினது போதும் போங்கடா'' என்று பூவைப் பறித்துக் கொண்டு, அவனை அடிக்கப் போகவே, பையன்கள் ஓட்டம் எடுத்தார்கள்.

''நல்ல சகுனம். மாலை தயாராய் இருக்குது'' என்று உளறிக் கொண்டே சின்னம்மாளை உற்றுப் பார்த்தான் பஞ்சவர்ணம்.

சின்னம்மாள் நடுங்கினாள். ''என் தங்கச்சி'' என்றான் குயிலியின் மாமன்.

''இதோ பாரு! மாப்பிள்ளை வந்திருக்காரு!'' என்று பஞ்சவர்ணத்தை அவளுக்கு அறிமுகம் செய்து வைத்தான். இதைக் கேட்ட பஞ்சவர்ணம் மாப்பிள்ளை முறுக்கோடு நடக்கும் எண்ணத்தில் நடந்தான். சாதாரணமாக நடந்திருந்தால் அவன் அவ்வளவு தடுமாறியிருக்க மாட்டான்.

மாப்பிள்ளையாதலால் நிலைப்படி தலையில் இடிக்காமல் உள்ளே நுழைய வேண்டும் என்று எண்ணினான் பஞ்சவர்ணம். ஆகவே சிறிது குனிந்து வந்தான். வாசற்படி தடுக்கி அவள் மேல் விழப் போனான். அவள் விஷயத்தைப் புரிந்து கொண்டாள்.

''எண்ணே! இந்த ஆளு யாரு?'' என்று கேட்டாள்.

''ஆளுன்னு சொல்லாதே! மாப்பிள்ளை என்று சொல்லு. பஞ்சவர்ணம் தெரியாது? பாவைக்கூத்துப் பஞ்சவர்ணம்! கேள்விப்பட்டதில்லே? பாட்டிலே புலி! அவரு கையிலே கயிறைப் புடிச்சு ஆட்டினார்னு சந்திரன், சூரியன், புதன், ராகு, கேது எல்லாம் அப்படியே கிடுகிடுன்னு ஆடும்.''

''உலகம் ஆடுதோ இல்லியோ, இப்ப நீங்க ரெண்டு பேரும் ஆடறீங்க!'' என்றாள் சின்னம்மா.

''சரி, அந்த அறைச் சாவியைக் கொடு.''



''இன்று ஆபீசில் வேலை அதிகமோ? நேரம் கழித்து வருகிறாயே?''
''ஆமாம்பா! ஒரு மிஸ்டேக்குக்கூட இல்லாமல் ஒரு லெட்டரை டைப் பண்ணச் சொல்லிக் கண்டிப்பான உத்தரவு போட்டுத் தொலைச்சிட்டார், புது மானேஜர்!''

''எதுக்கு....?''

''நான் அந்தக் குட்டியைப் பாக்கணும். மாப்பிள்ளையைக் கூட்டிக்கிட்டு வந்திருக்கேன்.''

''சாவி என்கிட்ட இல்லே. உன் கிட்டத்தான் இருக்குது. நீ உள்ளே போகாதே. நீ அந்தக் குட்டியை அடிப்பே'' என்று அவன் போகும் வழியைத் தடுத்தாள் சின்னம்மா.

''நீ யாரு என்னைக் கேட்க?'' என்று அவளைத் தள்ளிவிட்டு ஓடிச் சென்று அந்த அறைக் கதவைக் காலால் உதைத்தான் வெள்ளை. உதைத்தால் பூட்டுத் திறக்குமா? மறுபடியும் தன் பலம் கொண்டமட்டும் உதைத்தான்; அப்படியும் கதவு அசையவில்லை.

''மாமா! அந்தக் குட்டி கெட்டிக்காரத்தனமா உள்ளே இருந்தே வெளியே பூட்டு போட்டுப் பூட்டியிருக்குது!'' என்றான் பஞ்சவர்ணம்.

''அது எங்க பூட்டிச்சு? நான்தான் பூட்டினேன்'' என்று தான் பூட்டியது நினைவுக்கு வந்ததனால் சாவியைத் தடுமாறிக்கொண்டே மடியிலிருந்து எடுத்தான். பூட்டைத் திறந்தான். கதவைத் திறந்துகொண்டே ''வா வெளியே, இன்னக்கி நிச்சயதாம்பூலம்'' என்று கத்தியபடியே உள்ளே நுழைந்தான் வெள்ளை. திடுக்கிட்டான். குயிலியைக் காணவில்லை. கூரை பிரிந்திருந்தது.

அதன் வழியே பூரணச் சந்திரன் தெரிந்தது. கடகட வென்று சிரித்தான் வெள்ளை. ''மாப்ளே! நீங்க சொன்னது சரிதான். அந்தப் பய உங்க எதிரி தான். மாப்ளே! இங்க வந்து அவளைக் கொண்டு போயிருக்கான்'' என்று கத்தினன்.

''ஏய், என்னை ஏமாத்தவா பார்க்கறே?'' என்ற குரல் பின்னுலிருந்து கேட்டது. திரும்பிப் பார்த்தால், தீக் கொழுந்து போல் கோபமே உருவாக நின்ருன் பஞ்சவர்ணம்.

''ஒசியிலே குடித்து விட்டு என்னை ஏமாத்தவா பாக்கிறே?'' என்று பாய்ந்து வந்து குயிலியின் மாமனின் குடுமியைப் பிடிக்கப் போனுன் பஞ்சவர்ணம். அவன் குனிந்து கொள்ளவே பஞ்சவர்ணத்தின் கை தூணில் பட்டது. ஓங்கித் தூணை அறைந்தான் பஞ்சவர்ணம். அப்போது எதிர் வீட்டு வாசலில் கிடந்த வண்டிக்குள் ஏதோ சிரிப்பொலி கேட்டது.

இரண்டு குடிகாரர்கள் ஒரு வீட்டிலே இரைந்து சண்டையிட்டவுடனே அந்தத் தெருவிலேயே ஒரு பரபரப்பு உண்டாயிற்று. பல வீடுகளின் கதவுகள் படார் படாரென்று திறந்தன. ஒரு கல்லை எறிந்தால் மரத்திலிருக்கும் காக்கைகளெல்லாம் எப்படிப் பறக்குமோ அப்படி உள்ளே இருந்த பணக்காரர்கள் எங்கே தங்கள் விஜயம் வெளியாகி விடுமோ என்ற பயத்தில் வெளியில் ஓடத் தயாராஞர்கள். 'ஜல் ஜல்' என்று சலங்கை வண்டியைக் கட்டிக் கொண்டு எதிர் வீட்டுக்கு வந்த செல்வர் ஒருவர், ''ஏய், வண்டிக்காரா! வண்டியையும் மாட்டையும் பின்னுலே கொண்டா !'' என்று சொல்லிவிட்டு ஓடினுர்.

வண்டிக்காரன், 'நல்லா வேணும், உனக்கு' என்று மனத்தில் எண்ணிக் கொண்டே வண்டியைப் பூட்ட முற்பட்டான். இத்தனை ரகளைகளுக்கிடையில் குயிலியும் அவளது கூட்டத்தினரும் அந்த வண்டிக்குள்ளிருந்து வெளியே குதித்து ஓட்டமெடுத்துப் பறந்ததை யாருமே கவனிக்கவில்லை.

க் க் க்

மன்மத விலாசத்தில் சுஜனுபாய் ரதி போல் நின்ருள். பொன்னும் மணிகளும் அவள் மீது மின்னின. ஆலயத்துக்கு மாலையில் செல்லப் பகலிலேயே அலங்காரம் செய்து கொள்ளத் தொடங்கினுள்.

தன் கையில் இருந்த மோதிரத்தைப் பார்த்துக் கொண்டே, ''ஏய் ஆமாஜி, மகாராஜா இப்போது என்ன செய்து கொண்டிருக்கிருர்?'' என்று கேட்டாள் சுஜனுபாய்.

''என்ன செய்வார், ராணீஜி! பிள்ளை பிரதாபன் வந்திருக்கிருர். அவனிடம் தம் பிரதாபங்களைப் பேசிக் கொண்டிருப்பார் !''

''பகல் உணவுக்கு மாத்திரம் மூத்த பிள்ளையைக் கூப்பிட்டுப் பக்கத்தில் உட்கார வைத்துத் தங்கத்தால் வாழை இலை போட்டுப் பரிமாறச் சொன்னுரே? இளைய பிள்ளையுடன் அந்தரங்கமாகப் பேசும்பொழுது ஏன் இவரை அருகில் இருத்தி வைத்துக் கொள்ளவில்லை ?'' என்று தன் கணவர் பாவாஜியை இடது கையால் சுட்டிக்காட்டி ஆமாஜியைக் கேட்டாள்.

''அதுதான் நீங்களே 'அந்தரங்கம்' என்று சொல்கிறீர்களே ?''

''அந்தரங்கப் பேச்சில் கலந்து கொள்ள இவருக்குத் தகுதி இல்லையா? இவர் சாப்பாட்டு ராமனு?'' என்று சுஜனுபாய் கேட்டவுடன் ஆமாஜியால் 'ஆம்' என்று சொல்லவும் முடியவில்லை; 'இல்லை' என்று மறுக்கவும் இயலவில்லை. பாவாஜி அவர்கள் பக்கத்திலேயே இருக்கும் பொழுது ஆமாஜி வேறு என்ன செய்வார் ? மௌனமாக இருந்தார்.

''ஏன், ஆமாஜி ! அவருக்காகப் பயப்படுகிருயா? மகாராஜா என்ன நினைக்கிருர். சொல்!'' என்று கோபித்தாள் சுஜனுபாய்.

''ராணி சாகிபா என்ன நினைக்கிறீர்கள் ?''

''ஏன் நான் சொல்வதைத் திருப்பி அப்படியே என்னிடம் சொல்வாயா?''

''இல்லை, இல்லை. நீங்கள் நினைத்தால் சரியாய் நினைப்பீர்கள். மகாராணி சாகிபா, உங்கள் புத்திகூர்மை உங்களுக்கே தெரியாது! மற்றவர்களுக்கெல்லாம் முகத்தின் அழகுதான் வெளியில் தெரியும். உங்கள் முகத்தில் மூளையின் அழகும் சேர்ந்து ஜொலிக்கிறது!'' என்ருர் ஆமாஜி. சுஜனுபாய்க்கு முகஸ்துதி பிடிக்காதோ என்ற கருத்தில் மூளையைத் துதிக்க ஆரம்பித்தார் அவர்.

சுஜனுபாய் பக்கத்தில் இருந்த ஜெயகண்டியை ஒலித்தாள். ''ஏய் தோழி, ஆமாஜிக்கு அல்வா, லட்டு, பாதாம்கீர் எல்லாம் கொண்டு வா'' என்று உத்தரவிட்டாள். யுவராஜா பாவாஜி, ''அடப் பயலே! உன் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்'' என்று சொல்லிக் கொண்டார். மனத்துக்குள்தான்!

சுஜனுபாய் மேலும் பேச்சைத் தொடர்ந்தாள். **(தொடரும்)**

# வலியா?

# அனஸின்

## வலி நிவாரணத்திற்கு மேலானது
## ஏனெனில் 4 வழிகளில்
## வேலை செய்கிறது




டாக்டரின் பத்திரமான மருந்துக் குறிப்பைப் போல், பல மருந்துகள் இணைந்த ஒப்பற்ற கலவையாகிய அனஸின் மூலம் 4-வழி நிவாரணம் அதி விரைவில் கிட்டும்:

1. வலியைத் தணிக்கிறது அனஸின்—வேகமாக.
2. வலிக்குக் காரணமாக அமையும் படபடப்பை ஆற்றுகிறது அனஸின்.
3. வலியுடன் இயல்பாக இணைந்துவரும் சோர்வை வெல்லுகிறது அனஸின்.
4. வாட்டத்தைப் போக்கி, அகமும் முகமும் பழைய-படி மலரச் செய்கிறது அனஸின்.

தவிர, தலைவலி, சளியோடு கூடிய ஃப்ளூ, பல்வலி, உடல் வலி ஆகியவற்றையும் தணிக்கிறது அனஸின்.

## அதி வேகமாக நிவாரணம் பெற
## 2 அனஸின் சாப்பிடுங்கள்

[க-௨௦

Regd. User : Geoffrey Manners & Co. Ltd.

பேராசிரியர் சுந்தரமூர்த்தியின் நெஞ்சிலிருந்து இதயத்தைப் பிளக்கும் கேவல் ஒன்று எழுந்தது. அவர் சிறு குழந்தையைப் போல் விம்மி விம்மி அழுதார்.

அவருக்கு முன்பு அவரது மகன் சம்பந்தனுடைய புத்தகப் பெட்டி திறந்து கிடந்தது. அதைத் தற்செயலாகத் திறந்து பார்த்த போதுதான் அவர் அவ்வாறு கேவிக் கேவி அழத் தொடங்கினார்.

பேராசிரியரின் மனக் கண்ணின் முன்பு முந்தைய நாள் மாலை நடந்த நிகழ்ச்சிகள் கோவையாகச் சங்கிலித் தொடர் போல் எதிர்ப்பட்டன.

கரவொலி ஒன்று

"வருக வருக, பேராசிரியரே!"

"நமஸ்காரம் ஸார்!"

"வணக்கம் ஐயா!"

"ஆதாப் அர்ஸ் ஸாஹிப்!"

"குட் ஈவ்னிங் புரொபஸர்!"

ஹைதராபாத் ரவீந்திர பாரதியின் வாசலில் குழுமியிருந்தோர்களில் பெரும்பாலோர் அவருக்கு அறிமுகமானவர்கள். அனைவரின் கரங்களும் அவரைக் கண்டு குவிந்தன. பேராசிரியருக்கு ஒருகணம் தலை கிறுங்கத் தான் செய்தது. இவ்வளவு அன்பர்களுடைய

# தம் பொருள்





# என்பது..

தி.சா.ராஜூ

கௌரவத்தைப் பெறும் பொருட்டு அவர் செய்திருப்பது என்ன?

இதற்குள் சிறுவன் ஒருவன் ஓடி வந்து அவர் மேல் பன்னீரைத் தெளித்தான். இன்னொரு சிறுமி சந்தனம் வழங்கிப் புது மலர்களைத் தந்தாள். கோமாளி வேஷம் தரித்திருந்த இளைஞன் ஒருவன் கை நிறைய மிட்டாய்களை அள்ளி அவருடைய மகனின் கையில் கொடுத்துவிட்டு ஒரு கொத்தை அவரிடம் அளித்தான்.

''எனக்குக்கூடவா மிட்டாய்?'' என்று சிரித்துக்கொண்டே வினவினார் சுந்தரமூர்த்தி, தம் கையிலிருந்த மிட்டாய்களை மகனின் சட்டைப் பையில் திணித்துக் கொண்டே.

''இன்று நாம் எல்லோருமே குழந்தைகள்தாம்.'' — மேஜர் சுப்பிரமணியன் நகைத்தவாறு கூறினார். அவரும் அவருடைய துணைவி கல்பகம் அம்மையும்; அன்றைய நிகழ்ச்சியை வெற்றிகரமாக நடத்துவதில் சிறப்பான பங்கு எடுத்துக் கொண்டிருந்தார்கள்.

ஹைதராபாத் தமிழ்ச் சங்கம் குழந்தைகள் தினம் கொண்டாடிற்று. அங்கு குழுமியிருந்தவர்களின் உள்ளங்களிலெல்லாம் குழந்தையின் களி வெறி குடிகொண்டிருந்தது.

வெளிப்புறச் சுவரில் பற்பல வண்ண ஓவியங்கள் பெரிய அளவில் வரிசையாகத் தொங்கின.

குழந்தை பிரகலாதன் தன் தந்தையுடன் வாதாடிக் கொண்டிருந்தான். அவனுடைய 'பிஞ்சு நெஞ்சத்திலிருந்த வைர உறுதி அவனது கருநீல நயனங்களிலிருந்து வெளிப்பட்டது. 'நீ சொன்ன சொல்லிலும் உளன்'. அது ஓவியத்தின் தலைப்பு. மேலே நடந்தார் சுந்தரமூர்த்தி. 'பெம்மான் இவனன்றே!' என்று ஓவியத்தின் கீழ் நின்றார். குழந்தை திருஞானம் சிவஞானப் பாலை அருந்திக் கொண்டிருந்தது. அதனுடைய குறுவிரல் கோயில் கோபுரத்தைச் சுட்டிக்காட்டிற்று.

'யே யம் ப்ரேதே விசிகித்ஸா மனுஷ்யே!' கடோபநிஷத்தின் முதல் வல்லியின் இருபதாவது சுலோகம். பேராசிரியர் நிமிர்ந்து பார்த்தார். தெய்வ மதலையான நசிகேதன் சாவின் அரசனான யமதர்மனின் முன்



நின்று கேள்விகளைத் தொடுக்கிறான். அவனது முகத்தில்தான் எத்தனை தீவிரமான பாவனை!

தொடர்ந்து நடந்தார் சுந்தரமூர்த்தி. சிங்கக் குருளைகளைக் கட்டி இழுத்து வரும் இந்திரஜித்தன் அவைகளுடன் விளையாடும் துஷ்யந்த புத்திரன், உடலைப் போசுக்கி உள்ளத்தைக் கூர்ந்து நாராயணனையே தம் முன்பு வரவழைத்த துருவன்.

நெஞ்சிலே வெடிகுண்டு மாலையைக் கட்டிக் கொண்டு நின்றது ஒரு குழந்தை. "இது யார் ஸார் ?" அண்மையில் நின்ற சதாசிவத்தை வினவினார்.

"இது ராஜப்ரதாப் என்ற சிறுவனின் படம். பர்மாவில் நேதாஜியின் இராணுவத்தில் 'பால் சேனை' ஒன்றிருந்தது. அவர்கள் தங்கள் உடலில் வெடிகுண்டுகளைக் கட்டிக் கொண்டு பிரிட்டிஷ் டாங்குகளின் கீழ் படுத்து அவைகளைச் சிதறச் செய்தனர். ஓவியத்தின் தலைப்பு 'சலோ டெல்லி'! பேராசிரியரின் உடல் ஒரு கணம் அதிர்ந்து ஓய்ந்தது.

ஆண்டாள், மீரா, குழலூதும் கண்ணன், ஞானக் குமாரன், அபயபாலமுருகன் — இவை அனைத்தையும் கடந்த பிறகு அங்கே இருந்த பெரிய ஓவியத்தைக் கண்டு தலை வணங்கினார் பேராசிரியர். சதா குழந்தைகளின் நலனையே தம் கருத்தில் கொண்டு தம்மையே குழந்தையாக்கிக் கொண்ட பேருருவம் தவழ்ந்த நிலையில் இருந்தது. அவருடைய பேரன் சஞ்சீவ் காந்தாவின் முதுகில் ஏறிச் சவாரி செய்து கொண்டிருந்தான். கீழே எழுதியிருந்த வாசகத்தைப் படித்து மெய்சிலிர்த்தார் சுந்தரமூர்த்தி.

"யாரின் நேருநின்றால்
யாருளர் நேரு போனால் ?"

"இவற்றையெல்லாம் வரைந்தது யார்?" அவர் வினவினார். "ரயில்வேயில் ஓர் ஆடிட்டர் இருக்கிறார் ஸார், பெருமாள் என்று பெயர். அவருடைய மனைவி சரஸ்வதி வரைந்தவைதாம் அனைத்தும். அந்த அம்மாவுக்குக் குழந்தைகளே கிடையாது." சதாசிவம் பதிலிறுத்தார். அவருடைய கண்கள் கலங்கின.

## அடுத்த கரணை

குழந்தைகளின் சித்திரப் போட்டி நடந்து கொண்டிருந்தது மினி தியேட்டரில். ஆறு வயதுக்குட்பட்ட மதலையர். பத்து பிராயத்துக்குக் குறைந்த சிறுவர் சிறுமியர். எழுதும் காகிதத்தின் மேலேயே உட்கார்ந்து படம் வரைந்து கொண்டிருந்த மூன்று வயதுக் குழந்தை ஒன்றைப் பார்த்துத் தம்மை அறியாமலேயே நகைத்தார் சுந்தரமூர்த்தி. இன்னொரு சிறுமி உதிர்ந்த லட்டுவை ருசி பார்த்துக் கொண்டே எழுதினாள். கடந்த மூன்று ஆண்டுகளில் இரட்டை நகரில் பரீட்சையில் முதலிடம் பெற்ற மாணவ மாணவிகளின் புகைப்படங்கள் அந்தத் தியேட்டரை அலங்கரித்தன. "இதே போல் விளையாட்டில் முதலிடம் பெற்றவர்களையும் கௌரவிக்கலாமே?" என்று சதாசிவத்திடம் யோசனை கூறினார் பேராசிரியர்.

வெளியில் பெரிய க்யூ வரிசை ஒன்று நின்றது. குழந்தைகள் டிக்கெட் வாங்கிக் கொண்டிருந்தார்கள். "இது எதற்கு?" என்று வினவினார் சுந்தரமூர்த்தி.

'லக்கி டிப். இங்கு டிக்கெட் வாங்கிக் கொண்டு பின்புறம் போக வேண்டும். அங்கே ஒரு பெட்டியில் சுருட்டிப் போடப்பட்ட எண்கள் இருக்கின்றன. ஒவ்வொரு டிக்கட்டுக்கும் ஒரு சீட்டு. அந்தச் சீட்டிலுள்ள எண்ணுக்குத் தகுந்தாற்போல் குழந்தைகளுக்கான விளையாட்டுப் பொருள்கள் கிடைக்கும்."

"இது லாட்டரி அல்லவா ?"

"அப்படித்தான் அரசாங்கமும் கூறி வரிவிதிக்க முயன்றது. பிறகு சிரமப்பட்டு அவர்களைச் சமாதானம் செய்தோம். இதிலே சங்கத்துக்கு ஏதும் லாபமில்லை என்பதை உறுதியாகக் கூறினோம். பிறகு ஆயிரம் டிக்கெட்டுகள் மட்டும் விற்க அனுமதி தந்திருக்கிறார்கள்."

"பொம்மை உலகம்" என்ற கூடத்தை அடைந்தார்கள் தந்தையும் மகனும். பல நீளமான மேஜைகளின் மேல் வண்ண விரிப்புகளைப் பரப்பி அதில் எண்ணிக்கை குறித்த விளையாட்டுப் பொருள்களைக் கொலு வைத்திருந்தார்கள். ஒவ்வொரு டிக்கெட்டின் விலை இருபத்தைந்து காசுதான். ஆனால் பரிசுப் பொருள்கள் மிக அதிக மதிப்புடையனவாக இருந்தன.

"அப்பா!" — பையன் சிணுங்கினான்.

"என்ன சம்பு?"

பையன் மூன்றாவது மேஜையைக் காட்டினான். அதில் பல பொம்மைகளுக்கிடையே ஓர் அழகான மோட்டார் வண்டி இருந்தது. பையன் முன்பே ஒருதரம் அது போல் தனக்கும் வேண்டும் என்று கேட்டிருக்கிறான். அவனுடன் கிண்டர்கார்டனில் படிக்கும் யஷ்வந்த் ரெட்டியிடம் அதைப் போல் ஒரு மோட்டார் இருந்தது. குழந்தையின் ஆவலைப் பூர்த்தி செய்யும் பொருட்டு அவர் அந்த மோட்டாரைக் கடைகளில் தேடியதுண்டு. ஆனால் அது விலைக்குக் கிடைக்காதாம். அமெரிக்க எண்ணெய்க் கம்பெனி விளம்பரத்தை முன்னிட்டுத் தயாரித்த அழகிய மோட்டார் அது. பெரிய கார் ஒன்றின் எல்லா உறுப்புக்களும் அதில் சிறப்பாக அமைந்திருந்தன. கல்லெண்ணெய்க் கடைக்காரர்கள் அதைத் தங்கள் வாடிக்கைக்காரர்களுக்கு மட்டும் கொடுத்தனர். அதிலும் கூடத் தாரதம்மியம் பார்த்தார்கள். அன்பளிப்பாகத் தந்தார்கள். ஆனால் பேராசிரியரிடம் கார் கிடையாது.

யாரோ நல்ல மனசு படைத்தவர் தமிழ்ச் சங்கத்துக்கென்று அதைப் பரிசாகத் தந்திருக்கிறார்கள். பேராசிரியர் அந்த மோட்டாரைக் கையில் எடுத்துப் பார்த்தார். குழந்தை அதை வாங்கி மார்புறத் தழுவிக் கொண்டான். 'வண்ணப் பதுமையை நினக்காக நான் வாங்கி வருகிற வேளையிலே' என்ற கீதாஞ்சலி அவருக்கு நினைவு வந்தது. பையனிடமிருந்து அதைத் திரும்பப் பெற்று மேஜையில் வைத்தார். சம்பந்தன் துடித்தான். "அதை வாங்கி விடுங்கள் அப்பா !"

# ஒரு டிரேடு மார்க்கிலே என்ன இருக்கிறது?




## ஏராளமான விஷயங்கள்

பெரும்பாலோர் நினைப்பதுபோல டிரேடு மார்க் என்பது ஒரு வியாபாரியின் வணிகச் சின்னம்தானா. அல்ல, அதற்கும் மேல். உதாரணமாக, மேலே காணப்படும் டிரேடு மார்க்கை எடுத்துக் கொள்ளுங்களேன். அது, கஸ்தூர்பாய் லால்பாய் சார்புள்ள ஏழு நெசவாலைகளின் தொகுதியான லால்பாய் க்ருப்புக்குச் சொந்தம். இந் நூற்றாண்டின் துவக்க கால முதலே, தரமான துணிகளைத் தயாரித்து வரும் ஆலைகள் அவை. அவற்றின் ஒற்றுமை, அனுபவம், முன்னேற்றம் ஆகியவற்றின் சின்னமே இந்த டிரேடு மார்க்.

முடிவாக, எனினும் முக்கியமாக, நேர்த்தியான துணிகளை நயமான விலைகளிலே நீங்கள் பெறுவதற்கான உத்தரவாதமே அந்த லால்பாய் டிரேடு மார்க்.

# லால்பாய் க்ருப்

தி அரவிந்த் மில்ஸ் லிமிடெட்.
தி ராய்ப்பூர் மானுபாக்சரிங் கம்பெனி லிமிடெட்.
தி அசோகா மில்ஸ் லிமிடெட்.
தி ஸர்ஸ்பூர் மில்ஸ் லிமிடெட்.
தி அருணா மில்ஸ் லிமிடெட்.
தி அகமதாபாத் நியூ காட்டன் மில்ஸ் கம்பெனி லிமிடெட்.
தி நூதன் மில்ஸ் லிமிடெட்.

# தலைவலியா?



# அவேதன்



## சாப்பிட்டு உடனடியாக நிவாரணம் பெறுங்கள்

SQUIBB

SARABHAI CHEMICALS



அற்புத 'எபேப்' அடங்கிய அவேதன தலைவலி, ஜலதோஷம், ஃப்ளூ மற்றும் இதர சாதாரண வலிகளிலிருந்தும் நோவுகளிலிருந்தும் துரிதமான, தீமையற்ற, நிச்சயமான நிவாரணத்தை அளிக்கிறது.

Shilpi SC 51A/67 Tam

அப்பா சங்க அலுவலரைப் பார்த்துக் கேட்டார். "இது என்ன விலை?"

அலுவலர் பாலு உதட்டைப் பிதுக்கினார். "இவைகளில் எவற்றையும் விலைக்குக் கொடுப்பதில்லை. டிக்கெட் மூலம் அதிர்ஷ்ட எண்ணைப் பெறுகிற குழந்தைக்கு இது கிடைக்கும்." மோட்டாரைக் கவிழ்த்தார் பாலு. '921' என்ற எண் ஒட்டப்பட்டிருந்தது. பேராசிரியர் கைப் பையைத் திறந்து ஒரு ரூபாய் நோட்டை எடுத்து மகனிடம் தந்தார். "நீயும் டிக்கெட் வாங்கு. அதிர்ஷ்டத்தையும்தான் பார்ப்போமே?"

பையன் களி வெறியோடு ஓடி க்யூ வரிசையில் நின்றான்.

நிகழ்ச்சி தொடங்க இன்னும் நேரம் இருந்தது. சங்கத்தின் செயலாளரும் மற்ற அன்பர்களும் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். 'இந்த ஆண்டும் நினைவு மலர் வெளியிட உத்தேசம். முன்னைப் போலவே உங்களுடைய உதவியைத்தான் நம்பியிருக்கிறோம்" என்று செயலாளர் கூறினார்.

"பொறுப்பைச் சர்மாஜியிடம் ஒப்படைத்து விட்டால் போகிறது. விளம்பரங்கள் சேகரிப்பதில் அவருக்கு ஈடு இணையே கிடையாதே!" பேராசிரியர் நகைத்தவாறு மொழிந்தார்.

"நம்முடைய ஆண்டு மலர் வெறும் கேட்லாக்காக இருப்பதில்லை என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே! அதுவும் இந்த மலரை நேருவின் நினைவாகக் கொண்டு வர இருக்கிறோம். முழுக்க முழுக்க அதைக் குழந்தைகள் இதழாகக் கொண்டு வர வேண்டும். வாஸ்வானியின் வாழ்க்கைச் சரித்திரத்தை அவருடைய தமிழ்ச் சீடர் ஒருவர் எழுதுகிறார். பின்னும்...."

"ஸார்! நீங்கள் அந்தப் புறநானூற்றுப் பாட்டுக்கு மட்டும் அவசியம் விளக்கம் எழுதித் தர வேண்டும். அதற்கு ஏற்றதாக வாஸ்வதி அம்மாளைச் சித்திரம் வரையச் சொல்லி விடுவோம்." செயற்குழு உறுப்பினர் கிருஷ்ணமூர்த்தி குறுக்கிட்டுக் கூறினார்.

"எந்தப் பாடலைச் சொல்லுகிறீர்கள்?"

"அதுதான் ஸார்!"

குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்...

பேராசிரியரைப் போலவே முகத்தில் பாவனையை வரவழைத்துக் கொண்டு கைகளைக் குழந்தையைப் போல் ஆட்டிக் காட்டி அபிநயம் செய்தார் மூர்த்தி. கூடமே நகையொலியில் அதிர்ந்தது. பேராசிரியர் வானத்தில் மிதந்தார்.

பையன் கையில் நாலு டிக்கெட்டுகளோடு வந்தான். அவனை அழைத்துக் கொண்டு அதிர்ஷ்ட எண்ணுள்ள 'பூத்'துக்குச் சென்றார் சுந்தரமூர்த்தி. அதற்குப் பொறுப்பாக நின்றவன் அவருடைய பரமசீடன் கோபு. பேராசிரியரை அன்புடன் வரவேற்று அவரிடம் நாலு எண்ணிக்கைச் சீட்டைக் கொடுத்தான். பரபரப்புடன் அவற்றைப் பிரித்துப் பார்த்தார். ஒன்றிலாவது '921' இல்லை. மௌனமாகச் சீட்டுக்களைப் பையனிடம் கொடுத்தார். அவன் 'பொம்மை உலக'த்திற்கு ஓடினான்.



"சபாஷ்! உனக்குச் சான்ஸ் கிடைச்சிருக்குன்னியே! ரேடியோவிலா? சபாவிலா? எங்கே கச்சேரி?"
"இரண்டும் நஹி ஸார்! இன்று யாரோ என்னைப் பெண் பார்க்க வராங்க. அவங்க எதிரில் பாடவேண்டியிருக்கு."

பேராசிரியர் சுற்றிலும் நோக்கினார். அந்தக் கூடத்தில் அவர்கள் இருவர் மட்டுமே! '921' இலக்கமுள்ள சீட்டைத் தமக்குத் தரும்படி கோபுவைக் கேட்டால் என்ன? சீ, இதென்ன எண்ணம்! அவருடைய நெஞ்சு வலித்தது. கூடவே சென்ற நினைவு மலர் வெளியீட்டில் தம்மால் சங்கத்துக்கு ஆறுயிரம் ரூபாய் லாபம் என்ற நினைவும் வந்தது. இப்படித்தான் நாம் வாழ்க்கையில் புரியும் பல செய்கைகளுக்குச் சமாதானம் கூறித் தப்பித்துக் கொள்கிறோம். இவ்வாறு ஓர் எண்ணம் இடையிட்டது. கோபுவுக்கு இது பெரிய காரியம் இல்லை. அவன் அதைச் செய்தாலும் செய்யக்கூடும். ஆனால் பின்னால் அவன் தன்னைப் பற்றி என்ன நினைப்பான்?

தான் பிரயாணம் செய்து கொண்டிருந்த கப்பல் மூழ்கப் போகிற வேளையில் பேராசிரியர் லாரென்ஸ் செய்தது அவர் நினைவுக்கு வந்தது. அவர் மகாமேதை. தத்துவ ஞானி. என்றாலும், சாவு எதிர்ப்பட்ட வேளையில் கிழவி ஒருத்தியிடமிருந்து லைஃப் பெல்ட்டைப் பலவந்தமாகப் பிடுங்கித் தரித்துக் கொண்டார். தம்முடைய உயிர் அந்த வயதான கிழவியுடையதைவிட மதிப்புள்ளது என்று தமக்குத்தாமே சமாதானமும் கூறிக் கொண்டார். அதன் விளைவாக அவள் தம் கண் முன்பு தண்ணீரில் மூழ்கித் தவித்துப் போய் இறப்பதையும் பார்த்தார். பிறகு வாழ்நாள் முழுதும் அந்தக் காட்சி அவருடைய கண் முன்பு தோன்றி நெஞ்சை இடித்துக் கொண்டே இருந்தது.

பையன் சம்பந்தன் எதிர்ப்பட்டான். அவனுடைய கையில் ஒரு ரப்பர் பந்து, ஊது குழல், பிளாஸ்டிக் பெல்ட், துப்பாக்கி எல்லாம் இருந்தன. என்றாலும் அவன் முகத்தில் நிராசை பிரதிபலித்தது. அது பேராசிரியரின் முகத்திலும் நிழலாடிற்று. "மோட்டார்

கிடைக்கவில்லே அப்பா!'' — பையன் பொருமி ஞன். சுந்தரமூர்த்தி இன்னும் ஒரு ரூபாயை எடுத்து அவனிடம் கொடுத்தார். சிறுவன் மறுபடியும் ஓடுகிறான் — கவுண்டருக்கு....

## இன்னெரு கரீனே

''குழலினிது யாழினிது என்பர்....''

பேராசிரியரின் உடல் புல்லரித்தது. அத்தகைய இனிய குரல்.பல முறை படித்துக் கேட்டுப் பாடம் சொல்லி அநுபவித்த வரிகள்தாம். என்ருலும் அந்தப் புன்னகை வராளிப் பதம் மின் இரசம் போல் உயிர் நரம்புகளில் எல்லாம் ஓடி அவற்றுக்குக் குளிர்ச்சியை உண்டாக்கிற்று. தொடர்ந்து அதே வரிகளைக் குழலில் இசைத்தார்கள். அடுத்து அந்த வார்த்தைகளையே வீணையும் பேசிற்று. சின்னஞ் சிறு மதலை ஒன்று மைக்கின் முன் வந்து சபையினரை வணங்கி:

''எந்தம் மழலைச் சொல் கேளாதவர்''

என்று பாடத்தைச் சற்று மாற்றித் தம் இன்னே மொழியில் பகர்ந்த போது சபையே பேரரவம் செய்தது. அத்தனை கைதட்டல். ரோஜாக் கன்னமுடைய அந்தக் குழந்தையை அள்ளி அணைத்துக் கொள்ள வேண்டும் என்று தோன்றியது அவருக்கு. தம் இருக்கையில் வந்து அமர்ந்து நிகழ்ச்சி நிரலைப் பிரித்துப் பார்த்தார். பாரதியார், வள்ளியப்பா, தூரன், பாரதன் ஆகியோருடைய படைப்புக்களும் பெரும்பாலும் இடம் பெற்றிருந்தன. இந்த நிகழ்ச்சி ஆரத்தைக் கோர்த்த கல்பகம் அம்மையார் மகா ரசிகை. அவரை நேரில் கண்டு தம் பாராட்டுதல்களைத் தெரிவிக்க வேண்டும் என்று அவருடைய உள்ளம் எண்ணமிட்டது.

புதிய ஆத்திச்சூடியை அபிநயங்களுடன் இணைத்துக் கொண்டிருந்தனர் குழந்தைகள். சம்பந்தன் மெள்ள அவர் அருகில் வந்தான். 'டிக்கெட்டெல்லாம் தீர்ந்து போச்சாம் அப்பா!.' அவனுடைய குரலில் ஏமாற்றம் நிழலிட்டது. குழந்தையின் கணங்கிய முகத்தைப் பார்க்கப் பொருது அவனைப் பக்கத்து ஸீட்டில் உட்கார வைத்துவிட்டுக் கவுண்டருக்கு நடந்தார் சுந்தரமூர்த்தி.

துணைச் செயலாளர் மணியன் கணக்குப் பார்த்துக் கொண்டிருந்தார். ''ஏன் ஸார், டிக்கெட்டெல்லாம் விற்றுப் போச்சாமே?'' என்று பேராசிரியர் வினவினுர்.

''ஆமாம், ஸார்! ஆயிரம் சீட்டுக்குத் தான் அனுமதி கிடைத்தது. மேலே இருநூறு விற்றுப் போய் விட்டது. என்ன பதில் சொல்லுவது என்று தெரியாமல் விழித்துக் கொண்டிருக்கிறேன்.'' அங்கிருந்து அவர் திரும்பும் போது ரவீந்திரரின் சிலேயின் அருகில் ஒருவர் உதிரி டிக்கெட்டுகளை இன்னெருவருக்குத் தந்து கொண்டிருப்பதைக் கண்டார். நடன அரங்கின் காவலாளி பேராசிரியரை அடையாளம் கண்டு கொண்டு கரம் குவித்தான். ''இனிமேகூட ப்ளாக் மார்க்கெட் ஸார், முந்துகே சால டிக்கெட்டிலே கொனி இப்புடு டபிள் சார்ஜ் பெட்டி.''

மனத்தில் கசப்புடன் குலுக்குச் சீட்டுள்ள இடத்தை மறுபடியும் அணுகினுர். அவரைக் கண்டதும் கோபு மரியாதையாக எழுந்து நின்ருன். ''டிக்கெட்டெல்லாம் முடிந்து விட்டதாமே!'' அசட்டுச் சிரிப்புடன் அவனை வினவினுர். அதற்குள் கோபுவை யாரோ அவசரமாக அழைத்தார்கள்.

''ஸார், ஒரு நிமிஷம்!'' என்று கூறி அவன் விரைந்து சென்ருன்.

அந்தக் கூடத்தில் அவரைத் தவிர யாருமே இல்லே. எல்லாருடைய கவனமும் அரங்கில் பதிந்திருந்தது.

பேராசிரியரின் உடலில் ஒரு பரபரப்பு. செயற்கை உஷ்ணம். நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டது. மெள்ள அந்தச் சீட்டுப் பெட்டியை அணுகினுர். சுற்று முற்றும் பார்த்துவிட்டுப் பெட்டிக்குள் சட்டென்று கையை விட்டுத் துழாவி ஒரு சீட்டை எடுத்து அதைப் பிரித்த போது. 'ஆஹா! எத்தகைய அதிர்ஷ்டம்! அவர் தேடிய எண் 921 அகப்பட்டு விட்டது.' அதைச் சுருட்டித் தன் கோட்டுப் பைக்குள் போட இருந்த வேளையில்.....

தன்னெஞ்சறிவது பொய்யற்க
பொய்த்தபின்...

அரங்கிலிருந்து எழுந்த பாடல் அவர் மண்டையில் ஓங்கி அடித்தது. சீட்டு பெட்டிக்குள்ளேயே திரும்பவும் நழுவிற்று. சூதாட்டத்தில் பெருந் தொகையை இழந்த தோல்வி நெஞ்சுடன் சுந்தரமூர்த்தி இயேட்டருக்குள் நுழைந்தார். அவருடைய தொய்ந்த உடல் தள்ளாடிற்று.

அடுத்தடுத்து நல்ல நிகழ்ச்சிகள் தொடர்ந்தன. ஆயர்பாடியில் பெரியாழ்வாரின் கண்ணன் திருவிளையாடல் புரிந்தான். காக்கையைக் காட்டி மகனுக்கு உணவூட்டும் தாய் கோசலே அவையில் வந்தாள். துளஸிதாஸரின் அந்தப் பிரபலமான அவதி மொழிப் பாடல் சலங்கை ஒலிக்கேற்ப இசைத்தது.

கௌஸல்யா ஜப் போலன் ஜாயீ
ருமுக் ருமுக் ப்ரபு சல்ஹி பராயீ :

தாயின் வேண்டுகோளுக்கிணங்க நிறையப் பாலைக் குடித்து விட்டுத் தலைமயிர் வளர்ந்திருக்கிறதா என்று விரலால் அளந்து பார்க்கும் கேசவன். பூச்செடிகளைப் புதுக் கத்தியால் சீவி நாசமாக்கிய ஜார்ஜ் வாஷிங்டன், தன்மான உணர்ச்சிக்காக மகனின் உயிரையே பணயம் வைத்த ஸ்விஸ் நாட்டு வில்லியம் டெல். கலே நிகழ்ச்சிகள் அவரைப் பனி நீரால் நனைத்தன.

## பின்னும் ஒரு கரீனே

மரகதத் தீவின் கரையில் வாலிபத் துறவி ஒருவன் நிற்கிறன். அவனது கண்களில் கனிவு கசிகிறது. கருட்டப்பெற்ற பாயுடன்கூடிய கப்பல் ஒன்று நங்கூரம் பாய்ந்து நிற்கிறது. கடலிலும் பேரமைதி. நீர்ப் பறவைகள் கப்பலே வட்டமிடுகின்றன. துறவி பிரியாவிடை பெறுமுன்பு அந்தத் தீவில் வாழும் மக்கள் அவனைச் சூழ்ந்து நிற்கின்றனர். தொழிலாளி, உழவன்,




"நான் அது மசால்வடைன்னு நினைக்கிறேன். நீ என்ன நினைக்கிறே?"

"காக்காய் ரொம்ப நல்லாப் பாடுமாமேன்னு நினைக்கிறேன்."

---

கலைஞன், வணிகன் அனைவரும் அவனிடமிருந்து செய்தியும் ஆசியும் பெறுகின்றனர்.

அல்முஸ்தஃபாவின் முன்பு குழந்தையைக் கையில் ஏந்திய தாயார் ஒருத்தி வந்து நிற்கிறாள். 'இளங்கோ முஸ்தாஃபா, என் குழந்தையை ஆசீர்வதியுங்கள்.''

''உன் குழந்தை.'' துறவி குறுநகை புரிகிறான். ''ஆம், உன் குழந்தைதான். உனது நிறைவேறாத ஆசை, நெட்டைக் கனவு, அழுக்கு, அனைத்தும் உன் கருவில் உருப்பெறுகின்றன. என்றாலும் நீ ஒரு நிமித்தம்தான். உன்னை வழியாகக் கொண்டு ஒருயிர் தனது கர்மவினைகளைக் கழித்துக் கொள்கிறது......''

நிகழ்ச்சிக் கதையின் மூலக் கருத்து கவிஞரும் ஞானியுமான கலீல் ஜிப்ரானுடையது என்ற விவரம் பேராசிரியரின் நினைவுக்கு வந்தது. 'தீர்க்கதரிசிகளும் ஞானிகளும் கிழை நாடுகளில்தான் பிறக்கிறார்கள். இந்த ஜிப்ரானும் லெபனானைச் சேர்ந்த கத்தோலிக்க கிறிஸ்தவர். என்றாலும் இவர் அமெரிக்காவில் மணம் பரப்பினார். இந்தக் கவிஞருடைய நூல்கள் இலட்சக் கணக்கில் விற்பனை ஆயின. இவர் சிறந்த சிற்பியுங்கூட. சிற்ப நுட்பத்தில் இவர் வில்லியம் ப்ளேக்கின் உத்தியைப் பின்பற்றினார். மேல்நாட்டின் மிகச் சிறந்த அறிவாளிகள் இவரைப் போற்றி வழிபட்டனர். கவிமணி பார்பரா யங் என்ற சீமாட்டி இவருக்குச் செயலாளராகப் பணிபுரிந்தார். எல்லாப் பெரிய யோகிகளைப் போல் இவரும் புற்றுநோய்க்கு இரையானார். அருகில் அமர்ந்திருந்த சொக்கலிங்கத்துக்கு ஜிப்ரானைப் பற்றிக் கூறி மகிழ்ந்தார் சுந்தரமூர்த்தி.

இடைவேளைக்குப் பிறகு கலை நிகழ்ச்சியைக் குறித்துச் சில வார்த்தைகள் பேசும்படி பேராசிரியரை வேண்டிக் கொண்டார் சங்கத் தலைவர். சுந்தரமூர்த்தியின் மனம் பல காரணங்களினால் கனிந்துபோயிருந்தது. அவர் மேடையிலேறி நிகழ்ச்சியை ஏற்பாடு செய்தவர்களையும் குழந்தைகளையும் பாராட்டினார். தமக்கே உரிய கற்கண்டுப் பாணியில் குழந்தைகளுக்குப் புரியும் வகையில் நிறுத்தி நிறுத்தி அழகாகப் பேசினார். 'அப்பா! நான் வேண்டுதல் கேட்டருள் புரிதல் வேண்டும்' என்ற குழந்தைப் பிரார்த்தனையான அருட்பாவை விளக்கி அனைவரையும் மெழுகுப் பாவைகளாக உருக்கினார். கடைசியில் சிற்றுரையை முடிக்கும்போது அவர் இறுதியாகக் கூறிய சொற்கள் எல்லாரையும் கவர்ந்தன. ''இறைவா, நான் உன் குழந்தை. அதை என்றும் மறக்காமல் இருக்க அருள் செய்.'' பேராசிரியர் ஒருவரால்தான் அந்தமாதிரி உள்ளம் நெகிழப் பேச முடியும்.

''உங்களுடைய பாராட்டுரையும் ஒரு சிறந்த கலை நிகழ்ச்சியாக அமைந்துவிட்டது'' என்று அவருடைய அன்பர்கள் போற்றினார்கள். கும்மியும் கோலாட்டமும் தொடர்ந்து நடந்தன. பாரதிதாசனின் 'நல்ல பெண்மணிக்கு' எல்லாக் கைகளும் தாளமிட்டன. நிகழ்ச்சி முடியும் தறுவாயில் கல்வி மந்திரியை வழியனுப்பும் பொருட்டுப் பேராசிரியரும் மற்றப் பெரும் புள்ளிகளும் சபையை விட்டு நீங்கினர். அப்போதுதான் தம் கைப் பையை மகனிடம் கொடுத்து விட்டுச் சென்றார் சுந்தரமூர்த்தி. அவர் திரும்பும் போது பையன் தன் இருக்கையில் இல்லை. சில நிமிஷங்கள் சுற்றும் முற்றும் பார்வையைச் செலுத்திவிட்டு அவர் அமைதியின்றி உட்கார்ந்திருந்தார்.

திரை விழுவதற்குச் சிலகணங்கள் முன்பே தம் இடத்துக்கு வந்த சம்பந்தனைக் கடிந்து கொண்டார் தகப்பனார். ''எங்கே போயிருந்தாய்?'' என்ற அவருடைய கேள்விக்குப் பையன் நேரான விடை அளிக்கவில்லை. சுற்றி வளைத்து மழுப்பினான். கைக்கடிகாரத்தைப் பார்த்தார் சுந்தரமூர்த்தி. மணி பத்து. பையனுக்குத் தூக்கக் கலக்கமாக இருக்க வேண்டும் என்று அவர் கருதினார்.

## கடைசிக் கரணை

இப்போது விளங்கிற்று, அவன் எங்கே போயிருந்தான் என்று. தான் விரும்பிய போட்டோவை வாங்க அந்த நேரத்தில்தான் காட்சி மேஜையிலிருந்து அவருடைய கைப் பைக்கு இடம் மாறியிருக்க வேண்டும்.

ஆர்பலீஸ் நீலக் கரையில் துறவாடை தரித்த அல்முஸ்தஃபா குழந்தையை ஏந்தி நின்ற தாயிடம் கூறுகிறான். அந்தக் காட்சியும் சொல்லும் மறுபடியும் அவருடைய கண் முன்பு விரிந்தன.

''உன் குழந்தை. ஆம், உனது நிறைவேறாத ஆசை, நெட்டைக் கனவு, அழுக்கு அனைத்தும் உன் கருவில் உருப்பெறுகின்றன. உன்னை வழியாகக் கொண்டு ஒருயிர் தனது கர்ம வினைகளைக் கழித்துக் கொள்ளுகிறது.''

பளபளவென்றிருந்த அந்தப் பொம்மை மோட்டாரைத் தடவிப் பார்க்கத் தம் விரல்களை அருகில் கொண்டு போனார் பேராசிரியர். அவருடைய கை கூழைப் பாம்பைத் தீண்ட இருப்பது போல் கூசிற்று.

தமது இரு கரங்களாலும் தலையைத் தாங்கிக் கொண்டு கேவிக் கேவி அழத்தொடங்கினார் பேராசிரியர்.

எங்கள் ஊரில் சுமார் நூறு வீடுகள் இருக்கும். எனக்குத் தெரிந்த வரையில் இந்த நூறு வீட்டுக்காரர்களில் யாருக்குமே நாராயணசாமியைப் பிடிக்கவில்லை என்று தான் சொல்வேன். எல்லோருக்குமே அவன் விஷயத்தில் ஓர் அதிருப்தி; எதைக் கொண்டும் போக்க முடியாத ஓர் அதிருப்தி. இவ்வளவுக்கும் அவன் ஒன்பது வருடங்களாக ஊரிலேயே இருந்ததில்லை. அதற்கு முன்பும் ஒரு பத்து நாள் நீங்கலாகச் சுமார் மூன்று வருஷ காலம் அவன் வெளியூரில்தான் இருந்தான். மொத்தம் பன்னிரண்டு வருஷங்கள் ஊரிலேயே இல்லாமல் இருந்த ஒருவனை — யாரோடும் பகையோ சண்டையோ இல்லாத ஒருவனை ஏன் இப்படி ஊராருக்குப் பிடிக்காமல் போய் விட்டது? எதற்காக இந்த அதிருப்தி?.....

சரி, அவனைப் பிடிக்காமல் போனதற்காவது ஏதேனும் ஒரு கற்பனைக் காரணத்தைக் கண்டு பிடித்துச் சொல்லிவிடலாம். அவன் எங்கள் ஊரில் பிறந்து எங்கள் ஊரிலேயே இருபத்து மூன்று வருஷங்கள் இங்கேயே வாழ்ந்தவனாயிற்றே! ஆனால் அவன் மனைவி அலமேலுவையும், மகள் சரோஜினியையுமே ஊராருக்குப் பிடிக்கவில்லையே, இதற்கு என்ன காரணத்தை உற்பத்தி செய்ய முடியும்? இந்த இருவரையும் எங்கள் ஊரில் யாருமே இதற்குமுன் பார்த்ததுகூடக் கிடையாது. எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை.

நாராயணசாமி குடும்பத்தோடு எங்கள் ஊருக்கு வந்து மூன்று நாட்கள் ஆவதற்குள் எத்தனை பேர் எத்தனை விதமாக விமர்சனம் செய்து விட்டார்கள்! நினைத்தாலே ஆச்சரியமாக இருக்கிறது.

கான். பின்னேக்குக் காலிலே பூடுகா! வெறுங் காலோடே நடக்க முடியுமா, சீமான் பின்னேக்கு!'' என்று தெற்குத் தெரு வேலையா என்னிடம் வந்து சொன்னான். இப்படித் தன்னுடைய மனக் குறையை வெளியிட்டதன் மூலம் ஒரு சிறிது ஆசுவாசமும் அடைந்தான்.

''ஏன்டா, நாராயணசாமிப் பயல் முப்பதினாயிரம் ரூவா வரையிலும் கொண்டாந்திருக்கானாமே! எங்கேயாவது கொள்ளை அடிச்சானா? நம்ப முடியல்லையேடா!'' என்று அங்கலாய்த்தார் என் தகப்பனார்.

''முப்பதினாயிரம் ரூவா கொண்டாந்திருக்கான்னு ஒங்களுக்குச் சொன்னது யாரு?'' என்று நான் கேட்டேன்.

''ஊரிலே சொல்லிக்கிறாங்க!''

அப்போது என் தாயார் சொன்னாள்: ''கிளப் யாவாரத்திலே இவ்வளவா கிடைச்சிரும்? கூட்டுச் சேர்ந்திருந்த பங்குக்காரனை மோசம் பண்ணி ரூவாயைத் தூக்கிக்கிட்டு வந்துட்டான்னு ஊரிலே சொல்றாங்கப்பா.''

''ஊரிலே எதையுந்தான் சொல்வாங்க. இவங்களுக்கு வேறே வேலை?'' என்றேன் நான்.

''அவங்க சொல்றது நம்புறாப்புலேயும் இருக்கே! கையிலே அரைக் காசு இல்லாமே ஊரை விட்டுப் போன பயல், முப்பதினாயிரம் கொண்டாந்திருக்கானே! கோயம்புத்தூரிலே பணம் என்ன மரத்திலியா காச்சித் தொங்குது. புடுங்கிக்கிட்டு வாரதுக்கு? எவனை மோசம் பண்ணினானோ, எவன் அங்கே தலையிலே கையை வச்சிக்கிட்டு இருக்கானோ?''

''அம்மா! எவனாவது தலையிலே கையை வச்சிக்கிட்டு இருக்கட்டும். நீ



''சுப்பையா மகன் நாராயணசாமி காலையிலே பழையது சாப்பிட மாட்டானாமே! இட்டிலி காப்பிதான் சாப்பிடுவாராம் தொரை! இவனோட அப்பன் நேத்து வரைக்கும் மத்தியானக் கஞ்சிக்கு வழியில்லாமக் கெடந்ததுக்கு இவரு இட்டிலி காப்பி சாப்பிட வேண்டியதுதாக்!'' என்று மீனாட்சிக் கிழவி என் தாயாரிடம் வந்து ஆத்திரமாகச் சொல்லிக் கொண்டிருந்ததை நான் காதாரக் கேட்டேன்.

''அண்ணாச்சி! அற்பனுக்கு வாழ்வு வந்தா அர்த்தராத்திரியிலே குடை பிடிப்பானாம்! நம்ம நாராயணசாமி பெண்டாட்டிக்கு நூல் சேலை ஆகாதுன்னு பட்டுச் சேலை வாங்கிக் குடுத்துக் கட்ட வச்சிக் கூட்டியாந்திருக்

ஏன் இப்படிக் கவலைப்படறே?'' என்று சிறிது கோபமாகவே சொன்னேன்.

''எனக்கு என்னடா கவலை? அவன் மோசம் பண்ணிட்டு வந்தாத் தேவலையா? நாலு பேர் சொல்றதைச் சொன்னேன்'' என்று கடுகடுப்போடு சொல்லிவிட்டு என் தாயார் உள்ளே போய் விட்டாள்.

எங்கள் ஊரில் ஒவ்வொருவரும் மூன்று நாள் அல்லும் பகலும் பேசிக் கொண்டிருந்ததைச் சொல்வதென்றால் அதைப் போலப் பெரிய பாரதம் வேறொன்று இருக்க முடியாது.

நாராயணசாமியின் மனைவி அலமேலு — எங்கள் ஊருக்கே புதியவள் —

தினமும் குளித்துப் பட்டணத்துப் பாங்கில் காலா காலத்தில் சீவி முடித்துச் சுத்தமான உடைகளை அணிந்து கொண்டிருந்தாள். பார்ப்பதற்குத் தூய்மையாக மட்டுமின்றிக் களையாகவும் இருந்தாள். யாரோடும் சிரித்த முகத்துடன் கலகலப்பாகப் பேசினாள். அலமேலுவைக் குறை சொல்வதற்கு ஏதாவது அகப்படாதா என்று தவித்த பெண்களுக்கு ஒரு சில நிமிஷங்களுக்குள்ளாகவே எத்தனையோ விஷயங்கள் அகப்பட்டு விட்டன.

நாராயணசாமியின் மகள் சரோஜினிக்கு ஒரு காலில் சிரங்கு வெடித்திருந்தது. இதைப் பார்த்த மூக்கம்மாப் பாட்டி, ''பய மகளுக்கு இந்த வயசிலேயே என்ன ஒய்யாரம்! என்ன சொகுசு! பிஸ்கோத்தா வேணும்னு கேட்டில்லே அடம் பிடிக்கிறா! சோறு திங்க மாட்டாளாமே! காலிலே பூடுசு போட்டுக்கிட்டுத்தான் வெளியிலே வருவாளாம்! அந்தக் குட்டம்பத்திக் காலுக்குப் பூடுசு இல்லாட்டா நடக்க முடியாதோ? மொளைக்கிறதற்கு முன்னாலே என்ன திமிருன்னு பாருங்களேன்!'' என்று குமுறினாள்.

சரோஜினியின் சிரங்குக் காலைக் குஷ்டம் பற்றிய காலாகக் கற்பனை செய்த மூக்கம்மாப் பாட்டி அத்தோடு நிறுத்தவில்லை. ''முப்பது வருசம் வாழ்ந்தாருமில்லே; முப்பது வருசம் தாழ்ந்தாருமில்லே. என்னமோ கையிலே நாலு காசு இருக்குன்னு தலை கீழா நடக்கிறான் நாராயணசாமிப் பயல். மேலே பகவான் ஒருத்தன் பார்த்துக்கிட்டு இருக்கான் என்கிறதை மறந்துட்டான். பக்கத்து ஊருப் பெருமாள் தேவர் மகன் ராமலிங்கம் பயல் கிளி மாதிரி ஒருத்தியைத்தான் கலியாணம் கட்டினான். நகையோடே, சொத்தோடே தான் வந்தா அவ. கடைசியிலே என்ன ஆச்சு நெலைச்சுதா? கல்யாணம் கட்டின மறு வருசமே 'ஐயோ'ன்னு போயிட்டாளே!.... மூணு நாள் காய்ச்சலிலே! யாருக்கு என்ன நெலைப்பு? அதுக்குள்ளாற எத்தனை ஆட்டம்?''

# அதிருப்தி

கு. அழகிரிசாமி



"பாட்டி! எதுக்கு இப்படிப் பேசறே? ஒன்னே நாராயணசாமி என்ன செஞ்சான்? எதுக்கு இப்படி அநியாயமா கரிச்சுக் கொட்டறே?" என்று கேட்டுப் பாட்டியின் வாயை அடைத்தாள் என் தாயார். அதற்காக நாராயணசாமியிடம் என் தாயாருக்கு, அப்போ அனுதாபமோ பிறந்துவிட்டதாகக் கருதிவிட முடியுமா? எப்படி முடியும்? பாட்டியைக் கண்டால் எப்பொழுதுமே என் தாயாருக்குப் பிடிக்காது. அதனால் அவளை எதிர்த்துப் பேச வேண்டும், எதைச் சாக்கிட்டாவது ஒரு சூடு போட வேண்டும் என்று நினைத்து விட்டாள். இதில் சந்தேகமே வேண்டியதில்லை. சிறிது நேரத்துக்கு முன்பு இந்தப் பாட்டி பேசிய மாதிரியிலேயே என் தாயார் என்னிடம் வந்து பேசினாள் என்பதை நான் மறந்துவிட வில்லையே !

நான் நன்றாக ஆராய்ந்து பார்த்தேன். எவ்வளவு ஆராய்ந்தும் நாராயணசாமியையோ அவன் மனைவி மக்களையோ குறை சொல்வதற்கு நியாயமான காரணம் எதுவும் எனக்குப் புலப்படவில்லை. ஊர்க்காரர்களுக்கு அவன் நல் வாழ்வைக் கண்டு பொறாமை ! அதனால்தான் வயிறு எரிந்து வாய்க்கு வந்தபடி பேசுகிறார்கள் என்ற முடிவுக்கு வந்தேன்.

நான் இந்த முடிவுக்கு வந்த சமயத்தில் நாராயணசாமி ஒன்பது வருசங்களுக்குமுன் தன் தாயாரின் கருமாதிக்காக வந்ததும், அதற்கு மூன்று வருஷங்களுக்குமுன் பிழைப்புத் தேடி ஊரை விட்டுப் போனதும் என் ஞாபகத்துக்கு வந்தன.

பன்னிரண்டு வருஷங்களுக்கு முன் நாராயணசாமியின் தாயார் உயிரோடு இருந்தாள். அவனுடைய தமக்கையும்கூட விதவையாகிப் பிறந்த வீடு வந்து சேர்ந்திருந்தாள். வீட்டில் அவளைச் சேர்த்து நான்கு பேர். நால்வருமே அன்றாடம் கூலி வேலைக்குப் போய் ஜீவித்து வந்தார்கள். வாழ்க்கை சிரமமில்லாமல் ஓடிக் கொண்டிருந்தபோதே பருவ மழை சரிவரப் பெய்யாமல் விவசாயம் சீர்கெட்டது. இதனால் மற்றவர்களின் காடு கரைகளில் கூலி வேலை செய்து வந்தவர்கள் பாதிக்கப்பட்டார்கள். வேலை கிடைக்கவில்லை. கடன் வாங்கிக் காலம் தள்ளினார்கள். மறு வருஷம் நல்ல மழை பெய்து நாடு செழிக்கும் என்று எல்லோரும் எதிர்பார்த்தோம். ஆனால் எதிர்பார்த்தபடி மழை பெய்யவில்லை. அதற்கு அடுத்த இரண்டு வருஷங்களிலும் அதே கதைதான்; வானம் பொய்த்து விட்டது. ஒரே பஞ்ச நிலைமை. அரைப் பட்டினி, முழுப் பட்டினி கிடப்பது சகஜமாகி விட்டது. பசிக் கொடுமை தாங்காமல் எந்த ஊருக்காவது போய்ப் பிழைப்போம் என்று அவன் ஒரு நாள் ஊரை விட்டுப் போனான். போனவனைப் பற்றி ஒரு வருஷம் வரையிலும் எதுவும் தெரியவில்லை. அப்புறம்தான் தகவல் வந்தது. எங்கெங்கோ சுற்றி அலைந்து விட்டுக் கடைசியில் கோயமுத்தூரில் ஒரு காப்பி ஹோட்டலில் வேலைக்கு அமர்ந்திருப்பதாகத் தகப்பனுக்கு அவன் கடிதம் எழுதியிருந்தான். பிறகு அவன் மாதா மாதம் பதினைந்து இருபது என்று பெற்றோர்களுக்குப் பணம் அனுப்பவும் தொடங்கினான். பஞ்ச காலத்தில் இந்தச் சொற்பமான மணியார்டர் வரவு பாலைவனத்தில் தூறல் விழுந்தது மாதிரிதான் இருந்தது என்றாலும் அதைக் குபேர சம்பத்தாகவே பாவித்துப் பலரும் பேசிக் கொண்டார்கள்: "அவனுக்கு (நாராயணசாமியின் தகப்பனுக்கு) என்ன, மகராசன்! மாசம் தவறினாலும்.: மணியார்டர் வர்றது தவறுவதில்லே. குடுத்து வைச்சவன்! பிள்ளையைப் பெத்தா அப்படிப் பிள்ளையைப் பெறணும்."

இப்படிப் பேசிக் கொண்ட ஊர்க்காரர்களே சில மாதங்களுக்குப் பிறகு ஒரு சமயம் நாராயணசாமியின் மணியார்டர் வருவதற்குக் கால தாமதமானதைப் பார்த்தார்கள் ; அவனுடைய பெற்றோர்கள் என்னவோ ஏதோ என்று கலங்கிப் போயிருந்ததையும் கேள்விப்பட்டார்கள். உடனே, "பயலுக்கு வேலை போயிருக்கும். இல்லேன்னு அவன் சம்பாதிக்கிற காசைச் சாப்புடுறதுக்கு எவளாவது வந்து சேர்ந்திருப்பா. வயசு அப்படிப்பட்ட வயசாச்சே !" என்று பேசினார்கள். இரண்டொருவர், நாராயணசாமி ஒரு வேளை செத்துப் போயிருக்கக் கூடும் என்றும், மணியார்டர் நின்றதற்கு அதுதான் காரணமாக இருக்க வேண்டும் என்றும் அபிப்பிராயப்பட்டார்கள். எல்லாம் ஒரு பத்து நாள் தாமதத்தில் முளைத்த அபிப்பிராயங்கள். பிறகு மணியார்டர் வந்து விட்டது. அவசரப்பட்டு அபிப்பிராயம் சொன்ன ஒவ்வொருவரும் மற்றவர்கள்தான் இப்படியெல்லாம் சொன்ன மாதிரிப் பேசிக் கொண்டார்கள்; கைகொட்டிச் சிரிக்கவும் சிரித்தார்கள்.

நாராயணசாமி ஊரை விட்டுப் போன மூன்றாவது ஆண்டில் அவனுடைய தாயார் நோய்வாய்ப்பட்டு இறந்தாள். அவன் புறப்பட்டு வர மேற்கொண்டு ஒன்றரை நாள் ஆகும் என்பதாலும், மொத்தம் இரண்டு நாட்களுக்குச் சடலத்தை வைத்துக் கொண்டிருக்க முடியாது என்பதாலும் அவன் இல்லாமலே இங்கே தகனம் செய்து விட்டார்கள். பன்னிரண்டாம் நாள் காரியத்துக்குத்தான் நாராயணசாமி வந்தான். அப்போது கொண்டு வந்திருந்தது முப்பது ரூபாய்தான். அதை வைத்து எப்படியோ காரியத்தை நிறைவேற்றினான்.

அப்புறம் அவன் கோயமுத்தூருக்குத் திரும்ப வேண்டும். கையில் பணமில்லை. ரயில் செலவுக்குப் பத்து ரூபாய் தேவை. ஊரெல்லாம் அலைந்தான். கடன் கொடுத்து உதவ வேண்டும் என்றும், அடுத்த மாதமே பத்து ரூபாயை மணியார்டர் செய்து விடுவதாகவும் சொல்லி ஒவ்வொருவரையும் கேட்டான்; ஒவ்வொருவரையும் கெஞ்சினான். கடைசியில் கும்பிடவும் செய்தான். ஆனால் ஊரில் அத்தனை பேருமே ஒரே மாதிரி கையை விரித்து விட்டார்கள். இவனுக்குக் கடன் கொடுத்தால் அந்தப் பாவம் ஏழு ஜன்மத்துக்கும் விடாது என்று நினைத்தார்களோ ?.... அல்லது, இவனுக்குக் கடன் கொடுப்பதை விட அந்தப் பணத்தை ஆற்றிலோ குளத்திலோ போடலாம் என்று நினைத்தார்களோ, என்ன நினைத்தார்களோ, யாரும் கொடுக்கவில்லை. ரூபாய்க்குக் கால் ரூபாய் வட்டி

தருவதாகவும் சொல்லிப் பார்த்தான். அதுவும் பலிக்கவில்லை. இந்த நிலையில் அவன் என்னைத் தேடி வந்தான்.

''நேத்தே ஒங்ககிட்ட வரலாம்னு நினைப்பு. ஆனா ஒரு சந்தேகம். 'அப்பாதான் வரவு செலவெல்லாம் பார்க்கிறார். என்கிட்டே பணம் ஏது?' ன்னு சொல்லிப்பிடுவிங்களோன்னுட்டு ஒரு பயம்.... அப்பாகிட்டே எனக்காக நீங்கதான் சொல்லணும். நீங்க சொல்லி வாங்கித் தரலேன்னா நான் ரயில் ஏற முடியாது. நாளைக்கு நான் போகல்லேன்னா, எங்க மொதலாளி கோவிச்சுக்கிட்டு வேற ஆளை வேலைக்கு வச்சிடுவாரு. அரும்பாடு பட்டுத் தேடின வேலையை எழக்குறுப்பிலே ஆயிரும்....'' என்று பலவாறாகத் தனது கஷ்டத்தைச் சொல்லி என்னையும் கையெடுத்துக் கும்பிட்டான். அப்போது அவனுக்குக் கண்ணீரும் ததும்பியது.

''நான் நாலணாவுக்குப் பதிலா ஆறணா வட்டி. வேணும்னாலும் தர்றேன்'' என்று அவன் சொல்லத் தொடங்கினான். உடனே நான் எழுந்து உள்ளே போனேன். யாரையும் கேட்காமலே பத்து ரூபாயை எடுத்துக் கொண்டு வந்து அவனிடம் கொடுத்தேன்.

''வட்டி ஒண்ணும் தர வேண்டாம். அனுப்புற போது அனுப்பு'' என்றேன்.

ரூபாய் நோட்டை உள்ளங் கைகளுக்கு இடையில் வைத்துக் கொண்டு மறு முறையும் அவன் என்னைக் கும்பிட்டான். அந்தச் சமயம் பார்த்து என் தாயார் வெளியே வந்தாள். கையில் கிடைத்த பணத்தை அவள் கட்டிப் பறித்துக் கொள்வாளோ என்று நாராயணசாமி பயந்தது அவன் முகத்திலும் பிரதிபலித்தது.

ஆனால் அம்மா பணத்தைப் பறிக்க வரவில்லை. அவன் மானத்தைத்தான் பறிக்க வந்திருக்கிறாள் என்பது அப்புறம்தான் தெரிந்தது.

''நாராயணா! வெளியூரிலே போய்ச் சம்பாதிக்கிறவன் உள்ளூரிலே வந்து கடன் கேக்கிறியே, ஒனக்கு வெக்கமாயில்லே? வயசு இருபத்தஞ்சாகுதே. இப்போ சம்பாதிக்காம எப்போ சம்பாதிக்கப் போறே? இதுக்குள்ளே நாலு காசு தேடி வச்சிருப்பே — கலியாணம் காச்சி பண்றதுக்குன்னு நாங்க நெனெச்சுக்கிட்டிருந்தோம். நீ என்னடான்னா அம்மா கருமாதிக்கே அம்பது ரூவாய்க்கு வக்கில்லாமே வந்திருக்கே! திரும்பிப் போறதுக்கு ரயில் செலவுக்கு இல்லேன்னும் வந்து நிக்கிறியே, நீ ஆம்பிளைப் புள்ளைதானா?''

அம்மாவின் சொல்லம்புகளை என்னாலேயே தாங்க முடியவில்லை.

''அம்மா! ரூவாயைக் குடுத்துட்டேன். இனிமே பேச்சு எதுக்கு? அவனாலே சம்பாதிக்க முடியல்லேன்னா, அது அவன் குத்தமா?'' என்று நான் சீறி விழுந்தேன். அதற்காக அம்மா இரண்டு மூன்று நாட்கள் என்னோடு பேசவில்லை.

அவன் மறு நாளே கோயமுத்தூருக்குப் பயணமானான். மறு மாதமே எனக்குப் பணத்தை அனுப்பி விட்டான்.

அதன் பிறகு அவனைப் பற்றிக் கேள்விப் பட்ட ஒவ்வொரு செய்தியுமே எனக்கு மகிழ்ச்சி அளித்தது. நாராயணசாமி ஓர்



''எதற்கு எனக்கும் டிக்--கட் தருகிறீர்கள்!''

''ஏற்கனவே நீங்கள் இந்தச் சினிமாவைப் பார்த்தாச்சு என்பதற்காக, வரப் போகிற ஒவ்வொரு காட்சியையும் முன்கூட்டியே சொல்லிக் கதை சுவாரசியத்தைக் கெடுக்கிறீர்களே, அதைத் தடுக்க.''

ஆளுடன் கூட்டுச் சேர்ந்து கோயமுத்தூரில் ஒரு ஹோட்டல் ஆரம்பித்திருப்பதாக அவனுடைய தகப்பனாரே என்னிடம் ஒரு நாள் சொன்னார். அவன் என்னிடம் கடன் வாங்கிச் சென்று இரண்டரை வருஷங்கள் கழித்துக் கேள்விப்பட்ட செய்தி, சொந்த ஹோட்டல் தொடங்கி விட்டதாக. இந்நாவது மாதத்தில் நாராயணசாமி கோயமுத்தூரில் ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டதாகவும் செய்தி வந்தது. நண்பர்கள் முன்னிலையில் திருமணம் நடைபெற்றதாக அவன் கடிதம் எழுதியிருந்தான். தகப்பனாரும் அக்காளும் வராமலே திருமணத்தை முடித்துக் கொண்டதற்கு என்ன காரணம் என்பதையும் அவன் அப்பாவுக்குத் தெரிவித்திருந்தான். கோயமுத்தூருக்கு வந்து செல்ல அவர்களுக்குப் பணம் அனுப்பவும், உற்றார் உறவினரை அழைக்கவும் வசதி இல்லாமல் போய் விட்டதாம். மொத்தம் நூறு ரூபாய்ச் செலவிலேயே திருமணத்தை முடித்துக் கொண்டானாம். இப்படி அவன் எழுதியதை ஊர் மக்கள் உண்மை என்று ஒப்புக் கொள்ள மறுத்தார்கள்......''

நாராயணசாமி நடத்தை கெட்டுப் போய் விட்டான் என்றும், இனி ஊருக்குப் பணம் அனுப்ப மாட்டான் என்றும் ஊர்க்காரர்கள் முடிவு கட்டிவிட்டார்கள். ஆனால், வழக்கம் போல் மறு மாதமும் மணியார்டர் வந்தது! ஊர்க்காரர்கள் திடுக்கிட்டு விட்டார்கள். அவர்களுக்கு இதைவிடவும் அதிர்ச்சி தரக் கூடிய ஒரு விஷயம் அடுத்த வருஷம் நடந்தது. நாராயணசாமியின் மைத்துனன் ஒருவன், குற்றாலத்துக்கு வந்துவிட்டு, எங்கள் ஊருக்கும் வந்தான். இரண்டு நாள் தங்கியிருந்தான். நாராயணசாமி முறைப்படியே கல்யாணம் செய்து கொண்டவன் என்பதற்கு வேறு என்ன சான்று வேண்டும்? அவன்

மைத்துனனாக இருப்பது ஒன்றே போதாதா? தவிரவும் அவன் மைத்துனன்தான் என்பதையும் அவன் எங்கள் ஊருக்கு வரப் போகிறான் என்பதையும் ஒரு வாரத்துக்கு முன்னதாகவே நாராயணசாமி கடிதம் எழுதித் தெரிவித்தும் இருந்தான். மைத்துனன் வந்து இருந்துவிட்டுச் சும்மா போய் விடவில்லை. நாராயணசாமியின் வீட்டு ஓலைக் கூரையைப் பிரித்து விட்டுச் சீக்கிரத்தில் ஒடு போடப் போவதாகவும் சொன்னான். அதற்காக என்ன செலவாகும் என்பதையும் கணக்குப் போட்டுப் பார்த்தான். கடைசியில் ஒடு வாங்குவதற்கு வேண்டிய பணத்தை நாராயணசாமி கொடுத்து அனுப்பியதாகச் சொல்லி அவனுடைய தகப்பனாரிடம் கொடுத்து விட்டுப் போனான். மறு மாதமே கூரை வீடு ஒட்டு வீடாக மாறிவிட்டது.

அப்புறம் நாலைந்து வருஷங்கள் கழித்து இப்பொழுது நாராயணசாமி ஊருக்கு வந்திருக்கிறான். அவன் சம்பாதிக்காததற்காக முன்பு மனம் போனபடி யெல்லாம் குறை கூறிப் பேசிய ஊர்க்காரர்கள் இப்போது அவன் பணம் தேடிக் கொண்டு வந்திருக்கும் நிலையில் அவனை மெச்சிப் பாராட்டுவார்கள் என்று நான் நினைத்தேன். ஆனால் என் நினைப்பு பொய்யாகி விட்டது.

நான்காம் நாள் நான் நாராயணசாமியை அவன் வீட்டுக்கே போய்ப் பார்க்க வேண்டும் என்று முடிவு செய்தேன். காரணம் ஊர்ப் பேச்சுக்கள் இருக்க இருக்க வகை தொகை இல்லாமல் தாறுமாறாகப் போக ஆரம்பித்ததுதான்.

எங்கள் ஊரில் செயலான குடும்பங்களைச் சேர்ந்த நாலைந்து வாலிபர்கள் ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டு அலமேலுவையும் அவளுடைய அங்க அமைப்புக்களையும் பற்றி ஆபாசமாகப் பேசிக்கொண்டிருந்ததை அன்று அந்திக் கருக்கலில் நான் கேட்டேன். அத்தனை பேரும் சின்னத்தனத்தின் விகவ ரூபங்கள்.

நான் துணிந்து கேட்டு விட்டேன்: ''இப்படிப் பேசலாமா? நியாயமா இது? ஊரான் பொஞ்சாதியைப் பத்தி நாம இப்படிப் பேசினா, நம்ம வீட்டுப் பொண்களைப் பத்தி இன்னொருத்தன் பேச எவ்வளவு நேரம் ஆகும்?''

நான் இவ்வாறு கேட்டதும் அவர்களுக்குச் சிரிப்புத் தாங்க வில்லை. மகிழ்ச்சிப் பெருக்குடன் உரக்கச் சிரித்தார்கள்.

''பேசினா என்ன? கத்திரிக் காயின்னா பத்தியமா முறிஞ்சு போகும்? நாங்க என்ன அவளைக் கடிச்சா தின்னுட்டோம்?'' என்று ஒருவன் சொன்னான். உடனே எல்லோரும் பைத்தியக்காரர்களைப் போல் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

மேற்கொண்டும் நான் பேசினால் அவர்களுடைய உற்சாகமும் ஆபாசப் பேச்சும் அதிகமாகுமே ஒழிய, அவர்கள் திருந்தப் போவதில்லை என்று கருதி, ''தப்பு. இது நன்றாயில்லை'' என்று மட்டும் சொல்லி விட்டு வீட்டுக்கு வந்துவிட்டேன்.

நாராயணசாமியோ அவன் மனைவி மக்களோ எங்கள் ஊரில் இனி ஒரு நாள் கூடப் பத்திரமாக இருக்க முடியாது என்று எனக்குத் தோன்றி விட்டது. உடனே அவனைத் தேடி அவன் வீட்டுக்குச் சென்றேன்.

எனது எதிர்பாராத வருகையைக் கண்ட அவன் இரட்டிப்பு மகிழ்ச்சியுடன் என்னை வரவேற்றான். பிரமாதமாக உபசரித்தான். அவன் கட்டாயத்துக்கு இணங்க அன்றிரவு அங்கேயே நான் சாப்பிட்டேன். சாப்பிட்டு விட்டு இருவரும் வெற்றிலை போட்டு கொண்டிருந்தோம். இரவு எட்டு மணி இருக்கும். திடீரென்று ஒரு கிழவர் — எங்கள் ஊரில் மேலத் தெருவில் வசிப்பவர் — வந்தார். அவரையும் அவன் வரவேற்று உட்காரச் சொன்னான். ஆனால் கிழவரோ வந்ததும் வராததுமாக, ''நாராயணசாமி! ஒரு சமாசாரம் கேள்விப்பட்டேன்.....'' என்று ஆரம்பித்தார்.

''என்ன சமாசாரம், தாத்தா, சொல்லுங்க!'' என்றான் நாராயணசாமி.

''கோயம்புத்தூரிலேயிருந்து ரொம்ப ரூவா கொண்டாந்திருக்கிறேன்னு சொன்னாங்க.''

''அப்படியெல்லாம் ஒண்ணுமில்லே....!''

''அது சரி. நான் சொல்றதைக் கொஞ்சம் கேளு. இதைச் சொல்றதுக்குத்தான் நான் வந்தேன். என்னன்னா, நீ கொண்டாந்திருக்கிற ரூவாயைத் தாட்டுப்பூட்டுன்னு செலவழிச்சிராதே. பிடிச்சிச் செலவழிக்கணும். இந்தா பாரு. முப்பதினாயிரத்தையும் நெலத்திலே போடு. பிஞ்சையைத் தோட்டத்தை வாங்கு. வெளிச்சம் போடாதே. பணம் நிக்காது. காத்தாப் பறந்துரும். பறந்துட்டதுன்னா, ஒன் கதி அதோ கதிதான். பொறகு சட்டியைத்தான் தூக்கணும்!'' என்று கிழவர் சொன்னதும், 'அட பாவி! இந்த வயசிலே ஒனக்கு ஏன் இப்படி வயித்தெரிச்சல்? வெஷமாக் கக்குறியே! சட்டி தூக்கற வார்த்தை ஏன் ஒன் வாயிலேருந்து வருது?' என்று சொல்லிக் கொண்டேன்.

கிழவர் அதோடு உபதேசத்தை நிறுத்திக் கொண்டு, ''சரி, நான் போயிட்டு வர்றேன். இதைச் சொல்லத்தான் வந்தேன்'' என்று சொல்லி விட்டு, ஏதோ கோபித்துக்கொண்டு போகிறவரைப் போல் வேகமாக வெளியே போய் விட்டார்.

''நாராயணசாமி! சாகப் போகிற வயசிலேகூட இந்தக் கெழவனுக்குப் புத்தி எப்படி இருக்குன்னு பார்த்தியா? என்னமா எரிஞ்சி சாகிறான்? ஏன் ஒன் மேல் இந்தப் பொறாமை? ஊரிலே அத்தனை பேருமே பொறாமைக்காரப் பயல்களா இருக்காங்களே, என்ன இது?'' என்று கேட்டேன்.

''இது பொறாமையா?'' என்று தெரியாதவனைப் போல் கேட்டான் நாராயணசாமி.

''பொறாமை இல்லாமே வேறே என்ன?''

''பொறாமைக்காரங்களா இருந்தா, இன்னொருத்தன் கஷ்டப்படறதைப் பார்த்துச் சந்தோஷப்படவில்லே செய்வாங்க? அப்படி இவங்க சந்தோஷப்படல்லியே! முந்தின வட்டம் நான் வந்திருந்தப்போ, என் கையிலே காசில்லே என்கிறதுக்காக ஊரோடே என்னைத் திட்டுனாங்களே! பொறாமைக்காரங்க எங்கேயாவது அப்படித் திட்டுவாங்களா?''




அவன் சொன்னது என் சிந்தனையைக் கிளறியது. அப்படியானால் நாராயணசாமியை யாருக்குமே பிடிக்காமல் போனதற்கு எதுதான் காரணமாக இருக்க முடியும் என்று யோசிக்கலானேன்.

"இது பொறாமையே இல்லே" என்றான் அவன்.

"அப்படின்னு வேறு எதுவாக இருக்கும்?"

"சொல்லட்டுமா? இதுதான் சங்கதி: நான் எப்படி இருந்தாலும் இவங்களுக்குப் பிடிக்கல்லே! நான் உயிரோட இருக்கிறதே தப்புன்னு நினைக்கிறாங்க. எல்லாம் நான் தெரிஞ்சுதான் வச்சிருக்கிறேன்."

"உன் மேலே எதுக்கு இந்தத் துவேஷம்?"

"என் மேலே மட்டுமென்ன? இந்த ஊரிலே யாரைத்தான் யாருக்குப் பிடிச்சிருக்கு? ஒவ்வொருத்தனைப் பத்தியும் மனசிலே ஒரு கொறையாவது வச்சிக்கிட்டுத் தானே பழகுறாங்க — அத்தனை பேரும்! நாமளும் ஒரு பத்துப் பேரைக் கைக்குள்ளே போட்டுக்கிடணும். போட்டுக்கிட்டா நாம சொல்லாமலே நமக்கு ஸப்போர்ட் பண்ணிப் பேசுவாங்க!"

அவன் சொன்னதில் 'யாரைத்தான் யாருக்குப் பிடிச்சிருக்கு?' என்பதை நன்கு ஆராய்ந்து பார்க்க வேண்டும்; அப்புறம் தான் அது சரியா தப்பா என்று முடிவுகட்ட வேண்டும் என்று கருதி, அவன் கடைசியாகக் கூறியதைப் பற்றி மட்டும் கேட்டேன்:

"பத்துப் பேரைக் கைக்குள்ளே போடுறது எப்படி?"

அவன் சிரித்தான். "இதுவா பெரிய காரியம்? ஒரு காப்பிக்கும், ஒரு வேளைச் சோத்துக்கும்சாய்றவங்கதானே எல்லாரும்?"

"அப்படியா சொல்றே?"

"பெறகு? இன்னை சோறு பத்து நாளைக் காவது வேலை செய்யும். உண்ட வீட்டுக்கு ரெண்டகம் நினைக்கலாம்னு பத்து நாளைக் குப் பெறகுதான் தோணும். அதுக்குள்ளே இன்னொரு வேளைச் சோத்தைப் போட்டு அணை கட்டிப்பிடணும்!"

இரண்டு பேருமே சிரித்து விட்டோம்.

"நாராயணசாமி! நீ இந்தப் பாழாய்ப் போன ஊரிலே ஏன் இருக்கே? வேண்டாம், வேறே எங்கேயாவது போய் இரு. இங்கே இருக்க வேண்டாம்."

"வேறு எங்கே போறது? எல்லா ஊருமே பாழாப் போன ஊராத்தானே இருக்கு? எந்த ஊருக்குப் போனாலும் இந்தக் கதைதான். வாழ்ந்தாலும் கொறை சொல்வான்; தாழ்ந்தாலும் கொறை சொல்லுவான். நாம எப்படி இருந்தாலும் இவங்களுக்குத் திருப்தி இராது."

நாராயணசாமி உலகத்தைப் பல கணக்கு வரை எடைபோட்டுப் பார்த்தவன் போல் பேசினான். அவன் என் பேச்சைக் கேட்டு வெளியூருக்கு ஓடிவிட மாட்டான் என்பதைத் தெரிந்து கொண்டேன். மணியும் ஒன்பதுக்கு மேல் ஆகிவிட்டது. அவனிடம் விடைபெற்றுக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டேன். வரும் வழியில் தெற்குத் தெரு வேலையாவைச் சந்தர்ப்பவசமாகப் பார்த்தேன். கடைத் தெருவுக்குப் போய்ப் பீடி வாங்கிப் பற்ற வைத்துக் கொண்டு அவன் நடந்து வந்தான்.

"அண்ணாச்சி! எங்கே இந்த நேரத்திலே? எங்கே போய்ட்டு வர்றீங்க?" என்று கேட்டான் வேலையா.

"சும்மா இப்படி.... நம்ம நாராயணசாமி வீட்டுக்குப் போயிருந்தேன். பேசிக்கிட்டிருந்துட்டு வரேன்" என்றேன்.

"அங்கிருந்துதான் வர்றீங்களா?" என்று அவன் சொன்னான். அடுத்த நிமிஷமே ஏதாவது குறைகூறத் தொடங்குவான் என்று நினைத்து, "ஆமா, அங்கிருந்துதான் வர்றேன்!" என்று சொல்லி விட்டு நடையைக் கட்டினேன்.

வேலையா என்னைத் தொடர்ந்து வந்து பரவசமான குரலில், "அண்ணாச்சி! நம்ம நாராயணசாமி ஆயிரத்திலே ஒருத்தன்! என்ன கொணம்! எப்படிப்பட்ட மனுசன்! நான்கூட மொதல்லே ஒரு மாதிரியா நினைச்சேன். பெறகு பழகிப் பார்த்தப்புறமில்லே தெரியுது, அவன் எப்படிப்பட்ட தங்கமான மனுசன் என்கிறது!" என்று புகழ்மாலையில் பூக்களைத் தொடுத்துக் கொண்டே போனான்.

நான்கு நாட்களுக்குமுன், "அற்பனுக்கு வாழ்வு வந்தா அர்த்தராத்திரியிலே குடை பிடிப்பானாம்!" என்று நாராயணசாமியைப் பார்த்துப் பேசிய அதே வேலையாதான் இப்பொழுது இப்படிப் பேசினான்.

எனக்கு ஆத்திரம் தாங்கவில்லை. கொஞ்சமும் தயங்காமல் முகத்தில் அறைந்தது போல் கேட்டேன்: "வேலையா! நாராயணசாமி ஒனக்குக் காப்பி கொடுத்தானா? இல்லே, சோறு போட்டானா?"

"என்ன அண்ணாச்சி இப்படிக்கேக்கறீங்க?" என்று அவன் பதறிப் போய்க் கேட்டான்.

"போய்யா, போ! காலாகாலத்திலே போய்ப் படுத்துத் தூங்கு!" என்று மற்றொரு அறையும் கொடுத்து விட்டு நான் வீட்டுக்கு வந்தேன்.

சப்தங்களையே ஒன்று திரட்டி அடுக்கிவைத்தாற்போன்ற ஒண்டுக் குடித்தன இடம் அது. அண்டை வீட்டாரை அறியாத நாகரிகம் என்ற பட்டண வாழ்க்கை இது போன்ற இடங்களுக்குப் பொருந்தாது. இந்த ஸ்டோரில் அடைபட்டிருந்த நாங்கள் ஆறு குடித்தனக்காரர்களும் ஒருவரை யொருவர் அறியாமல் எப்படி இருக்க முடியும்? இங்கு அண்டை வீடு என்பது பக்கத்திலோ பின்னுலோ எங்கே இருக்கிறது? மடியிலேயே அல்லவா விழுந்திருக்கிறது!

ஆறு குடும்பங்களில் இரண்டின் தலைவர்கள் ஓய்வு பெற்ற ஊழியர்கள். கிழக் கிளைகள் நிரம்பி வழிந்தன. இன்னொரு குடும்பத்தில் மகப் பேற்ற ஒரு நடு வயதுத் தம்பதி. எப்போதும் அவர்களிடையே நிகழும் உரத்த வாதங்களைக் கேட்கும்போது குழந்தைகள் எழுப்பியிருக்கக் கூடிய கூவல்களின் ஒலி இப்படி ஒரு பொருத்த முறையிடாத விச்வரூபம் எடுத்துவிட்டதோ என்று தோன்றும். நான்காம் குடும்பத்தை நடத்தியவள் ஓர் இளமங்கை. வயதான தாயையும் அறிவு பேதலித்த ஓர் அண்ணனையும் காக்கும் பணியில் தன் கன்னிப் பருவத்தை இழந்து கொண்டிருப்ப தாய்க் குறைப்படாமல் அந்த இரு ஜீவன்களை அரவணைக்கும் உணர்வில் நிறைவு எய்தியே வாழ்ந்து கொண்டிருந்தாள். கனவில் பூத்த மலரைப் போன்ற ஒரு வாடாத மலர்ச்சி தான் அவள் புன்னகை. மற்றொரு குடும்பம் ஒரே வாலிபனைக் கொண்டது. அலுவலகத்தில் சம்பாதிப்பதிலே ஊருக்கும் நாட்டுக்குமாகப் பகிர்ந்து விட்ட பிறகு மிச்சம் வழிந்த துளிகளில் சில்லறையான சில சொந்தத்




தேவைகள், எப்போதோ ஒரு சினிமா இவற்றுக்கு இடம் ஒழித்துவிட்டுத் திருப்தி என்பதை மன அளவில் நிறுவிக் கொண்டு விட்டான். உலகச் செய்திகளெல்லாம் அவன் நாநுனியில் அடக்கம். "என் ஸார், இந்த வியட்காங் ஊடுருவல்களைப் பார்த்தீர்களா ?" என்பது போல் ஏதேனும் சொல்லிக் கொண்டு அவன் என் முன்னே வந்து அமரும் போது அவனுடைய நாவன்மையும் ஆய்வுத் திறனும் என்னுடன் வாதம் செய்ய மட்டும்தானு அல்லது அடுத்த பகுதியின் அந்த இளம் குடும்பத் தலைவியை வியப்புறுத்துவதற்கா என்ற ஐயம் அடிக்கடி என்னுள் நீர்க் குமிழியாக எழும்பி உடையும்.

ஆறாவதான என் குடும்பத்தைப் பற்றி என்ன சொல்வது? மனைவி, நான்கு குழந்தைகள், பற்றாக்குறையோடு சதா கண்ணு மூச்சி ஆடி மீளும் செப்பிடு வித்தை. குடும்பச் சண்டை பூசல்கள், விரக்தி வெறுப்புகள், சமாதானங்கள், மகிழ்ச்சிகள் — நான் ஒரு சராசரி மனிதன்.

ஆறு குடும்பங்கள் மூன்றன் மடியில் ஒன்று இடறிக் கொண்டிருக்கும் கூட்டுக் குடியில் பரஸ்பரம் நட்புக்கு இடம் இருந்ததா என்பதே எனக்குப் புரியவில்லை. அளவுக்கு மீறிய தூல நெருக்கத்தில் மன நெருக்கம் விளையமுடியுமா? நம் கையோடும் காலோடும் நாம் நட்புக் கொண்டாடுவது சாத்தியமா? அங்கே மூச்சு விட்டால் இங்கே கேட்பது போன்ற ஓர் அமைப்பு. இதயங்கள் ஒன்றையொன்று தலைகீழாய்ப் புரட்டிப் பார்த்து அறிந்து விட்டால் அட்டமற்ற அந்த முழுத் திறப்பிலே இனிமை ஏதும் இல்லை. இனிமையின் அநுபவத்துக்கு, ஆழ்ந்த ஒரு தொடர்புக்கு ஓரளவு தொலைவு அவசியமென்று நினைக்கிறேன். முழுப் பொருளை வெளிப்படையாய்க் கக்கி விடாமல் உணர்த்தும் கவிதையைப் போல, நாலடி தள்ளி நின்றே வடிவத்தின் முழுமையைச் சுவைக்க வேண்டிய ஓவியத்தைப்போல, மர்மத்தின் மூச்சுத் தோய்ந்த பிணைப்பில்தான் நட்பு மலர முடியும்.

இவ்வகையில் எங்கள் ஆறு குடும்பத்தினருக்கும் ஒருவரிடமொருவர் எவ்வித ஆழ்ந்த தொடர்பும் இல்லை. பரஸ்பர விசாரிப்புகள், அநுதாபங்கள், ஆபத்தில் உதவிக் கொள்ளும் பழக்கங்கள், இப்படியாக மனிதாபிமான அடிப்படையில் நேரும் ஒரு சாதாரண உறவோடு ஆறு வண்டிகள் வாழ்க்கைச் சுவட்டில் இயந்திரமாய் ஓடிக் கொண்டிருந்தன.

ஓய்வுபெற்ற பெரியவர்களும் அவர்கள் மனைவிமாரும் முதுமைக்கு எடுத்துக்காட்டான வடிவத்துடன் இருந்தார்கள் என்று சொல்ல முடியாது. அவர்கள் முதிர்ச்சி கவலையற்று இயல்பாய் விளங்குவது. பிஞ்சு காயாகிப் பழுத்துப் பூரணமடைந்த ஒரு தன்மை. அதனுல்தானே என்னவோ அவர்களிடம் இன்னமும் மாறுமலிருந்த கலகலப்பில் ஒருவித இளமையின் தோற்றம்கூட இருந்ததாகப் பிரமிக்க முடிந்தது.

அவர்கள் யாவரினும் ஒருகால் வயதில் குறைந்த "பெரியம்மா" தான் தோற்றத்தில் அதிக முதுமை கொண்டிருந்தாள்.

## சிறப்புச் சிறுகதை

"பெரியம்மா"வின் பெயர் எனக்குத் தெரியாது. நரை முடியும் வாடிய வடிவும் அவளுடைய வயதைப் பெருக்கிவிட்ட காரணத்தால் அவள் மிகப் பெரியவளாய்த்தான் இருக்க வேண்டும் என்ற ஓர் அநுமானத்தில் காண்போரெல்லாம் "பெரியம்மா" என்று மரியாதையாய் விளிப்பதையே பழக்கமாகக் கொண்டு விட்டதனால் அப்பெயர் அவளிடம் ரூடியேறிவிட்டது.

இளம் குடும்பத் தலைவியின் தாய்தான் பெரியம்மா. பெரியம்மாவின் கணவர் என்றோ எங்கோ போனவர் இருக்கிறாரோ இல்லையோ. ஆனால் இருப்பதாகவே எண்ணி அதற்கான சின்னங்களை ஏற்று அவரோடு வாழ்ந்த நாட்களை மறந்துவிட்டு வாழ்ந்து கொண்டிருக்கும் அவளை ஒவ்வோர் உறுப்பாக வர்ணிப்பதென்றால் என்னால் இயலாது. ஒரு மனித வடிவத்தை உறுப்புக்களுள்ள படைப்பாய்க் கருத முடியாமல் திகைக்க வேண்டியிருக்கிறதென்றால் எனக்கே விநோதமாகத்தான் இருக்கிறது. பெரியம்மாவை நினைத்தால் மனசில் தோன்றுவது ஓர் உணர்ச்சிப் பிழம்பு; புயல் மூட்டம்; இருட்கனம். அதற்கு உருவமேது? பெருமூச்சே வடிவமாய் அதில் கனமையே ஓர் இதயமாய், ஆழங் காணாத தொலைவுகளை ஊடுருவிப் பதியும் சோகமே பார்வையாய் ஓர் உருவத்தைக் கற்பனை செய்தால் அவள்தான் பெரியம்மா.

"புஷ்பாவுக்குக் கல்யாணம் செஞ்சுட வேண்டியதுதான். நீ என்ன சொல்றே?" என்று என்னிடம் அவள் அபிப்பிராயம் கேட்கும் போது மகளின் நல்வாழ்வைக் கோரிக் கவலையுறும் இயல்பான தாய்மையின் பரிவு சுடர்விடும். அது மனசைத் தொடும் கனிவுதானென்றாலும் அந்த இயல்புத் தன்மையினாலேயே அதற்கு ஓர் எல்லையும் ஏற்பட்டு விட்டாற் போலத் தோன்றியது.

வைத்திக்கு இருபத்தேழு வயது நிறைந்து விட்டதாகப் பெரியம்மா என்னிடம் கூறியிருக்கிறாள். வைத்தியைப் பார்த்தால் அப்படித் தோன்றாது. என்ன வயது சொல்லலாம் அவனுக்கு? விண்வெளியில் குறியின்றி அலையும் காற்றின் இழைக்கு வயது என்ன? உடைந்த குழலினுள் தேங்கும் மௌனத்துக்கு வயது என்ன?

எண்ணங்களும் நினைவுகளும் மோக தாபங்களும் விருப்பு வெறுப்புகளும் இன்ப துன்பங்களும் இயங்கும் போதுதான் மனிதனுக்கு வயது என ஒன்று ஏற்படுகிறதோ? வைத்தியின் பார்வை எவ்வித உணர்ச்சியுமின்றிச் சூனியத்தில் ஆழும் போது அவனை ஒரு பச்சைக் குழந்தை என்று சொல்லலாம். அல்லது ஆயிரம் ஆண்டுக்காலம் வாழ்ந்து முடித்தவனென்றும் சொல்லலாம். அந்நிலையை, பேசத் தெரியாத பேதைமை என்று வர்ணிக்கலாம். அல்லது பேச்சைக் கடந்து விட்ட மோனநிலை என்றும் கூறலாம். அந்த வெறுமை அநாதியானது. அதற்கு விளக்கம் கிடையாது. வயதும் கிடையாது. சத்து இல்லாத அந்த வெறுமையை நோக்கும் போது சில சமயம் எனக்கு அங்கு ஒரு தூல மனித வடிவம் இருப்பதாகவே தோன்றாது. அவனுள்ளாகவே யாரும் புகுந்து அப்பால் கடந்து செல்ல முடியும் போல் அவன் வெற்றுவெளியாகக் காணப்படுவான். பெரியம்மாவின் கண்களில் அவன் ஒரு நிரந்தர நீர்த்துளி. பட்சிக் கூடுபோல் வரியிட்ட தனது கண்களிலே அவள் வைத்துக் காத்த பறவை அவன்தான். மகன் மீது இருந்த பாசத்துக்குக் குறைவில்லை. ஆனால் இது வேறு.

பெரியம்மா அன்றாடம் பூஜை செய்வாள். நான் அடிக்கடி பார்த்திருக்கிறேன். தினம் காலையும் மாலையும் ஸ்வாமி படத்துக்குத் தொழுகை புரிந்தபின் எதிரே அமர்ந்து அவள் கண் மூடிப் பிரார்த்தனையில் ஈடுபடுவாள். உதடுகள் அசைவது தெரியும்.

'மகனுக்கு நல்வாழ்வு கொடு' என்ற பிரார்த்தனையா அது? 'விதி வஞ்சித்துவிட்ட மகன் உன் அருளால் நலத்துடன் இருக்க வேண்டும் இறைவா' என்ற முறையீடா? 'இனியும் என்னை வருத்தாமல் விரைவில் உன்னிடம் சேர்த்துக் கொள்' என்ற அபயக் குரலா?





மகன்: அப்பா! உனக்கு நூறு ரூபாய் நஷ்டம் ஆகாமல் நான் நடந்துண்டா நீ எனக்கு எவ்வளவு தரே?

தகப்பனார்: புரியல்லியேடா!

மகன்: புரியும்.... எவ்வளவு தரே...... சொல்லு!

தகப்பன்: ஐம்பது ரூபாய் தரேன்.

மகன்: சபாஷ்! நான் பாசானால் சுவாமி உண்டியலில் நூறு ரூபாய் போடறேன்னு வேண்டிண்டியே! அந்தப் பணம் உனக்கு அப்படியே லாபம்!

பெரியம்மா என்ன பிரார்த்தனை செய்தாள்? ஆனால், அவள் வேண்டியது எதுவாயினும் அதில் அவள் இதயத்தின் மணம் கலந்திருந்ததென்பதில் ஐயமில்லை. அந்த வடிவத்தின் உணர்ச்சிப் பிழம்பும் புயல்மூட்டமும் இருட்கனமுமே அதற்குச் சாட்சி.

புஷ்பாவுக்குத் தாயிடமும் அண்ணனிடமும் மிகுந்த பாசமுண்டு. அண்ணனின் முகக் குறிப்பையே தன் நடப்புக்குத் துருவ தாரகையாய்க் கொண்டு ஒழுகினாள். கல்லாக வெறுமை காட்டும் அண்ணனிடம் வாஞ்சையைப் பொழிந்தாள்.

'வைத்தியண்ணா, கொஞ்சம் காப்பி குடி பார்க்கலாம்? உனக்குக் கைவலிக்கிற தோன்னோ? நானே வாயில் கொடுக்கிறேன்' என்று அவன் குறையைச் சிறிது நேரம் மறந்துவிடும் உருக்கமான பாசாங்கோடு காப்பித் தம்ளரை அவன் உதட்டில் மெல்லப் பொருத்துவாள். குறியின்றி அவன் தெறிக்கும்போது, ''என்னே அண்ணா ஆசையாய் உற்றுப் பார்க்கிறான்'' என்று கண்ணீர் தோய்ந்த சிரிப்புடன் கூறிக் கொள்வாள். ''ஏண்டா, வைத்தியண்ணா, தலை முடி ஏகத்துக்கு வளர்ந்து போச்சே! உனக்கும் 'பீட்டில்ஸ்' மாதிரி இருக்கணும்னு ஆசையா என்ன?'' என்று கொஞ்சியவாறு அவன் சிகையைச் சீவி விடுவாள்.

இதையெல்லாம் பெரியம்மா பார்த்துப் பார்த்து மனம் நெகிழ்வது உண்டுதான். ''புஷ்பாவுக்கு அண்ணாகிட்ட எத்தனை ஆசையப்பா!'' என்று என்னிடம் பெருமையாய்ச் சொல்வாள்தான். ஆயினும் அவளைப் பொறுத்தவரையில் ஒரு செயல்முறையைத் திட்டம் செய்து வைத்துக் கொண்டிருந்தாள்.

''புஷ்பாவுக்குச் சீக்கிரமே கல்யாணத்தை முடிச்சுப்பிடணும்'' என்று அடிக்கடி தன் கருத்தை என்னிடம் வெளியிடுவாள். அவள் முன்னிலையிலேயே புஷ்பா பல முறை என்னிடம், ''நான் கல்யாணமே செய்துக்கப் போறதில்லை மாமா. அம்மாவுக்கும் அண்ணாவுக்கும் ஒத்தாசையாய் இப்படியேதான் இருந்துடப் போறேன்'' என்று சொல்லியிருக்கிறாள்.

ஆனால் பெரியம்மா அதைப் பொருட்படுத்தவே இல்லை. மகள் வீட்டிலில்லாத ஒரு சமயம் அவள் என்னிடம், ''புஷ்பா என்னமோ இப்போதுள்ள நிலைமையிலே இப்படிப் பேசறா. எனக்காகக்கூட இல்லை, முக்கியமாய் வைத்தியைக் கவனிச்சுக்கணும் என்கிற கவலைதான் அவளுக்கு. நான் இதுக்கு இடம் கொடுத்து அவளுக்குக் கல்யாணம் செய்யாமலே இருந்துவிட்டால் நாளடைவில் அவளுக்கு வைத்தி மேலே வெறுப்புத்தான் ஏற்படும்'' என்றாள்.

''ஏன் அப்படி நினைக்கிறீங்க? அவள் அண்ணன் மேலே நிஜமான பாசம் வைச்சிருக்கிற மாதிரிதானே தெரியறது?'' என்றேன் நான்.

''பாசம் நிஜம்தானப்பா! ஆனால் பாசத்தின் மேலே அதிக கனத்தை வைச்சு அழுத்தக் கூடாது. அவள் சின்னப் பெண். வாழணும்கிற ஆசை இருக்காதா? இள வயதின் ஆர்வத்திலேயும் பாசத்தின் வெறியிலேயும் எந்தத் தியாகம் வேணும்னாலும் செய்யலாம்னுதான் இப்போ தோணும். கன்னி வாழ்க்கை ஒரு பெருமையாய்த் தோணும். ஆனால் அவள் சொன்னதைக் கவனிச்சயா? கல்யாணம் வேண்டாம்னு அவள் சொல்றதுக்குக் காரணம் கல்யாணத்தை விரும்பாமலிருக்கிறதோ, தான் சுதந்திரமாய் இருக்கணுமென்கிற எண்ணமோ இல்லை. அண்ணன் எல்லாரையும்போல இல்லையே, அவனை நாம்தான காப்பாத்தணும் என்கிற உணர்ச்சிதான்.''

''அதில் ஒண்ணும் தப்பில்லையே?''

''அவள் உணர்ச்சி இயற்கையானதுதான். ஆனால் இது மாதிரியான காரணங்களெல்லாம் என்றைக்குமே மனசைத் தாங்கிப் பிடிச்சிண்டிருக்கும்னு சொல்ல முடியாது. கொஞ்ச காலத்துக்கப்புறம் இந்த அண்ணனாலேதானே நமக்கு வாழ்வில்லாமல் போச்சு என்று ஓர் எண்ணம் அவளறியாமலே தலைதூக்கும். அவளுக்கு வயசாக ஆக, தான் எதையோ இழந்துட்டோம் என்கிற உணர்வு வளர வளர, அந்த இழப்புக்கு அடிப்படைக் காரணமாயிருக்கிறவன்மேலே வெறுப்பு ஏற்படாமல் போகாது. அவனை ஒரு சுமையாய்க் கருதத் தோன்றாமல் போகாது. அதுவும் இயற்கைதான். அவளும் மனுஷிதானே, பாவம்!''

எனக்கு ஏதும் பேசத் தோன்றவில்லை.

''நான் அவன் தாயாராய் இருந்துண்டு அப்படி ஒரு நிலை அவளுக்கு ஏற்பட விடலாமா? கல்யாணம் செய்துண்டு அவள்

வேலை பார்க்கட்டுமே! நம் நிலைமை தெரிஞ்ச ஒரு பையனை அவள் கல்யாணம் செய்துண்டால், நிர்க்கதியான அண்ணனை அவள் காப்பாற்ற அனுமதிக்காமலோ அல்லது தானே காப்பாற்றுகிறேன் என்று முன்வராமலோ அவன் இருந்துவிடவா போறான்?''

''இருந்துட்டால் ?''

''அது வைத்தியின் தலையெழுத்து. அதுக்காக ஒருத்தர் வாழ்க்கைக்காக இன்னொருவர் வாழ்க்கையைப் பலியாக்க முடியுமா? அது நியாயமா? வைத்திக்காக அவள் கல்யாணம் செய்துக்காமலே இருந்துட நான் அனுமதிக்கவே மாட்டேன். அது அவளுக்கும் நியாயமில்லே, வைத்திக்கும் நியாயமில்லே.'' — பெரியம்மாவின் நிதானமான பார்வையில் பாம்பு சீறியது. ''என் வைத்தியை யாரும் அது என் புஷ்பாவாகவேதான் இருந்தாலும் சரி — ஒரு சுமையாய் நினைக்க நான் ஒரு நாளும் விடமாட்டேன்.''

நெருப்புச் சுவாலையை நெருங்கிவிட்டாற் போன்ற அனலை என் மேல் உணர்ந்தேன்.

சிறிது காலத்துக்குப்பின் அவள் ஒருநாள் மாலை என்னிடம் கூறினாள்.

''அந்தப்பிள்ளையாண்டான் இருக்கானே!''

''யார்?'' என்றேன்.

''அவன்தாம்பா, இந்த ஸ்டோரில் குடியிருக்கானே, அரட்டைக் கல்லிப் பையன், உன்னோடுகூட அடிக்கடி உலக விஷயமெல்லாம் பேசுவானே.''

''ஓ. நம்ம ராஜுவைச் சொல்றீங்களா ! அவன்கூட இன்னிக்கு உங்ககிட்டே ஏதோ கேட்டானுமே?''

''அதுக்குள்ளே உனக்குச் சமாசாரம் தெரிஞ்சு போச்சா ?''

''நான் ஆபிஸிலேயிருந்து வந்ததும் வராததுமாய் எல்லாக் குடித்தனக்காரங்களும் சொல்லியாச்சு! இந்த இடத்திலே ரகசியம் ஏது ?''

அவள் மெல்லச் சிரித்துக் கொண்டாள். ''அதுதான். புஷ்பா மேலே எனக்கு விருப்பம் இருக்குன்னு அவன் நேரவே என்கிட்டே சொல்லி அபிப்பிராயம் கேட்டப்புறம் என்ன தடை? அவன் சொந்தக்காரர்களோடு பேசிக் கல்யாணத்தை முடிச்சுடலாம்னு இருக்கேன். என்ன சொல்றே?''

''ஜமாயுங்கள்! அந்தப் பையனுக்கு எப்பவுமே அதுதான் விருப்பம்னு நானும் ஜாடையாய்ப் புரிஞ்சுண்டேன். அவன் உலக விஷயமெல்லாம் பேசினது உலகத்துக்காகவா என்ன? புஷ்பாவை மலைக்கச் செய்யத்தான்.''

''நமக்குச் சமான நிலையில் உள்ள பையன் தான். முக்கியமாய் நம்ம கஷ்டம் தெரிஞ்சவன். புஷ்பா தொடர்ந்து வேலை பார்க்கட்டும்னு அவனே சொல்லி விட்டான். சரிப்பட்டு வரும்.''

''புஷ்பா என்ன சொல்றா ?''

''வாய் 'கல்யாணமா?'ன்னு சண்டைக்கு வரது. ஆனால் கண் சிரிக்கிறது.''



எஜமானி: வீட்டுக்கு விருந்தாளிங்க வருங்க, சமைக்கணும்.

சமையல்காரி: எந்த மாதிரி விருந்தாளிங்க? அவங்க திரும்பி நம்ம வீட்டுக்குச் சாப்பிட வருற மாதிரியா, இல்லே....?





மனைவி: ஒரு மனைவிக்கு மேல் கல்யாணம் செய்து கொள்ளக் கூடாதுன்னு சட்டம் ஏன் வந்தது?

கணவர்: மாமியார்களை அனுபவியமா அதிகரித்துக் கொள்ள வேண்டாம் என்பதற்காகத் தான் இருக்கும்!

என்னதான் இருந்தாலும் வயது முதிர்ந்தவர்களின் தீர்மானங்கள் எத்தனை அறிவு பூர்வமானவை என்று நினைத்துக் கொண்டேன். புஷ்பாவின் விருப்பான மறுப்புகளின் பின்னே — ஏன், புஷ்பாவே தன் மறுப்பு உண்மையானதுதான் என்று நம்பிக் கொண்டிருக்கும் போதே — அங்கு ஒளிந்திருந்த இதயத்தைப் பெரியம்மா எத்தனை அநாயாசமாகக் கண்டு பிடித்து வைத்திருந்தாள் !

திருமணம் நிச்சயமானபின் பெரியம்மாவின் முகத்தில் ஒரு புதிய சாந்தி கூடிவிட்டாற் போலிருந்தது. பெற்றோர்களே கர்மயோகிகள் போலும். தம் கடமையை இயற்றுவதில்தான் அவர்களுக்கு எத்தனை தீவிரம் !

அன்றும் அவள் புரியும் பிரார்த்தனையில் இப்போது ஒரு நிறைவு இருந்ததோ? தான் கோரியபடியே மகளுக்கு நல்வாழ்வு அருளிவிட்ட தெய்வத்துக்கு நன்றி கூறித்தானோ அந்த மெலிந்த உதடுகள் அப்படிக் காற்றலைத்த சருகுகள் போல் நடுங்கி அசைகின்றன ?

இரவில் அவள் வீட்டு வேலைகளை முடித்த பின், உணவு கொண்டபின், மக்கள் உறங்கியபின், சிறிது நேரம் வாசலில் வந்து உட்காருவாள். வெள்ளம் வடிந்த ஆகாசம் தான் அப்போது தென்படும். நட்சத்திரங்களை மூடி மூடித் திறக்கின்ற தென்னை ஓலைகளிடையே பிறக்கும் தென்றல் அவளுடைய களைத்த உடலுக்கு இதமாய்த் தடவிக் கொடுக்கும் போது கண்களை மூடிக் கொள்வாள். இந்தக் கண் மூடலில் சோர்வும் சோகமும்தான் இருந்தன. இது போன்ற சமயங்களில், பிரார்த்தனையில் கண் மலர் கூம்பும் தோற்றத்திலே இருந்த ஆவேசமும் பயங்கரமும் இந்த வடிவைச் சேர்ந்தவைதானா என்ற வியப்பு எனக்கு எழாமற் போவதில்லை.

நானும் போய் அருகில் உட்கார்ந்து கொண்டேன். பூத்தாள் வைத்ததனால் மணம் கமழும் ஓர் ஆடையைப் போல், வாசமிகு இரவு எங்கள் மீது போர்த்துக் கொண்டது.

''களைப்பாயிருக்கா ?''

''ஆமாம்ப்பா.''

''பாவம். எனக்கே தள்ளலியே. உங்களுக்கு இன்னும் அதிக வயசு'' என்றேன்.

''களைப்பிலே ரெண்டு இனுசு இருக்கு. ஒன்னு வயசான களைப்பு. இன்னொன்னு வாழுகிற களைப்பு.''

இருட்டில் ஒரு கை கன்னத்தில் அறைந்தது போல் பாய்ந்தது அந்தப் பதில். நிமிர்ந்து உட்கார்ந்து அவள் முகபாவத்தை ஆராய முயன்றேன். தெரு லாந்தரின் வெளிச்சம் அம்முகத்தில் எண்ணெய் தடவியிருந்தது. அங்கங்கே தேங்கும் ஒரு பளபளப்புத்தான். ஏதும் தெளிவாய்த் தெரியவில்லை. அவள் பாறையாக அமர்ந்திருந்தாள்.

''புஷ்பா கல்யாணம் நிச்சயமானது உங்களுக்கு ஒரு கவலை குறைந்த மாதிரி'' என்று கூறி அந்த விளக்கமற்ற உணர்ச்சிப் பாறையைச் சாமானியத்துக்கு இழுக்க முயன்றேன்.

''ஆமாம்.''

''உங்க பிரார்த்தனை நிறைவேறிடுத்து, இல்லையா ?''

இமைப் பொழுதில் இருளின் தன்மையே மாறிவிட்டாற் போலிருந்தது. அவள் பதில் சொல்லவில்லை. அசையாமல் உட்கார்ந்திருந்த அவ்வுருவம் மௌனத்தினிடையே சேர்த்துக் கொண்டு இறுகி வருவது போல் பிரமை தட்டியது. என்னுள் ஒரு சங்கடம் புரண்டது.

''இல்லையா ?'' என்றேன் மீண்டும் — ஆழத்தைக் கண்டு தலை சுற்றும் போது இமை மீறி அந்த ஆபத்தினுள்ளேயே குதித்துவிடுவது போல்.

''இல்லே.''

சிறிது நேரம் என்னால் பேச முடியவில்லை. பிரார்த்தனை இன்னும் நிறைவேற வில்லை என்று சொல்கிறாள்?

''ஏன்? ராஜு நல்ல வரன்தானே!'' என்றேன் ஒருவாறு.

''நான் இல்லேன்னு சொல்லலியே ?''

''பின்னே ?''

''நான் புஷ்பாவின் கல்யாணத்துக்காகப் பிரார்த்திக்கலியே ?''

''இப்போ சரி. ஏனென்றால் இப்போ அவளுக்குக் கல்யாணம் நிச்சயமாயிடுத்து. அதுக்கு முந்தி ?''

''எப்பவுமேதான்.''

''அப்படியா !''

''அவளுக்கு எப்படியோ நல்லபடியாய் ஒரு கல்யாணம் ஆகிவிடும் என்கிற நம்பிக்கை எனக்கு எப்பவுமே இருந்தது. அதை ஒரு பெரிய பிரச்னையாய் நான் நினைக்கலே.''

''பின்னே ?''

''நான் பிரார்த்தனை செஞ்சதெல்லாம், செய்யறதெல்லாம், இனியும் செய்யப் போறதெல்லாம், வைத்திக்காகத்தான்.''

என் மனம் சட்டென்று இளகிவிட்டது.

''மன்னிச்சுடுங்க பெரியம்மா. நான் இதை முந்தியே புரிஞ்சிண்டிருக்கணும். நியாயந்தான். உடல்நலமில்லாத மகன் சௌக்கியமாய் வாழணும்னு ஒரு தாயார் பிரார்த்திக்கிறதைவிட இயற்கையானது. வேறென்ன......''

''நீ இப்போகூடப் புரிஞ்சுக்கலே. நான் பிரார்த்திக்கிறது வைத்தியின் மரணத்துக்காக.''

மெல்லிய தென்றலாய் வீசிக் கொண்டிருந்த காற்று திடீரென்று பேய்ச் சுழலாய்ச் சீறி அடித்தது. தென்னம் ஓலைகளுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா என்ன? என் சொற்கள் என் வாயிலேயே மடிந்து போயின.

''அவனுக்கு இந்தக் குறை இருக்குன்னு ஊர்ஜிதமான காலத்திலேயிருந்து இத்தனை வருஷங்களாய் நான் தெய்வத்தின்கிட்ட அல்லும் பகலும் பிரார்த்தனை பண்ணிண்டே இருக்கிறது அவன் சீக்கிரம் கண்ணை மூடணும்னுதான்.''

திடீரென்று எனக்கு அங்கிருந்து எழுந்து, அவளை விட்டு விலகி ஓட வேண்டும்போல் இருந்தது. என் முன் இருந்தது மானிடப் பிறவியா அல்லது அரக்க வடிவமா? மனத்



# அறியாத வளர்ச்சி

அவள் வளருகிறாள். அவளுடன் அவளது அருமை நாயும் வளருகிறது. இந்த வளர்ச்சியை அவள் அறிவாள். ஆனால் அவள் திருமணத்திற்கு அவள் தகப்பனார் போட்டிருக்கும் ரெகரிங் டெபாஸிட் வளருவது அவள் அறியாள்.

**சென்ட்ரலில் உங்களுடைய ரெகரிங் டெபாஸிட்டை ஆரம்பியுங்கள்**



தீ

# சென்ட்ரல் பாங்க்

**ஆப் இந்தியா லிட்.,**

தனியார் துறையில் உள்ள மிகப்பெரிய பாங்க்

பதிவு காரியாலயம்: மகாத்மா காந்தி ரோடு,
போர்ட், பம்பாய்-1

திரு. பி.ஸி. பின்னே,
பிரதம ஏஜெண்ட்
சென்னை

**திரு வி. ஸி. படேல்**
**சேர்மென்**
**பம்பாய்**

SISTA'S-CB 3 TA



"எல்லா ஆசிரியர்களையும்விட நீங்க பாடம் சொல்லித் தர்றதுதான் சார், எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு."

"அப்படியா ?"

"ஆமாம், நீங்க சொல்லித் தரும்போதுதான் எனக்கு நல்லாத் தூக்கம் வருது சார்."

* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *

தில் விரிசல் பரவப் பரவ உடைப்பிக் கொண்டே போன அதிர்ச்சியின் மிகை என் உயிரின் மேல் அழுத்தியது.

இருள் கொண்டு சமைத்த வடிவம் என்ற என் பிரமை எத்தனை மெய்யாகிப் போயிற்று! அவன் இருள்தான். தாய்மையின் ஒளியே படாத பாழ்க் குகை. அவனே இருளானதால் தான் உருவம்கூடத் தெளிவுறாமல் இரவின் இருளோடு அப்படி இரண்டறக் கலந்துவிடுகிறான். இத்தகைய ஒரு பேய்மையான வேண்டுகோள் விடுத்து இறைஞ்சியதால் தான் அவளுடைய பிரார்த்தனை நிலை அவ்வளவு பயங்கரமாயிருந்திருக்கிறது.

பட்டுத் துணியைத் தொட்டது போல் மிருதுவாக அவள் குரல் இழைந்தது. "நான் போறதுக்கு முன்னாலே அவன் போயிடணும்னுதான் நான் எப்பவுமே வேண்டிக்கிறதெல்லாம்."

"ஏன், புஷ்பா அவனைக் காப்பாத்தமாட்டான்னு சந்தேகமா?" என்றேன் வெறுப்புடன்.

"இல்லே. என் பெண்ணை எனக்குத் தெரியாதா? ஆனால் அவனைப் பார்த்துக்கக்கூடியவர்கள் எத்தனை பேர் இருந்தாலும் அவர்கள் கிட்டேயெல்லாம் அவனை காட்டிக் கொடுக்க எனக்கு இஷ்டமில்லே. ஒரு சமயம் இல்லேன்னு ஒரு சமயம் என் குழந்தையை யாராவது அறுத்துக் கொள்வார்களோ என்கிற சந்தேகமே எனக்குத் தாங்க முடியலே. அவன் இருக்க வேண்டிய இடம் இது தான்." அவள் தன் நெஞ்சைத் தொட்டுக் காட்டியதை நான் கண்டேனா அல்லது உணர்ந்தேனா ? "இங்கேயே ஐக்கியமாகிப் போயிடறதுதான் அவனுக்கு நன்மை. அவனுக்கு முன்னாலே நான் செத்துப் போயிடுவேனோ அப்படின்னு நினைச்சாலே எனக்குப் பயமாயிருக்கு. அது நான் அவனுக்குச் செய்யற துரோகமாயிடும். அதனாலேதான் நான் இருக்கிற போதே அவன் போயிடணும்னு நான் இந்த இருபது வருஷமாப் பிரார்த்திச்சுண்டு வரேன். அப்படிப் பிரார்த்திக்கும் போது என் மனசு எப்படி வெடிச்சுப் பிளந்து போறது தெரியுமா? ஆனாலும் நான் அந்த மாதிரிதான் வேண்டிக்கிறேன்."

என் உடல் சிலிர்த்தது. கற்பனையில் ஒரு காட்சி. தாய்க் கரங்களின் அரவணைப்பில் ஒரு வடிவம் துவண்டிருக்கிறது. அது இப்போது ஒரு மூச்சாகி அந்தத் தாயின் இதயத்தினுள் கலந்து விட்டது. அது அவ்வாறு வெளி உலகினின்று பாதுகாப்பு அடைந்ததில் அன்னையுள்ளம் தன் வேதனையையும் தாண்டி அமைதியுறுகிறது.

கோபமும் வெறுப்பும் அகன்றன. நான் நிதானித்துக் கொண்டு அவளை வியந்தவாறே கூறினேன். "நீங்க சொல்றது ரொம்ப சரி பெரியம்மா. எனக்கு இப்போத் தான் புரியறது. வைத்தி சீக்கிரம் கண் மூடறதுதான் அவனுக்கு நல்லது."

"வாயை மூடு !"

என்ன சொல்லிவிட்டேன் நான்? மிருதுக் குரல் ஏன் நொடிப் பொழுதில் ஜ்வலிக்கத் தாக வெறி கொண்டு விட்டது? அவள் சொன்னதைத்தானே ஆமோதித்தேன் ?.... அதில் என்ன தவறு ? தீ வெள்ளம் மீண்டும் பிரவகித்து அனல் நாக்குகளை என் மேல் வாரித் தெறித்தது. தாள முடியாத சீற்றத்தில் அவள் எழுந்து நின்று கொண்டிருந்தாள். உருவற்ற ஒரு கருந்தேக்கமாக, விக்கிரகத் திண்ணத்துடன் கல்லினை அடைத்துக்கொண்டு நின்றாள். காலமே ஸ்தம்பித்துப் போன ஒரு கணப் போதில் உணர்ச்சியும் புயலும் இருளும் அவளில் தம் அர்த்தத்தின் சிகரத்தை அடைந்துவிட்டன.

"எத்தனை துணிச்சல் உனக்கு ! என்ன தைரியம் ! நீ அந்த மாதிரி எப்படிச் சொல்லலாம் என் பிள்ளையைப் பத்தி? நான் சொல்லலாம், நான் நினைக்கலாம், நான் அதை வேண்டலாம். ஏனென்றால் நான் அவனைப்பெற்ற தாய். ஆழ்ந்த அன்பு செலுத்துகிறவர்களுக்குத்தான் அப்படி ஒரு நினைப்பு நினைக்க உரிமை உண்டு. அந்த அன்பினால் ஒவ்வொரு நிமிஷமும் அவனுக்காகத் துடிதுடிக்கிறவர்களுக்குத்தான் அந்த நினைப்புக்கு அதிகாரம் உண்டு. மத்த யாரும் என் குழந்தையைப் பத்தி அப்படி ஒரு அவ எண்ணம் நினைச்சால் நான் பொறுத்திண்டிருக்க மாட்டேன். இன்னொரு தரம் நீ அப்படி ஒரு பேச்சுப் பேசினால் உன் மூஞ்சியிலேயே நான் முழிக்கமாட்டேன், பத்திரம்."

சீற்றக் கனல் ஒன்று என்னைத் தாண்டிக் கொண்டு வீட்டினுள் சென்றது.

அவளை நான் அன்றுதான், அப்போது தான், முதல் முறையாகச் சந்தித்தாற் போலிருந்தது.

இதயத்தைத் தலை கீழாய்ப் புரட்டி எல்லோரையும் முழுமையாக அறிந்து கொண்டு விட்டதாகவா இத்தனை நாள் எண்ணியிருந்தேன் ?

அனுபவம்
புதுமை

# மக்களின் பண்பு நாட்டின் மாண்பு

கி. ராஜேந்திரன்

(சென்ற இதழ் தொடர்ச்சி)

முன்னேற்றம் அடைந்த மேனாடுகளில் மக்கள் உழைப்பை எவ்வளவு கடுமையான முறையில் மேற்கொள்ளுகிறார்களோ அதே அளவுக்கு விடுமுறையையும் கடுமையான தாக்கிக் கொள்கிறார்கள்!

விடுமுறை நாட்களில் உழைப்பதில்லை என்பதில் கண்டிப்பும் கறாரும் காட்டுவது மட்டுமின்றி, விடுமுறையை அனுபவிப்பதற்காகத் தங்களை வருத்திக் கொள்ளுகிறார்கள்!

வெள்ளிக்கிழமை சாயங்காலமே மூட்டை முடிச்சுக்களைக் கட்டி எடுத்துக் காரில் ஏற்றிக் கொண்டு கிளம்பி விடுகிறார்கள். பல நூறு மைல்கள் பிரயாணம் செய்து ஓரிடத்துக்கு வந்து சேர்ந்து மறுபடியும் மூட்டை முடிச்சுக்களை யெல்லாம் பிரித்துச் சமைத்து உண்டு முடித்துப் படுப்பதற்குள் அப்பாடா! என்றாகிவிடும். மறுநாள் சனிக்கிழமை மீன் பிடிக்கப் போகும் குடும்பத் தலைவர் நிறைய மீன்கள் அகப்படவேண்டுமே என்று பரபரப்பார்! திங்கட்கிழமை காரியாலயத்தில் நண்பர்கள் கேட்கும்போது இவ்வளவு பெரிய மீன் சிக்கியது என்று சொல்லிக் கொள்ள ஆசைப்பட்டு இப்போது தவிப்பார். இதேபோல் ஒவ்வொருவருமே தங்கள் தங்கள் பொழுதுபோக்கை ரொம்ப 'ஸீரிய'ஸாக எடுத்துக்கொண்டு அவ









இப்படுவார்கள். ஞாயிற்றுக்கிழமைக் காலை தேவாலயத்துக்குப் போகிறவர்கள் போய் விட்டு வந்தால், மறுபடியும் மூட்டை கட்டிக் கொண்டு கிளம்பத்தான் நேரம் சரியாக இருக்கும். இருட்டுவதற்குள் வீடு போய்ச் சேர்ந்து சாப்பிட்டுவிட்டுச் சீக்கிரம் படுத் தால்தானே மறுநாள் ஆபீசுக்குப் போகச் சரியாக இருக்கும்!

இதேபோல் சனி ஞாயிறு விடுமுறையைக் கழிக்க ஆயிரக் கணக்கான அமெரிக்கக் குடும்பங்கள் காரிலேறிப் புறப்படுவார்கள். ஆதலால் சாலையில் கார்களின் நெரிசல் கட்டுக்கடங்காமல் இருக்கும். இந்த நெரிச லில் அகப்பட்டு ஊர்ந்து ஊர்ந்து வீடு போய்ச் சேருவதற்குள் போதும் போதுமென்றாகி விடும்! அப்போது எந்த எந்தச் சாலைகளில் போக்குவரத்து மிக அதிகமாக உள்ளது என்று அவ்வப்போது உள்ள நிலவரத்தை ரேடியோவில் ஒலி பரப்புவார்கள். அதைக் கேட்டு மக்கள் தாங்கள் வெளியே போவ தைச் சற்று நேரத்துக்கு ஒத்திப்போடு வார்கள். ஹெலிகாப்டர்களில் போலீஸார் பறந்து வந்து சாலையில் கார்களின் நெருக் கடியை ஆராய்ந்து நிலைமையைச் சமாளிக்க இயன்றதைச் செய்வார்கள்.

உழைப்பிலேயும் அவர்கள் பின்தங்கிய வர்கள் அல்ல. ஸான்பிரான்ஸிஸ்கோ அருகில் ஒரு சஞ்சிகைக் காரியாலயத்தில் உழைக்கும் ஒரு பெண் தன் மேஜை மீது ஒரு வாசகம் எழுதப்பட்டிருந்த அட்டையை நெட்டுக்குத்தாக அனைவருக்கும் தெரியும்படி வைத்திருந்தாள். ''நான் சும்மா உட்கார்ந்

இடது பக்கம்: பிரிட்டனில் ஓர் ஏக்கரு ஆலையின் இரு தோற்றங்கள். இடக்கரத்தை வீட்டிலே வைத்து விட்டு வந்த ஜெர்மானிய நண்பர்.

வலது புறம்: விடுமுறையை உல்லாசமாகக் கழிக்கக் கிளம்பிய அமெரிக்கக் குடும்பம்.

கீழே: அமெரிக்காவில் தேவாலயத்தில் பிரார்த்தனை நடக்கிறது.





திருப்பதாக யாரும் நினைக்க வேண்டாம்; தரப்பட்ட வேலைகளைத் துரிதமாக முடித்து விடுகிற ஆற்றல் எனக்குண்டு!''

தனது காரியங்களை யெல்லாம் செய்து முடித்து விட்டுத்தான் சும்மா உட்காரு கிறாளாம் அவள்!

பிரிட்டனில் 'வெஸ்டர்ன் மெயில்' காரி யாலயத்தில் தொழிலாளர் நிர்வாகி ஒரு வரை, ''நேரம் கழித்து வருவோர், முன்னறி விப்பின்றி விடுமுறை எடுப்போர் ஆகியோரை யெல்லாம் நீங்கள் எப்படிச் சமாளிக்கிறீர் கள்?'' என்று கேட்டேன்.

''அந்த வேலை எனக்குக் கிடையாது. அதையெல்லாம் யூனியன் கவனித்துக் கொள்ளும்'' என்றார்.

''என்ன சொல்கிறீர்கள்?'' என்று மறுபடி யும் வியப்புடன் கேட்டேன்.

''எங்கள் தொழிலாளர் அனைவரும் யூனி யன் பிரதிநிதிகள். இங்கு அவர்களுக்கு ஒரு தலைவர் உண்டு. காலதாமதமாக ஒருவன் வந்தால் அவனை எச்சரிக்க வேண்டியது அத் தலைவனது கடமை. தொடர்ந்து இரண்டு

மூன்று தடவை ஒரு நபர் காலதாமதமாக வந்தால் இங்குள்ள தொழிலாளர் தலைவர் இவ்விஷயத்தை யூனியன் தலைமைக்குத் தெரிவிப்பார். உடனே தவறு இழைத்த தொழிலாளி யூனியனிலிருந்து நீக்கப்படுவார். யூனியன் வழங்கும் அடையாளச் சீட்டு பறிமுதல் செய்யப்படும். அந்தச் சீட்டு இல்லாமல் அந்தத் தொழிலாளியால் எங்குமே வேலை பெற முடியாது. தொழிற் சங்கம் ரொம்பவும் பலமாக இருப்பதால் தொழிலாளர்களும் ஒழுக்கத்துடன் நடந்து கொள்கிறார்கள்."

"அதாவது தொழிற் சங்கம் தொழிலாளர்களின் ஊதியத்துக்காகப் போராடும்போது அவர்கள் நன்றாக, சரியாக உழைப்பார்கள் என்பதற்கும் உறுதி அளிக்கிறது. அப்படித்தானே?"

"ஆமாம். உழைப்பு இல்லாமல் உற்பத்தி எப்படிப் பெருகும்? உற்பத்தி பெருகாமல் ஊதியம் எப்படி உயரும்?"

அரசியல் புகாத தொழிற் சங்கங்கள் இயங்கும் முறை இது. நம் நாட்டிலோ...?

லாரன்ஸ் நகரில் வசிக்கும் தமிழ் நண்பர் அனந்தநாராயணன். அவரது மனைவி அவரிடம், "நமது வீட்டுக் கூரையைக் கவனித்து நாளாயிற்று. மாற்றிவிட்டால் தேவலை" என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

"அதற்கென்ன நம்ப லாயருக்கு ஃபோன் பண்ணி விட்டால் போகிறது" என்றார் அனந்தநாராயணன்.

"அதென்ன வீட்டுக் கூரையை மாற்ற வேண்டுமென்றால் வக்கீலுக்கு ஃபோன் செய்கிறேன் என்கிறீர்களே?" என்று நான் வியப்புடன் கேட்டேன்.

அவர் சிரித்துக் கொண்டே, "இங்கே இதெல்லாம் சகஜம் சார். அவர் வழக்கறிஞராய் இருந்து நிறையத்தான் சம்பாதிக்கிறார். ஆனாலும் கோர்ட்டுக்குப் போகாமல் சும்மா இருக்கும் நேரத்தை வீணாக்காமல் வீட்டு ரிப்பேர் வேலைகளைச் செய்கிறார். அவருடைய தகப்பனார் செய்து வந்ததும் 'ரூஃபிங் கான்ட்ராக்ட்'தான். அந்தத் தொழிலைக் கற்றுக் கொண்டே சட்டக் கல்வியும் பயின்று வந்தார் இவர். இப்போது இரண்டு தொழில்களுமே அவருக்கு வருவாயைத் தேடித் தருகின்றன!"

கல்லூரிக்குப் போய்க் கல்வி கற்ற பிறகும் கூரைமீது ஏறிக் கரங்களால் வேலை செய்வதை மட்டமாக நினைக்கவில்லை அவர்! மாறாக உடல் உழைப்பை உயர்வாகவே மதிக்கிறார்கள் மேலைநாட்டவர்.

அமெரிக்கச் சிறுவர்கள் பலர் காலை மாலை பத்திரிகைகளை இல்லங்களில் கொண்டு போய்ப் போட்டுப் பணம் சம்பாதிப்பார்கள் என்பது நமக்குத் தெரியும். ஆனால் நான் சந்தித்த ஒரு சிறுவன் இப்படிப் பணம் சம்பாதித்தது மட்டுமல்ல, சம்பாதித்ததைப் பாங்கிலே போட்டு வந்தான். பத்துப் பதினைந்து டாலர்கள் சேர்ந்ததும் பாங்கு மானேஜருக்கு ஒரு கடிதம் எழுதினான். 'நான் வாடகைச் சைக்கிளைப் பயன்படுத்தி வருகிறேன். சொந்தச் சைக்கிள் இருந்தால் இன்னும் அதிகமாக என்னால் சம்பாதிக்க முடியும். சொந்தச் சைக்கிள் வாங்க உங்கள் பாங்கிலிருந்து எனக்குக் கடன் கிடைக்குமா?'

கிடைத்தது!

அந்தச் சிறு வயதிலேயே முதல் போட்டுப் பொருளீட்டும் பக்குவத்தைப் புரிந்து கொண்ட சிறுவன் நாளாக ஆக, வாழ்க்கையில் எப்படி முன்னேறுவான்; தொட்டில் பழக்கம் எதுவரை நீடிக்கும் என்பது நமக்குத் தெரியாதா?

பிரிட்டனில் ஸ்பென்ஸர் ஸ்டீல் ஒர்க்ஸ் என்ற மாபெரும் நிறுவனம். பல மிலியன் பவுண்டுகளை விழுங்கிவிட்டு உற்பத்தியைத் தொடங்கியிருந்தது. மோட்டார் கார்களுக்கும் பிற உபயோகங்களுக்கும் இரும்புத் தகடுகளைத் தயாரிக்கும் இயந்திரங்கள் இயங்குவது கம்ப்யூட்டரால். இரும்புக் கனிப் பொருளை உலையில் இடுவதில் தொடங்கிச் சுருள்சுருளாக எஃகுத் தகடுகள் வந்து விழும் வரையில் அங்கு மனிதனுக்கு வேலை இல்லை. ஏதோ ஒன்றிரண்டு பித்தான்களை அழுத்தினால் மற்ற விவரங்களைக் கம்ப்யூட்டர் கவனித்துக்கொள்ளும்! இப்படிப்பட்ட நிறுவனத்தில் காரியாலய அறைகளைப் போய்ப் பார்த்த போது திடுக்கிட்டேன். பிளைவுட் சுவர், தகரக் கூரை!

"என்ன இது? உங்கள் காரியாலயம் இப்படி இருக்கிறது?" என்று ஆச்சரியப்பட்டுக் கேட்டேன்.

"காரியாலயத்துக்கு என்ன அவசரம்? முதலில் தொழிற்சாலையிலுள்ள இயந்திரங்களுக்குத்தான் உறுதியான கட்டிடங்கள் தேவை. ஆலை நன்றாக இயங்கி லாபம் ஈட்டத் தொடங்கினால் பிறகு படிப்படியாகக் காரியாலய அறைகள் வந்துவிட்டுப் போகின்றன!" என்றார்கள்.

எடுத்த எடுப்பில் உயர் அதிகாரிகளுக்கான குளுகுளு அறைகளை அவர்கள் அமைத்துக் கொள்ளவில்லை. தொழிலாளர்களுக்கான குடியிருப்புக்களையும் உருவாக்கவில்லை. காரியாலயக் கட்டிடங்களில் பணத்தை விரயம் செய்யவில்லை. முதலீடு முழுவதையும் உற்பத்தித் திறனை முடுக்கி விடுவதிலேயே முடக்கினார்கள்.

லாரன்ஸ் நகரில் ஒரு பாங்குக்குச் சென்று எனக்குச் செலவுக்குக் கொடுக்கப்பட்டிருந்த ஒரு செக்கை மாற்ற முற்பட்டேன்.

"இந்தப் பாங்கில் உங்களுக்குக் கணக்கு இருக்கிறதா?" என்றார்கள்.

"இல்லை" என்றேன்.

"உங்கள் பாஸ்போர்ட் இருக்கிறதா?"

அப்போதுதான் நான் பாஸ்போர்ட்டை ஹோட்டல் அறையில் வைத்துவிட்டு வந்துவிட்டது ஞாபகம் வந்தது.

"மன்னியுங்கள் நான் நாளை வருகிறேன்" என்று கூறி விட்டுத் திரும்பிச் செல்ல முற்பட்டேன்.

"சற்று இருங்கள்" என்றார் அந்த உத்தியோகஸ்தர். "உங்களுக்குத் தெரிந்தவர்கள் யாராவது இந்த நகரில் வாழ்கிறார்களா?"

நண்பரின் பெயரையும், அவர் உத்தியோகத்தையும் சொன்னேன்.

உடனே அவர் நண்பருக்கு டெலிபோன் செய்தார். மறு நிமிடம் பணத்தை எண்ணி என் கையில் கொடுத்து விட்டார்!

அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் பிரயாணிகள் செக்காக இருந்தால் **(Travelers' Cheque)** கையெழுத்துப் போட்டுத் தந்த மறு விநாடியில் அதை எந்தக் கடையிலும் அல்லது பாங்கிலும் மாற்றலாம்.

**ம**லேஷியத் தலைநகர் குவாலாலம்பூரில் நமது தமிழ் நாட்டுப் பாங்கு ஒன்றில் ஒரு டிராவலர்ஸ் செக்கைக்கொடுத்தேன். அதற்கு நாலு ஃபாரம் பூர்த்தி செய்யச் சொன்னார்கள். அவர்களே இரண்டு ஃபாரம் பூர்த்தி செய்தார்கள். பணத்தை நாலு தடவை எண்ணித் தந்து இரண்டு இடத்தில் கையெழுத்து வாங்கிக் கொண்டார்கள். பணம் வாங்குவதற்கு முன்னால் டோக்கனை வாங்கிக் கொண்டு அரை மணி முக்கால் மணி காத்திருக்கும் அனுபவம் நம்மில் பலருக்கு உண்டே! அனாவசியக் காரியங்களை வளர்த்துக் கொள்ளாமல் வேலைகளை எளிதாக்கிக் கொள்ளவும் எதிரே இருப்பவரை நம்பவும் நாம் எப்போது கற்றுக்கொள்ளப் போகிறோம்?

ஹாம்பர்க் விமான நிலையத்திலிருந்து எனது பெட்டி தவறுதலாக வேறு ஒரு விமானத்தில் ஏற்றப்பட்டுப் போய்விட்டது! இரண்டு நாட்களுக்குப் பிறகு அமெரிக்காவிலிருந்தேன் நான். லுப்தான்ஸா காரியாலயத்தில் போய் விசாரித்தேன். ''கவலைப்படாதீர்கள். இன்னும் ஒரு வாரத்தில் உங்கள் பெட்டியைக் கண்டுபிடித்துக் கொடுத்து விடுகிறோம். இடையில் உங்கள் அத்தியாவசியத் தேவைகளை வாங்கிக் கொள்ள இந்த இருபத்தைந்து டாலர்களை வைத்துக் கொள்ளுங்கள்'' என்றார்கள். சொன்னபடி ஒரு வாரத்தில் பெட்டியைக் கொண்டு வந்து சேர்த்து விட்டார்கள்.

இப்படி உழைப்புக்கும் திறமைக்கும் எடுத்துக்காட்டாக விளங்குபவர்கள் நகைச்சுவை மிக்கவர்களாகவும் இருக்கிறார்கள்.

பெர்லினில் என்னுடன் வந்து பாஷை தெரியாத எனக்குப் பல இடங்களையும் ஆங்கிலத்தில் விளக்கிக் கூறி வந்த கல்லூரி மாணவர் அரசியல் படிப்பவர். மோட்டார் விபத்து ஒன்றில் ஒரு கரத்தை இழந்து விட்டவர் அவர். கோட்டை அவர் அணிந்திருக்கும்போது தமக்குப் பயன்படாத கோட்டின் ஒரு கரத்தைக் கோட்டுப் பைக்குள்ளேயே செருகி வைத்திருப்பார். பார்ப்பதற்கு அவர் தமது ஒரு கரத்தைக் கோட்டுப் பைக்குள் விட்டுக் கொண்டிருப்பது போல் தோன்றும்.

ஒரு கடையில் நாங்கள் ஏதோ வாங்க நின்றுகொண்டிருந்தபோது பக்கத்தில் இருந்த ஒரு பெண்மணி ''உங்களுடைய ஒரு கரம் என்ன ஆயிற்று?'' என்று அவரைக் கேட்டாள். சட்டென்று திரும்பிப் பார்த்தேன். அவரது கோட்டுக் கரம் தற்செயலாகப் பையிலிருந்து கழன்று நழுவித் தொளதொளவென்று தொங்கிக் கொண்டிருந்தது.

'அடடா! அசந்தர்ப்பமாக இப்படி ஒரு கேள்வியைப் போட்டுவிட்டாளே இவள்!' என்று வருந்தினேன்.

இதற்குள் நண்பர், ''ஓ! அதுவா? இரவு படுக்கப் போகு முன் கழற்றி வைத்தேன்.



''நல்ல வேளை. நேற்று என் மனைவி காப்பாற்றினாள். பஸ்ஸிலே பிக்பாக்கெட்டிலிருந்து தப்பிச்சேன்.''

''எப்படி? பிக்பாக்கெட்காரனைக் கையோட பிடிச்சுட்டாளா ?''

''அதெல்லாம் இல்லே. வீட்டிலேயே மணிபர்சை அவள் எடுத்து வைச்சுண்டுட்டாள் !''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

காலையில் அவசரத்தில் அதை மாட்டிக் கொள்ள மறந்து போய்விட்டேன்!'' என்று கூறிவிட்டுச் சிரித்தார்.

அந்த அம்மணியும் முகம் சிவக்க வெட்கப்பட்டுச் சிரித்தாள்; மன்னிப்புக் கேட்டுக் கொண்டாள்.

ஒரு கை இழந்த அந்த இளைஞர் தன்னம்பிக்கையுடன் செயலாற்றியது எனக்குத் திருப்தி அளித்ததென்றால், அங்கஹீனத்தை ஒருவர் சுட்டிக்காட்ட அதற்காகக் கோபப்படாமல் தமாஷ் செய்தது அதைக் காட்டிலும் மன நிறைவை உண்டாக்கியது.

நகைச்சுவையாகப் பேசுவதுடன், நகைச்சுவையை ரசிக்கவும் செய்கிறார்கள்.

பிரிட்டிஷ் நண்பர் ஒருவருடன் பேசிக்கொண்டிருக்கும்போது அவர் அடிக்கடி 'ஜாலி குட் ஜாலி குட்' என்று கூறிவந்தார். அவர் மட்டுமல்ல. பிரிட்டனில் பலரும் இந்தச் சொற்றொடரைப் பயன்படுத்துவார்கள்.

நண்பரிடம் நான் சொன்னேன்: ''ஜாலி குட் (Jolly good) என்பதை அடிக்கடி நீங்கள் சொல்கிறீர்களே, அதைப் பற்றி ஒரு கதை சொல்லட்டுமா?''

''சொல்லுங்கள்'' என்றார் அவர்.

''சென்னையில் எங்கள் காரியாலயத்தில் முன் அறையில் பல பெரியோர்களின் படங்கள் மாட்டப்பட்டிருக்கும். பிரிட்டிஷ் பத்திரிகையொன்றின் துணையாசிரியர் ஒருவர் எங்கள் காரியாலயத்துக்கு ஒரு முறை விஜயம் செய்தார். அவருக்குக் காரியாலயத்தைச் சுற்றிக் காண்பிக்க முற்பட்ட நான் அந்த அறையில் இருந்த பெரியோர்களின் படங்களை முதலில் காட்டினேன். 'இது பாரதியார் தமிழகத்தின் மகா கவி; இது டி. கே. சிதம்



பஸ் கண்டக்டர்: ஏன் சார்! நேற்று இரவு அப்புறம் சரியா வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தீர்களா ?''

பிரயாணி: ஆமாம், சேர்ந்தேன். ஏன் அப்படிக் கேட்கிறீர் ?

கண்டக்டர்: நேற்று இரவு நீங்க எழுந்து நின்று கொண்டு ஒரு பெண்மணிக்கு உட்கார இடம் கொடுத்தீர்கள்.

பிரயாணி: ஆமாம், கொடுத்தேன். அதில் என்ன தப்பு ?

கண்டக்டர்: தப்பு இல்லை! உங்க இரண்டு பேரையும் தவிர பஸ் முழுதும் காலி சீட்டாகத்தான் இருந்தது!

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

பரநாத முதலியார், ரசிகமணி என்பார்கள் இவரை; இவர் வ. உ. சிதம்பரம் பிள்ளை, கப்பலோட்டிய தமிழன் எனப்படுபவர்' என ஒவ்வொருவரது படத்தையும் கட்டிக்காட்டி அவரது சாதனையையும் விளக்கி வந்தேன். பிரிட்டிஷ்காரர் ஒவ்வொன்றுக்கும் 'ஜாலி குட்', 'ஜாலி குட்' என்று கூறியபடி இருந்தார்.

'''கடைசியில்' இவர்தான் என் தகப்பனார். 'கல்கி' என்பது அவரது புனைபெயர். 1954ல் காலமாகிவிட்டார் என்றேன்.

'''ஜாலிகுட்' என்றார் அவர் சற்றும் யோசனையோ தயக்கமோ இன்றி!''

இந்தக் கதையைக் கேட்டு அந்த பிரிட்டிஷ் நண்பர் எப்படிச் சிரித்தார் என்கிறீர்கள்!

அமெரிக்காவில் முடிவெட்டிக் கொள்ள வேணுமானாலும் முன் கூட்டியே எப்போது வரலாம் என்று டெலிபோன் செய்து கேட்டுக் கொண்டு போக வேண்டும். இது தெரியாமல் நான் ஒரு நாள் முடி திருத்தும் நிலையத்தில் நுழைந்து விட்டேன். அந்நிலையத்தில் பணியாற்றிய ஒரு நீக்ரோ ''இன்று முழுவதும் உங்களைக் கவனிக்க எங்களால் முடியாது. நாளைக் காலை எட்டு மணிக்கு வந்தால் நல்லது'' என்றார்.

சரி என்று கூறிக் கிளம்பினேன். ''நீங்கள் மறந்துபோகாமல் இருக்க நேரத்தைக் குறித்துக் கொடுக்கிறேன்'' என்று சொல்லி விசிட்டிங் கார்டு ஒன்றில் எழுதித் தந்தார். அதைப் பெற்றுக் கொண்டு நடந்த நான் அன்று இரவுதான் சாவகாசமாக அதனைப் படித்துப் பார்த்தேன். ஒரு பக்கத்தில் முடிதிருத்தும் நிலையத்தின் பெயரை அச்சடித்திருந்தது. அதில் நேரமும் பேனாவால் குறித்திருந்தது. மறு பக்கத்தில் ஒரு பொன் மொழி அச்சாகியிருந்தது. அதன் தமிழாக்கம் இது:

### கவலை ஏன்?

கவலைப்படுவதற்கு இரண்டு விஷயங்கள் தான் உள்ளன. ஒன்று, நீங்கள் ஆரோக்கியமாக இருக்கிறீர்கள் அல்லது நோயுற்று இருக்கிறீர்கள்.

ஆரோக்கியமாக இருந்தால் கவலைப்பட ஒன்றுமில்லை. நோயுற்றிருந்தால் கவலைப்பட இரண்டு விஷயங்கள்தான் உள்ளன. ஒன்று நீங்கள் குணமடைவீர்கள் அல்லது இறந்து போவீர்கள்.

குணமடைந்து விட்டால் கவலைப்படுவதற்கு ஒரு காரணமும் இல்லை.

இறந்துபோனாலும் கவலைப்பட இரண்டு விஷயங்களே உள்ளன.

ஒன்று நீங்கள் சொர்க்கத்துக்குப் போவீர்கள் அல்லது நரகத்துக்குப்போவீர்கள்.

சொர்க்கத்துக்குப் போனாலும் கவலைப்பட ஒன்றுமில்லை; நரகத்துக்குப் போனால் அங்கு உங்கள் நண்பர்களைச் சந்தித்துக் கைகுலுக்கும் வேலையே சரியாக இருக்கும்.

கவலைப்படவே உங்களுக்கு நேரமிருக்காது!

''செல்வச் செழிப்பு மிகுந்த நாடுகளில், வாழ்க்கைத்தரம் உயர்ந்த தேசங்களில் மக்களின் இறை உணர்ச்சி குன்றி வருகிறதா? மக்கள் தேவாலயங்களுக்குப் போகும் பழக்கம் குறைகிறதா?''

பிரிட்டனில் உள்ள ஒரு பாதிரியை நான் கேட்ட கேள்விகள் இவை:

அவர் சொன்னார்: ''மக்கள் தேவாலயங்களுக்கு வருவது குறைந்துதான் உள்ளது; மறுக்கவில்லை. ஆனால் தேவாலயங்கள் மக்களிடம் போவது அதிகரித்திருக்கிறது என்பதை மறந்துவிடக் கூடாது!''

இன்று பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் டெலிவிஷன், ரேடியோ மூலம் மக்கள் பாதிரிகளின் அருள் வாக்குகளைக் கேட்க வாய்ப்பிருக்கிறது. மாதா கோயில்களுக்குப் போகாதவர்கள் டெலிவிஷனில் கோயிலையும் பாதிரியையும் காண்கிறார்கள்.

அமெரிக்காவிலோ பாதிரிகள் மாதா கோவில்களில் மதப் பிரசாரம் செய்வதோடு அரசியல் பிரசாரம் கூடச் செய்கிறார்கள்!

ஜனாதிபதி ஜான்சன் ஒரு மாதா கோயிலுக்குப் போயிருந்தபோது அங்கே பாதிரி தர்மப் பிரசாரம் செய்வதோடு வியட்நாம் விவகாரத்திலும் ஜான்சனுக்கு அறிவுரை வழங்கினார்!

இதை ஜனாதிபதி ஜான்சனே ஒரு நிருபர் கூட்டத்தில் சொன்னார், அமெரிக்க மக்களின் பல்வேறு கருத்துக்களையும் ஆராய்ந்து நோக்க வேண்டிய கடமை தமக்கிருப்பதை உணர்த்தும் வகையில்!





குளிப்பில் குன்றாத ஆனந்தம் பெற

# காவேரி
# சூபர் சோப்

என்ன சுகம்...என்ன ஆரோக்கியம் !!
வியர்வை நாற்றம் அகன்று,
குளிர்ந்த சுகம் பெற காவேரி சூபர்.
சால்முக்ரா தைலம் கலந்தது.






மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல்
கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை R.S. சேலம் ஜில்லா
மானேஜிங் ஏஜெண்ட்ஸ்:
சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்

Criterion-MC-1132

# கூட்டுக்கல்வியால் கூடிவரும் நன்மைகள்

**"ஆ**ண், பெண் இருபாலாரும் ஒரே இடத்தில் பயிலும்போது போட்டி மனப்பான்மை வளர்கிறது. ஒரு மாணவர் நிறையத் தேர்வு எண் பெற்ருல், நாமும் அந்த அளவு தேர்ச்சி பெற வேண்டும் என்ற உணர்வு உடன் பயிலும் மாணவியின் உள்ளத்திலும் பிறக்கிறது. ஒரு பெண் சிறப்பாகத் தேர்வு பெற்ருலும், ஆண் மகளுகிய நம்மால் இந்தச் சாதனையை நிகழ்த்த முடியாதா என்ற உத்வேகம் மாணவரின் மனத்திலே எழுவது இயல்பு. இப்படி ஆண்களும் பெண்களும் ஒருவரோடு ஒருவர் போட்டி போட்டுக் கொண்டு பயிலும் போது இருபாலாரும் படிப்பில் தீவிர கவனம் செலுத்துகின்றனர். போட்டி வலுப்பதால் மாணவ — மாணவியரின் திறமை வளரும்; கல்வியின் தரமும் உயரும். 'ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வமிந்த நாட்டிலே' என்று பாரதியார் முழங்கியதற்கேற்ப, சரிநிகர் சமானமாகவும் வாழ வேண்டும்; சேர்ந்து கல்வி பயிலவும் வேண்டும். மாணவரும், மாணவியரும், "நாம் கல்வி பயில வந்திருக்கிறோம்; காதல் லீலைகளில் ஈடுபடுவதற்கல்ல என்ற நல்லுணர்வோடு பயின்ருல் என்ன விபரீதம் நேர்ந்துவிடும்?" என்று கேட்கிருர் சென்னை மாநிலக் கல்லூரியில் பி. ஏ. இறுதி ஆண்டுக் கல்வி பயிலும் குமாரி வி. கே. சுதா. இவர் மாணவியர் பிரிவுச் செயலாளராகவும்தேர்ந்தெடுக்கப்பெற்றவர்.

"நீங்கள் மனத் தத்துவத்தை முக்கிய பாடமாக எடுத்துக்கொண்டு படிக்கிறீர்களே, மாணவர்கள் உங்களுடன் எப்படிப் பழகுகிருர்கள்? உங்களைப் பற்றி அவர்கள் என்ன நினைக்கிருர்கள்? அழகிய மாணவிடன் உடன் படிப்பதால் மாணவர்களின் கவனம் படிப்பினின்றும் திசை திரும்புகிறதா — இது பற்றி நீங்கள் எப்போதாவது சிந்தித்ததுண்டா ?"

"மாணவர்களும் மாணவிகளும் மாநிலக் கல்லூரியில் நல்ல முறையிலேதான் பழகி வருகின்றனர். இந்த ஒழுங்கு முறையை நேரிலேயே கண்டு வருகிறேன். ஆதலால், இதைப் பற்றிச் சிந்திக்க வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. பெண் செயலாளர் என்ற முறையில் மாணவர்களைப் பற்றி மாணவிகள் யாரும் என்னிடமோ மற்றவர்களிடமோ இதுவரை புகார் செய்ததில்லை. என் வகுப்பில் 12 ஆண்களும் 7 பெண்களும் உள்ளனர். எங்கள் கல்லூரித் தலைவரும் மாணவிகள், மாணவர்கள் எல்லாரையும் சமமாகவே மதித்து நடக்கிருர். மாணவிகளுக்கு ஏதாவது உதவி தேவைப்பட்டால் மாணவர்கள் மகிழ்ச்சியோடு, நேசபாவத்துடன் உதவ முன்வருகிருர்கள். நூலகத்தில் ஒரு புத்தகத்தின் பிரதி ஒன்றேஒன்று இருந்து, அதற்கு ஒரு மாணவரும் மாணவியும் மனுச் செய்திருந்தால் இருவருமே மற்றவருக்காக விட்டுக் கொடுக்கத் தயாராக உள்ளனர். இது கூட்டுக் கல்வியால் ஏற்படும் நன்மை என்றே கூறலாம். ஒருவரையொருவர் புரிந்து கொள்ளவும், விட்டுக் கொடுக்கும் மனப்பக்குவம் ஏற்படவும் கூட்டுக் கல்வி முறை உதவுகிறது என்று கூறுவேன்."

"மாணவிகள் மகளிர்க்கென ஏற்பட்ட கல்லூரிகளில் பயில்வதைவிட மாநிலக் கல்லூரியில் கூட்டுக் கல்வி பயில்வதே சிறந்தது என்று கருதுகிறீர்களா ?"

"அதுவே என் உறுதியான நம்பிக்கை. அநுபவத்தில் கண்டறிந்த உண்மை. உயர் கல்வி பயில்வோருக்கும், மருத்துவக் கல்வி பயில்வோருக்கும் மட்டுமே கூட்டுக் கல்வி உகந்தது. மற்றவர்களுக்கு இம்முறை உகந்ததன்று என்பதையும் என்னுல் ஒப்புக் கொள்ள முடியவில்லை. 17, 18 வயதில் ஒரு மாணவருக்கோ மாணவிக்கோ ஏற்படாத பொறுப்புணர்ச்சி திடீரென்று இருபது வயதில் எங்கிருந்து வந்து விடும்? உடன் படிக்கும் பெண்களிடம் பண்போடு நடந்து கொள்ளுவது, பிறரை மதிப்பது — இதெல்லாம் பொதுவாக எல்லாருக்குமே இருக்கவேண்டிய அடிப்படைப் பண்புகள் அல்லவா ?

மகளிர் கல்லூரிகளில் புகுமுக வகுப்பு முடித்து விட்டு, கூட்டுக் கல்விமுறை அமுலில்

சுவையான சர்ச்சைகள்



குமாரி
வி. கே. சுதா

உள்ள மாநிலக் கல்லூரிக்கு பி. ஏ., பி. எஸ்ஸி. பயில வரும் மாணவிகளுக்கு ஆண்களுடன் சேர்ந்து பயிலும் அநுபவம் புதுமையாக இருக்கும். ஆனல் இரண்டு மூன்று வாரங்களில் இந்தச் சூழ்நிலை பழகிவிடும். ஆண்களைப் பற்றி அதுவரை தப்பான கணக்குப் போட்டு வைத்திருந்தவர்களுக்கு உண்மை விளங்கும். மாணவர்கள் மாணவிகளை விழுங்கி விடுவார்கள் என்று ஒருவித பிரமை கொண்டிருந்தவர்கள் உண்மையைப் புரிந்து கொள்ளுவார்கள். பயந்த சுபாவமுள்ள பெண்களுக்கு அச்சம் நீங்கித் தெளிவு பிறக்கும்.

வேறு ஒரு முக்கியமான நன்மையும் ஏற்படுகிறது. ஆண்களுடன் சேர்ந்து பயிலும் வாய்ப்புப் பெற்ற மாணவிகள் வருங்காலத்தில் ஓர் அலுவலகத்துக்குச் சென்று பணி

யாற்றத் தொடங்கும்போது ஆண்களைக் கண்டு மிரள வேண்டியிராது. ஆண்பிள்ளைகள் எல்லாரும் கரடி, புலிகள் என்று நடுங்க வேண்டாம்; சகஜமாகப் பழகலாம். மகளிர் கல்லூரிகளில் பயின்றவர்களைவிட, கூட்டுக் கல்வி பயின்ற மாணவிகளுக்கு ஆண்களோடு ஒரே அலுவலகத்தில் பழகுவதும் பணியாற்றுவதும் சுலபமாக அமைகிறது. இது ஓர் அனுகூலந்தானே?''

''மாணவர்கள் மாணவிகளிடம் முறை தவறி நடந்து கொள்ளுவதில்லை; சகோதரிகளாகவே மதித்து நடக்கிறார்கள் என்பது உங்கள் கல்லூரி அனுபவம்—அப்படித்தானே?''

''மாணவிகள் மாணவர்களிடம் முறை தவறி நடந்து கொள்ளுவதும் இல்லை!'' என்று சிரித்துக் கொண்டே கூறிய சுதா, ''நாங்களும் மாணவர்களைச் சகோதரர்களாகவே நினைக்கிறோம். மாணவிகள் கல்லூரியில் தேர்தலுக்கு நிற்கும்போதுகூட மாணவர்கள் பலர் எங்களுக்காகப் பிரசாரம் செய்வதுண்டு. இனக் கவர்ச்சி என்பது மாணவர் — மாணவியர் உலகத்துக்கு மட்டும் தனி உடைமையன்று. சமுதாயத்தில் மற்றத் துறைகளில் இதைப் பற்றி எந்த அளவுக்குக் கவலைப்படுகிறார்களோ, அவ்வளவுக்கு மாணவ சமுதாயத்தைப் பற்றிக் கவலைப்பட்டால் போதும். இருபத்தொரு வயதுக்குட்பட்ட பெண்கள் பல அலுவலகங்களில் ஆண்களுடன் பணியாற்றவில்லையா? மாணவிகளைப் பற்றி மட்டும் ஏன் இந்த வீண் கவலை? படித்த மாணவிகளுக்குத் தங்களைக் காப்பாற்றிக் கொள்ளும் திறமையும் பொறுப்பும் உண்டு. உடைகளைப் பற்றிக் குறிப்பிடும் போது ஒரு கருத்தைத் தெரிவிக்க விரும்புகிறேன். மகளிர் கல்லூரிகளில் பயிலும் மாணவிகளைவிட, மாநிலக் கல்லூரி போன்ற கூட்டுக் கல்வி அமுலிலுள்ள கல்லூரிகளில் பயிலும் மாணவிகள் ஆடை விஷயத்தில் குறை கூற இடமில்லாமல் நடந்து கொள்ளுகிறார்கள். மகளிர் கல்லூரி மாணவிகள்கூடச் சற்று ஏனோதானோ என்று உடுத்தலாம். இங்கு அப்படியில்லை. மாணவர்கள் நம்முடன் சேர்ந்து படிக்கிறார்கள் என்ற உணர்வு காரணமாக எங்கள் கல்லூரி மாணவிகள், யாரும் பழித்துரைக்க இடமில்லாத முறையில் உடையணிகிறார்கள். பெண்கள் கண்ணியமாக உடுத்த வேண்டிய தன் அவசியத்தைப் பிறர் எடுத்துரைக்காமலே மாணவிகள் உணர்ந்துகொள்ளக் கூட்டுக் கல்வி வழி செய்கிறது என்று சொல்லலாம்.''

''பாரதப் பண்பும் கலாசாரமும் மாணவ மாணவியரின் உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் வரை, கூட்டுக் கல்வியால் ஆபத்து எதுவுமில்லை; எந்தச் சூழ்நிலையிலும் அவர்கள் கண்ணியமாகவே நடந்து கொள்ளுவார்கள் என்ற நம்பிக்கை நீங்கள் தெரிவித்த கருத்துக்களில் எதிரொலிக்கிறது. அப்படித்தானே?'' என்றேன்.

''சந்தேகமேயில்லை. ஒரு விளக்கம் கூறுகிறேன்: என் சகோதரியும் மாநிலக் கல்லூரியில்தான் பயின்றாள். இதே கல்லூரியில் பயின்றவர்தான் என் அண்ணனும். கூட்டுக் கல்வி விரும்பத் தக்கதன்று என்று அவர்கள் நினைத்திருந்தால், என்னை வேறு ஏதாவது ஒரு மகளிர் கல்லூரியில் சேரும்படி கூறியிருப்பார்கள். அவர்களின் நம்பிக்கையை என் அனுபவமும் உறுதிப்படுத்துகிறது!'' என்றார் குமாரி சுதா. —பேட்டி : பாணன்

## நாய் வளர்ப்போருக்கு :

**மா**ஸ்கோ நாய் மன்றத்தின் போதகர் எ. ஓர்லோவ் நாய் வளர்ப்பைப் பற்றிக் கூறுகிறார்: ''வெளியிலிருந்து வீசும் காற்று நேரே படாதபடி அறையினுள் ஒதுக்குப்புறமான இடத்தில் நாய்க்குட்டி இருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டும். படுப்பதற்கு ஒரு பாய் இருக்க வேண்டும். மாதம் இரண்டு, மூன்று முறை பாயைக் கழுவிச் சுத்தம் செய்ய வேண்டும். அருகில் ஒரு சட்டியில் சுத்தமான குடி தண்ணீர் ஊற்றி வைத்திருக்க வேண்டும். நாய் வெளியே முற்றத்தில் தங்க நேர்ந்தால், அங்கு அதற்கு ஒரு சிறு வீடு கட்டித் தர வேண்டும்.

''தோலைப் பிராண்டாமல் நாயின் முடிகளைச் சீப்பால் சீவி ஒழுங்கு செய்ய வேண்டும். சிக்கல் பிடித்திருந்தால் முடிகளில் தண்ணீர் தடவிச் சீவுங்கள். மாதம் ஒரு முறை சுடுதண்ணீரில் நாயைக் குளிப்பாட்டுங்கள். அதை வெளியே அழைத்துச் செல்லும்போது அது ஓடியாடி விளையாடுவதற்கு வசதி செய்து கொடுங்கள். அதற்கு எளிய வேலைகள் கொடுங்கள். உங்கள் சொற்படி அது நடந்து கொண்டால் உடனே தின்பதற்குச் சுவையானதாக ஏதாவது அளித்து அதை உற்சாகப்படுத்துங்கள்.''

நாயைக் குளிப்பாட்டத் தண்ணீர் ஊற்றும்போது வால் பக்கத்தில் ஆரம்பித்து, கொஞ்சம் கொஞ்சமாக வந்து கடைசியாகத் தலையில் ஊற்றவேண்டும். முதலில் தலையில் ஊற்றிவிட்டால் அதற்கு நடுக்கம் ஆரம்பித்து விடும்.

நாயின் வாலை வெட்டிவிட்டால் அதன் ஓடும் வேகம் குறைந்து விடும்! நாய் தன்னுடைய வாலையே துரத்தித் துரத்திப் பிடிக்க முயன்று கொண்டிருந்தால் அது மிகவும் மகிழ்ச்சியாக இருப்பதாகக் கொள்ள வேண்டும்.''

ஃ ஃ ஃ

வர்ஜீனியா மாகாணத்தில் நார்போக் என்னும் இடத்தில் நாய்க் குட்டிகளுக்காக இரத்தச் சேமிப்பு நிலையம் ஒன்றிருக்கிறது.

கலிபோர்னியாவில் உள்ள இரண்டு நாய்க் குட்டிகளுக்கு ஐந்து லட்சம் ரூபாய் பெறுமான சொத்து இருக்கிறது. அவற்றிலிருந்து வருஷத்துக்கு 8000 ரூபாய் வருமானம் வருகிறது.

— என். ஆர். மோகன்



# தூக்குக் கயிறு

## அகிலன்

தூக்குக் கயிறு விட்டத்திலிருந்து தொங்கிக்கொண்டிருந்தது. அவன் தன்னுடைய முடிவை நோக்கி அப்போது தன்னையே முடுக்கி விட்டுக் கொண்டிருந்தான்...

குமாரசாமியின் உயிர்ச் சுமை, அவனுடைய தலையில் ஏற்றி வைத்த பாறாங்கல்லைப்போல் அவனுடைய குரல்வளையை நெருக்கிக் கொண்டிருந்தது. மூச்சு முட்டியது அவனுக்கு. எறும்புக் கூட்டுக்குள் கிடந்து அடித்துக் கொண்ட இதயம் நொண்டிக் குதிரையாக மாறிக் கொண்டு வந்தது.

அவனே தன் முடிவை மாற்றிக் கொண்டு, இனி வாழ விரும்பினாலும் அது முடியாது போல் தோன்றியது. அவன் செய்துவிட்ட முடிவு, அவனையும் மீறித் தன்னைத் தானே நிறைவேற்றிக் கொள்ளும் போலிருந்தது. இன்னும் ஒரு மணிப் பொழுதுகூடக் குறுக்கே யில்லை.

ஒன்று, அதற்குள் அவனாகவே தூக்குப் போட்டுக் கொள்ள வேண்டும்; அல்லது நொண்டிக் குதிரையாகிச் சண்டித்தனம் செய்து கொண்டிருந்த இதயம் தானாகவே படுத்துவிடும்.

மாடி அறை விட்டத்தில் தொங்கிய தூக்குக் கயிற்றை இழுத்துப் பார்த்தான். உறுதியான மணிக் கயிறுதான். படுக்கையைக் கட்டுவதற்காக அவன் பயன்படுத்தி வந்த கயிறு — அதைவிடக் கெட்டியாக ஒன்று இருந்திருந்தால் இன்னும் வசதிதான். ஆனால் கடையில் போய் வாங்க வேண்டுமென்றால் காசு வேண்டுமே?

காசு! ஆம், கையில் அது இருந்திருந்தால் இந்தப் பிரச்னையே வந்திருக்காது. அது இல்லாததால்தானே இது!

கட்டிளம் காளைப் பருவம் என்று சொல்வார்களே, அந்தப் பருவம் அவனுக்கு. இருபத்தைந்து வயது. படிக்காத முட்டாள் அல்ல அவன்; படித்த முட்டாள்; பி.ஏ. முதல் வகுப்பில் தேறியதற்கான சான்றுகள்






பெட்டிக்குள் பத்திரமாக இருந்தன. ஆனால் அந்தக் கட்டிளம்காளை இப்போது கசாப்புக் கடைக்காரனிடம் அனுப்பப்படும் அடிமாடு போல் இளைத்திருந்தான். நடையில் மிடுக்கில்லை; தோள்பட்டைகள் தொங்கிவிட்டன. தலை காடாகிப்போனது; சட்டை வேட்டிகள் கசங்கி யிருந்தன.

அவனுடைய சட்டைப் பைக்குள் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது ஓர் அஞ்சலட்டை; அன்றைக்குக் காலைத் தபாலில் வந்த ஆறு பைசா தபால் கார்டு அது. 'வாழ்வா, சாவா?' என்ற முடிவுக்கு வருவதற்கு அவன் அன்றையத் தபாலையோ, தந்தியையோதான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அவன் எதிர்பார்த்தது வந்து விட்டது, சாவின் அனுமதிச் சீட்டாக.

ஆறடிக்குப் பத்தடி இருந்த அந்த மாடி அறைக்குள் நடுக்கத்தோடு குறுக்கும் நெடுக்கும் நடந்து கொண்டிருந்த குமாரசாமி, தெருப்பக்கம் பார்த்த ஜன்னலருகே வந்து, கடிதத்தை மீண்டும் எடுத்துப் படித்தான்.

''இனிமேல் இப்படிக் கடுதாசி போட வேண்டாம். தந்தி கொடுக்கவும் வேண்டாம். உங்கள் அப்பா அம்மா எங்களுக்கொன்றும் கொட்டிக் கொடுத்து விட்டுப் போகவில்லை. நாங்களும் பிள்ளை குட்டிக்காரர்கள். தயவுசெய்து இத்தோடு உங்கள் அண்ணாவுக்குத் தொந்தரவு கொடுப்பதை நிறுத்திக் கொள்ளுங்கள்.''

அவனுடைய அண்ணாவுக்கு வாழ்க்கைப் பட்ட புண்ணியவதி அதை எழுதியிருந்தாள். சென்னையிலிருந்து விழுப்புரத்துக்கு நேரில் போகக் கையில் காசிருந்தால் அவன் போயிருப்பான். அண்ணாவைப் பார்த்திருப்பான். இல்லாததால்தான் கடிதமும் போட்டுத் தந்தியும் கொடுத்திருந்தான். 'அவசரமாக இருநூறு ரூபாய் அனுப்பினால் தான் என்னை உயிரோடு காண முடியும்' என்ற தந்திக்கு வந்த பதில் அது.

'அண்ணாவுக்குத் தெரியாமல் அண்ணி எழுதியிருக்க மாட்டாள். கோழைத்தனமாக அவள் புடவைக்குப் பின்னால் மறைந்து கொண்டு அவளை விட்டு எழுதச் சொல்லி யிருக்கிறார்...'

முன்னேற்பாடுகள் சரியாக இருக்கின்றனவா என்று சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டான் குமாரசாமி. கதவு தாழிடப் பட்டிருந்தது. யாருக்கும் எந்தக் கடிதமும் எழுதி வைக்க வேண்டுமென்று தோன்றா விட்டாலும், தனக்கு வந்த கார்டின் மேல் 'இனி நான் யாருக்கும் தொந்தரவு கொடுக்க மாட்டேன்; வீட்டுக்காரரும், ஹோட்டல்காரரும் நான் கொடுக்க வேண்டிய கடனுக்காக என்னை மன்னித்துக் கொள்ள வேண்டும்' என்று கிறுக்கிக் கையெழுத்துப் போட்டான்.

முற்பகல் பத்துப் பதினொரு மணி இருக்கும். வெளியே தெருவில் நல்ல வெய்யில்; ஆகவே, சன்னல் வழியே வெளிச்சமும் புழுக்கமும் அறைக்குள் நுழைந்திருந்தன. விட்டத்தில் தொங்கிய கயிற்றுக்குக் கீழே நாற்காலியை நகர்த்திப் போட்டான். மனத்துக்குள் எப்படிக் கச்சிதமாகக் காரியத்தை முடிப்பதென்று ஒத்திகை செய்து பார்த்துக் கொண்டான். நாற்காலியில் ஏறிக் கழுத்தில் கயிற்றை மாட்டிக் கொண்டு நாற்காலியை உதைத்துத் தள்ளிவிட்டால் போதும். மாடியில் தனி அறையாக இருப்பதால், சத்தம் கீழ் வீட்டுக்குக் கேட்காது.

சன்னல் வழியாக ஏதோ கலகலப்பான பேச்சு குபீர்ச் சிரிப்புக்களோடு சேர்ந்து கேட்டது. எரிச்சலோடு எட்டித் தெருவைப் பார்த்தான். ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது அவனுக்கு. நடு ரோட்டில் பாதையை அடைத்துக் கொண்டு ஐந்தாறு கல்லூரி மாணவர்கள் சிரிப்பும் கும்மாளப் பேச்சுமாகச் சென்று கொண்டிருந்தார்கள். நெருப்பாய்க் கொட்டிய வெய்யிலை அவர்கள் நிலவொளி என்று நினைத்திருக்க வேண்டும்.

'தம்பிகளா! கும்மாளமா, கும்மாளம்? நாலு வருஷங்களுக்கு முன்னால் நானும் உங்களைப் போலத்தான் இருந்தேன்...போங்க, போங்க! டெரிலின் சட்டை, ட்வீட் பாண்ட், மாட்னி ஷோ, ஹோட்டல் அப்ஸரஸ், பாக்கெட்டில் பத்து ரூபாய் நோட்டுக்கள்... போங்க, போங்க!'

குமாரசாமி அந்தக் கல்லூரிக்கால வாழ்க்கையை நினைத்துப் பார்த்தான். அப்பாவுக்கு அவன் செல்லப் பிள்ளை. பட்டணத்துக்கு அவனைப் படிக்க அனுப்பி வைத்து அவனைச் செல்லப் பிள்ளையாகவும் மாற்றியிருந்தார். தாயில்லாப் பிள்ளை என்பதால் வேறு தனிச் செல்லம். கேட்கும்போதெல்லாம் இருநூறு. முந்நூறு என்று அனுப்பி வைக்கத் தவறுவதில்லை. அவன் ஐ. ஏ. எஸ். படிக்க வேண்டுமென்பது அவர் ஆசை. எவ்வளவுதான் அவன் ஊர் சுற்றிக் கெட்டலைந்தபோதிலும் படிப்பில் மட்டிலும் அவன் சோடை போகவில்லை. அதனால் அவருடைய செல்லமும் அதிகரித்துக் கொண்டு வந்தது.

உலகமே தனக்காகத்தான் இருக்கிறது என்ற நினைப்பில் ஊறி வளர்ந்தவன் அவன். யாரும் அவனைத் தட்டிக் கேட்கக் கூடாது. எதையும் அவனுக்கு மறுக்கக் கூடாது. பாவம்! பி. ஏ. யில் முதல் வகுப்பில் அவன் தேறியதைக் கேட்ட மகிழ்ச்சியோடு அவன் அப்பா கட்டையைப் போட்டுவிட்டார். கடன்காரர்கள் அவர் சொத்துக்களைப் பங்கு பிரித்துக் கொண்டார்கள். பிள்ளைகளை யாருமே பங்கு போட்டுக் கொள்ள முன்வரவில்லை.

அண்ணா இருந்தார்; ஆனால் அவருக்கும் பெரிய குடும்பம். அக்காள் இருந்தாள்; அவளுக்குத் தன் புகுந்த வீட்டில் ஒட்டிக் கொண்டு வாழ்வதே பெரும் பிரச்னையாக இருந்தது. சமூகம் இருந்தது; ஆனால் அது தனக்காகத்தான் இருந்ததே தவிர, குமாரசாமிக்காக இல்லை.

வேலைக்கு அலைந்து பார்த்தார் அண்ணா. சென்னைக்கு அவனோடு வந்து பலரைச் சந்தித்தார். அரசாங்க உத்தியோகமோ, கம்பெனி உத்தியோகமோ, வேறு வேலையோ கிடைக்கவில்லை. கடைசியில் அவருக்குத் தெரிந்த ஓர் அச்சகத்தில் கணக்கெழுதும் வேலைக்குத் தள்ளிவிட்டுப் போய்ச் சேர்ந்தார்.

பெருமைக்கு இழுக்காகத் தோன்றியது குமாரசாமிக்கு. ஆனால் அந்த வேலைக்கே



விருந்தாளி: நான் உங்க வீட்டுக்கு வர்றபோதெல்லாம் இந்த நாய் வாலை ஆட்டறதைக் கண்டா, அது என்னை வாவான்னு அழைக்கிறமாதிரி இல்லே ?

சிறுவன்: எனக்கு என்னவோ அது உங்களுக்கு 'டா....டா' காட்டறமாதிரி இருக்கு!

அவன் தகுதியில்லை என்பதைக் கண்டார் முதலாளி. அவனுடைய அண்ணாவுக்காக அவனுக்கு வேலைகள் கற்றுக் கொடுத்துக் கவனித்து வரச் செய்தார்.

மயிலாப்பூரில் ஒரு சாலையை ஒட்டி இருபது ரூபாய் வாடகையில் ஒரு மாடியறை கிடைத்தது. பக்கத்து ஹோட்டலில் சாப்பாடு. செலவு செய்து பழகிய பிள்ளைக்குச் சம்பளம் போதவில்லை. அவ்வப்போது அண்ணாவும் ஏதோ அனுப்பி வந்தார்.

வேலை போய்விட்டது. பொருளாதார நெருக்கடி அச்சக முதலாளிக்கு. தொழிலாளர்கள் இல்லாமல் அவருக்கு வேலை நடக்காது; குமாரசாமி இல்லாமல் நடக்கும். மேலும் அவனுடைய செல்லப்பிள்ளைத்தனத்தால் வேறு அவருக்குத் தொல்லைகள் தலை நீட்டின. கையில் கொஞ்சம் அதிகமாகவே பணம் கொடுத்து அவனை வெளியே அனுப்பி வைத்தார்.

அந்தப் பணமும் தீர்ந்து விட்டது; அறை வாடகையும் பாக்கி; ஹோட்டலுக்கும் பாக்கி. யாரும் அவனைக் கூப்பிட்டு வேலை கொடுக்கவில்லை. அண்ணாவாவது விழுப்புரத்துக்கு வரச்சொல்லி எழுதுவார் என்று எதிர்பார்த்தான். "அங்கேயே முயற்சி செய்து வேலை தேடிக்கொள்!" என்று எழுதிவிட்டார் அவர்.

படிக்காதவர்களுக்குப் பட்டணத்தில் வேலை இருந்தது. ஆனால் படித்தவர்கள் கூட்டம் தான் அங்கே அதிகமாகி வந்தது. வேலைக்கு எங்கே போவது?

எங்கெல்லாமோ போய் அவனுந்தான் முட்டிமோதிப் பார்த்தான். வெளியே போகச் சொன்னார் வீட்டுக்காரர்; ஹோட்டல்காரர் சாப்பாடு போட முடியாது என்று மறுத்து விட்டார். அந்த ஹோட்டலிலேயே தட்டுக் கழுவும் வேலை காலியிருந்தது. நல்ல சாப்பாடு கிடைத்திருக்கும். இதென்ன கோடீசுவரர்கள் வாழும் அமெரிக்காவா படித்த பிள்ளைகள் தட்டுக் கழுவுவதற்கு?

ஆகவேதான் அந்தக் கடைசி முடிவுக்கு வந்தான் குமாரசாமி: தபாலில் பணம் வந்தால் உயிர் வாழ்வது; இல்லாவிட்டால் செத்துத் தொலைப்பது.

பணம் வரவில்லை. சூடுதான் வந்திருக்கிறது அண்ணனிடமிருந்து.

'துணிந்து'விட்டான். இல்லை, கோழையாகிவிட்டானென்றும் வைத்துக் கொள்ளுங்கள்.

நாற்காலியில் ஏறிக் கொண்டு கயிற்றைக் கழுத்தில் மாட்டப் போனவனின் பார்வை சன்னல் வழியே தெருவுக்குச் சென்றது. தெருவில் எதிர்ப் பக்கத்து மூலையில் ஒரு நடு வயதுப் பிச்சைக்காரி முடக்கிக்கொண்டு கிடந்தாள். அவளுடைய குழந்தையொன்று—ஆண் குழந்தையோ, பெண் குழந்தையோ தெரியவில்லை — அவளருகிலிருந்து மண்டி யிட்டபடியே தவழ்ந்து வந்தது.

திடுக்கிட்டுப் போய்க் கயிற்றை விட்டு விட்டுச் சன்னலருகே வந்தான். கார்களும், ஸ்கூட்டர்களும் விரைந்து பறக்கும் ரோடு அது. குழந்தையோ மண்டி போட்டபடியே நடுச் சாலையை நோக்கித் தவழ்ந்து வந்து கொண்டிருந்தது. இருபுறமும் பரபரப்போடு நோக்கினான். கார்கள் பறந்து கொண்டு தானிருந்தன.

வெறி பிடித்து விட்டது குமாரசாமிக்கு. படிகளில் தாவி இறங்கி நடுத் தெருவுக்குப் போய்க் குழந்தையை வாரி எடுத்தான். கார்கள் கிறீச்சிட்டுக் கொண்டு நின்றன. சத்தம் கேட்டுப் பிச்சைக்காரியும் எழுந்து ஓடி வந்தாள்.

"அடிப் பாவி! ஒனக்காகத்தானே நான் இன்னும் இந்த உசிரை வச்சிக்கிட்டிருக்கேன். நீ சாகப்போயிட்டியே!" என்று அவனிடமிருந்து அந்தக் குழந்தையைப் பற்றி இழுத்தாள் பிச்சைக்காரி.

குழந்தை பெண் குழந்தை; உடலெங்கும் சொறி சிரங்கு நிறைந்த பெண் குழந்தை. அதன் தாயும் அதைவிடக் கேவலமான நிலையில்தான் இருந்தாள். அவளை ஏறிட்டுப் பார்த்தான் குமாரசாமி. கல்லூரிப் படிப்பு அவனுக்குத் தராத கல்வியை, கொடுக்காத நம்பிக்கையை, அந்தப் பிச்சைக்காரி அவனுக்குக் கொடுத்துவிட்டாள்.

'ஒனக்காகத்தானே நான் இன்னும் இந்த உசிரை வச்சிக்கிட்டிருக்கேன்...'

உலகம் எனக்காக இல்லையா? உலகத்துக்காக நானு? — குமாரசாமி நம்பிக்கையோடு நடை போட்டுத் தான் சாப்பிட்டு வந்த ஹோட்டலுக்குப் போனான். முதலாளியைப் பார்த்து, "நீங்கள் தட்டுக் கழுவும் வேலை இருந்தால் அதை எனக்குக் கொடுங்கள்; சுத்தமாகவும் பொறுப்போடும் செய்கிறேன்; உங்கள் கடனையும் அதைக் கொண்டு கட்டி விடுகிறேன்" என்றான்.

அவன் போட்டு வைத்திருந்த தூக்குக் கயிறு பழையபடியே அவன் படுக்கைக் கயிறாக மாறியது!





# சிவப்பு விளக்கும் பச்சைக் கொடியும்

**திரு கே ராமகிருஷ்ணன், பொருளாளர், தென் பிராந்திய ரயில்வே, மஸ்தூர் யூனியன்:**

''இப்போது ரயில் விபத்துக்கள் அதிகமாகி வருவது குறித்து உங்கள் அபிப்பிராயம் என்ன? விபத்துக்களைத் தவிர்க்க வழியே இல்லையா?''

''பொதுமக்களுக்கு இது பற்றிய சில அடிப்படையான உண்மைகளை எடுத்துக் கூற விரும்புகிறேன். விபத்துக்கள் பொதுவாக இயந்திரங்களின் கோளாறுகளால் ஏற்படக்கூடும்; ஊழியர்களின் தவறுகளாலும் ஏற்படக் கூடும். ரயில் என்ஜின்களைப் பழுது பார்க்கத் தேவையான கருவிகள் போதிய அளவு இல்லாதது ஒரு பெரும் குறை. இப்போது உள்ள கருவிகள் பிரிட்டிஷார் காலத்தில் இருந்த அதே பழைய சாமான்கள்! என்ஜினைச் சோதிக்கத் தேவையான நேரத்தைக் குறைத்து விடுகிறார்கள்; இது தவறு. அரைகுறையாகச் சோதனை செய்யப்பட்ட என்ஜினை ஓட்டுவதன் மூலம் டிரைவரின் கவனமெல்லாம் என்ஜின் மீதே லயிக்கிறது. ரயில் பாதை சிக்னல் போன்ற வேறு எதையுமே கவனிக்க முடிவதில்லை. ரயில் ஓடிக் கொண்டிருக்கும் போது என்ஜினில் கோளாறு ஏற்பட்டால் அதனைச் சீர்படுத்துவதி லேயே டிரைவரின் முழுக் கவனமும் செல்லுவது இயற்கைதானே?

''ரயில் ஓடுவதற்கு இன்றியமையாத ஊழியர்களான டிரைவர்கள்; ஃபயர்மன் முதலியோர் வாரத்துக்கு 36 மணிக்கு மேல் உழைப்பது விரும்பத்தக்கது அல்ல. பத்து மணி நேரத்துக்கும் கூடுதலாக இவர்கள் தொடர்ந்து பணியாற்றுவது தடை செய்யப்பட வேண்டும். இரவு கண் விழிப்பதிலுள்ள சிரமம் தெரிந்ததுதானே? ஆயிரக்கணக்கான மக்களின் உயிருக்குப் பொறுப்பேற்று என்ஜினை இயக்குபவர் பத்து மணி நேரத்துக்கு மேல் பணியாற்றினால் ஆபத்துத்தான் விளையும்.

''ஸ்டேஷன் மாஸ்டர்களைப் பற்றி ஒரு வார்த்தை. முந்தின ரயில் நிலையத்திலிருந்து ஒரு ரயில் கிளம்பியது முதல் தம்முடைய ஸ்டேஷனுக்கு வந்து அது கிளம்பிச் சென்று, அடுத்த நிலையத்தை அடையும் வரை ஸ்டேஷன் மாஸ்டர் வேறு வேலைகளைக் கவனிக்கவே கூடாது. இது விதி. ஆனால் நடைமுறையில் இந்த விதியைக் கடைப்பிடிக்க முடியாமல் பல சங்கடங்கள் குறுக்கிடுகின்றன. பொதுமக்களின் நல்லெண்ணத்துக்கும் ஸ்டேஷன் மாஸ்டர் பாத்திரமாக வேண்டியிருக்கிறதே? வண்டி நிலையத்துக்கு வந்து சேரும்போதும் வந்த பிறகும் பயணிகளுக்கு டிக்கட் கொடுப்பது, வாங்குவது முதலிய வேலைகளை ஸ்டேஷன்மாஸ்டரே

லேவின் பிரிட்டிஷுள்ள 'ரிலே இன்டர் லாக்கிங்' முறை.

மேற்கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டு விடுவதுண்டு. ரயில், நிலையத்துக்கு வந்துசேரும் நேரத்துக்கு அவசரம் அவசரமாகப் பொதுமக்கள் ஓடி வந்து சாமான்களை எடை போடும்படியும், 'புக்' செய்யும்படியும் கோருகிறார்கள். நிர்தாட்சிண்யமாக ஸ்டேஷன் மாஸ்டர் மறுத்தால் பொதுமக்களுக்கு ஆத்திரம் உண்டாகிறது. ஒரு புக்கிங் கிளார்க்கு எதிர்பாராத காரணங்களால் லீவு போட்டுவிட்டாலோ கேட்கவே வேண்டாம்!

''ரயில் சந்திப்பு நிலையங்களில், ரயில் பெட்டிகளின் அடிப்பாகத்திலிருக்கும் சக்கரங்களுடன் தொடர்பு கொண்ட உறுப்புக்களைச் சரிவரச் சோதிக்க முடிவதில்லை. போதிய ஊழியர்கள் இல்லாததே காரணம். ரயில்வே லைன்களில் உளுத்துப் போன ஸ்லீப்

திரு ஆர். எஸ். அமிர்தராஜ்







## ஏப்ரல் 4ம் தேதி தொடங்கும் ரயில்வே வாரத் தினையொட்டி நால்வரைப் பேட்டி கண்டோம். அவர்கள் சிவப்பு விளக்கும் காட்டினார்கள்: பச்சைக் கொடியையும் அசைத்தார்கள்!



பர்களை நீக்கிவிட்டுப் புதிய ஸ்லீப்பர் கட்டைகளைப் பொருத்த வேண்டும். இந்த எச்சரிக்கைகளை யெல்லாம் சரிவரக் கவனித்து ஆவன செய்தால் விபத்துக்களைத் தவிர்க்கலாம்.''

''இந்தக் குறைபாடுகளை யெல்லாம் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் கவனத்துக்குக் கொண்டு வருவதுதானே?''

''அதிகாரிகளுக்கு எடுத்துச் சொல்லாமலா இருக்கிறோம்? கூடியாகக் கத்துகிறோம். சந்தர்ப்பம் வரும்போதெல்லாம் சுட்டிக் காட்டத்தான் செய்கிறோம். சிக்கனத்தின் பேரால் சில யோசனைகளை ஏற்றுக் கொள்ளுவதில்லை அதிகாரிகள்'' என்கிறார் திரு. ராமகிருஷ்ணன்.

**திரு. டி.எஸ். ஸ்ரீநிவாஸன், இன்ஷியூரன்ஸ் ஏஜண்ட், சென்னை:**

''ரயில்வே வாரம் கொண்டாடுகிறார்களே, இது பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?''

''என்ன ரயில்வே வாரமோ போங்கள்! இன்று காலையில் யால்விகி ஸ்டேஷனில் நிகழ்ந்த விபத்து பற்றிய செய்தியைப் பேப்



வலப்புறம் மேலிருந்து கீழாக: திரு டி. எஸ். சீனிவாசன், திரு பாலசுப்பிரமணியம், திரு கே. ராமகிருஷ்ணன். கீழே: விபத்துக்குப் பிறகு ரயில்வே தண்டவாளங்கள் புதிதாகச் செப்பனிடப்படுகின்றன.





பயில் படித்தது முதல் ஒரே வேதனையாக இருக்கிறது. ஐம்பது பேர்களுக்கு மேல் உயிர் துறந்து விட்டார்களாமே? இந்த லட்சணத்தில் 'வாரம்' என்ன வேண்டியிருக்கிறது?'' என்று அலுத்துக் கொண்ட ஸ்ரீநிவாசன், தொடர்ந்து கூறியது: ''முன்பெல்லாம் நமது நண்பர்களோ உறவினர்களோ வெளியூரிலிருந்து வந்தால், 'பிரயாணம் சுகமாக இருந்ததா?' என்று விசாரிப்போம். இன்றுள்ள நிலையில் 'உயிரோடு நல்லபடியாக வந்து சேர்ந்து விட்டாய்!' என்று நிம்மதிப் பெருமூச்சுடன் கடவுளை வாழ்த்த வேண்டியிருக்கிறது!

''ரயிலில் போகும்போது தூங்கவே பயமாக இருக்கிறது சார்! வண்டி ஒரு ஆற்றுப் பாலத்தைக் கடக்கும்போது ஏற்படும் 'கடபுடா' ஓசையைக் கேட்டு விழித்துக் கொண்டால் 'பகீர்' என்கிறது. ஒன்றும் ஆபத்தில்லை என்று சுதாரித்துக் கொள்ளச் சில நிமிடங்கள் பிடிக்கின்றன.

''மூன்றாம் வகுப்பில் பிரயாணம் என்றால் கேட்கவே வேண்டாம்! பிச்சைக்காரர்களின் தொல்லை குறைவதில்லை. டிக்கெட் இல்லாமல் பெஞ்சுக்கு அடியில் படுத்துக்கொண்டு பிரயாணம் செய்பவர்களின் எண்ணிக்கையும் குறைவதில்லை. சினிமாக் கொட்டகைகளில் 'ஹவுஸ் ஃபுல்' அறிவிப்புகள் செய்கிறார்களே, அப்படி ரயில் பெட்டிகளிலும் 'வண்டி நிறைந்து விட்டது' என்று போர்டு மாட்டினால் கூட நல்லது என்று தோன்றுகிறது! மணிக் கணக்கில் 'க்யூ'வில் நின்று டிக்கட் வாங்கிய பிறகு இவ்வளவு தொல்லைகளை அனுபவிப்பதற்கு அசாதாரணப் பொறுமை தேவை. பம்பாய், கல்கத்தா, போன்ற ஊர்களுக்கு நெடுந்தூரப் பிரயாணம் என்றால் விடியற்காலையிலேயே ஸ்டேஷனுக்குப் போய்விட வேண்டும், டிக்கட் வாங்க. இரவோடு இரவாக அங்கேயே படுத்திருந்துவிட்டு, 'க்யூ'வில் உள்ள 'இட'த்தை நமக்குப் பின்னால் வருகிறவர்களுக்கு இரண்டு மூன்று ரூபாய்களுக்கு விற்றுவிட்டுப் போகிற புண்ணியவான்களைப் பற்றி என்ன சொல்ல!

''இந்த லட்சணத்தில் நாம் பிரயாணம் செய்து வரும்போது, புதிய வசதிகள் ஏதும் செய்து தராமல் அடிக்கடி கட்டணத்தை உயர்த்துகிறார்களே — இதுதான் வேடிக்கை! ரயில்வே ஊழியர்கள் வேலையிலிருந்து ஓய்வு பெற்ற பிறகும் அவர்களுக்குக் குடும்பத்துடன் பிரயாணம் செய்ய 'பாஸ்' கொடுக்கிறார்களே — இந்த வசதிக்காகவேனும் அவர்கள் மேலும் பொறுப்புடன் தங்கள் கடமையைச் செய்து வந்தால் 'ரயில்வே வாரம்' கொண்டாட அவசியமே இராது. 51 வாரங்கள் நிலைமை திருப்திகரமாக இல்லாமலிருந்து ஒரு வாரம் மட்டும் ஊக்கம் காண்பித்தால் போதுமா?'' என்று கேட்கும் திரு ஸ்ரீநிவாசன், ரயில் பிரயாணங்கள் ஒரு விஷயத்தில் மட்டும் தமக்கு உதவியாக இருப்பதை நன்றியுணர்வுடன் ஒப்புக் கொள்ளுகிறார்.

''ஒரு இன்ஷ்யூரன்ஸ் ஏஜண்ட் என்ற முறையில் மூன்றாம் வகுப்பில் பிரயாணம் செய்வதை நான் வெகுவாக ரசிக்கிறேன். சக பிரயாணிகள் மனம் விட்டுப் பேசுவதும் பழகுவதும் ஓர் இனிய அனுபவம். புதிய நபர்களுடன் உரையாடும்போது எனக்குச் சில புதிய 'கேஸ்'கள் கிடைப்பதுண்டு. — அதாவது புதிய நண்பர்களை இன்ஷ்யூர் செய்யும் வாய்ப்பினைத்தான் குறிப்பிடுகிறேன்!''

**திரு என். பாலசுப்ரமண்யன், புக்கிங் கிளார்க், எழும்பூர்:**

''ரயில்கள் தாமதமாக வருகின்றன என்று பொதுமக்கள் குறை கூறுகிறார்களே — இதற்கென்ன காரணம்? யார் பொறுப்பு? இது பற்றித் தங்கள் கருத்தினை அறிய விரும்புகிறோம்'' என்று கேட்டதற்கு அவர் கூறும் விளக்கம்:

''முன்பு ஓடிய என்ஜின்களைவிட இப்போது ஓடும் என்ஜின்களுக்கு வேகம் அதிகம். பழங்காலத்து 'எம்' கிளாஸ் என்ஜின்களின் வேகம் மிகக் குறைவு. அப்படி இருந்தும் வண்டிகள் அடிக்கடி தாமதமாக வருகின்றன என்பதை மறுப்பதற்கில்லை. இப்போது ஓடும் ரயில்களின் எண்ணிக்கை முன்பிருந்ததை விடக் கூடுதலாக உள்ளது. இருந்தும் பிரயாணம் செய்வோரின் எண்ணிக்கைக்கு ஏற்ப, ஓடும் ரயில்களின் எண்ணிக்கை அதிகரிக்கவில்லை. மின்சார ரயில்கள் ஓடும் பகுதியில் இயங்கி வரும் 'ஸிக்னல்' முறை எல்லா இடங்களுக்கும் விஸ்தரிக்கப்பட்டு, தென் பிராந்திய ரயில்வே முழுவதும் ஒரே சீரான ஸிக்னல் முறை (Unified Signal System) அமுலுக்கு வந்தால்தான் ரயில்கள் குறித்த நேரத்துக்கு வருவது சாத்தியமாகும். விபத்துக்களும் குறையும்.''

''அப்படியானால் அந்த முறையை அமுலுக்குக் கொண்டு வருவதற்கென்ன?''

''சுலபமாகக் கேட்டுவிட்டீர்கள்! ரயில்வே நிர்வாகத்திடம் கேட்டால், 'செலவு என்ன கொஞ்சமா ஆகும்?' என்று கேட்பார்கள். ஊழியர்களின் நிலைமை உயர்ந்தால் இதெல்லாம் பெருமளவுக்குச் சீர்ப்பட்டு விடும். ரயில்வே என்ஜின் ஓட்டுபவர், கார்டு முதலிய பொறுப்புள்ள பணியாளர்கள் மன நிம்மதியுடன், கவலைகளின்றிப் பணியாற்றுவதற்கேற்ற சூழ்நிலை ஏற்பட வேண்டும். குறிப்பாகப் பணக் கவலை, அதன் விளைவாகக் குடும்பக் கவலை — இவைகளெல்லாம் ஊழியர்கள் திறம்பட வேலை செய்வதற்குத் தடையாக உள்ளன.

''ஓர் உதாரணம் பாருங்களேன்: ரயில் பாதையைப் பாதுகாப்பது எவ்வளவு பொறுப்பான வேலை? இந்தப் பணியில் ஈடுபட்டிருக்கும் காங்மேன் (Gangman)க்கு ரூ. 70—80தான் சம்பளம். இந்தக் காலத்தில் இந்தச் சம்பளத்தைக் கொண்டு குடும்பம் நடத்துவது எவ்வளவு சிரமம் என்பதை விளக்க வேண்டுமா?

''எழும்பூரிலுள்ள 'லோகோ ஷெட்'டில் சென்று பார்த்தால் புரியும். அரைகுறையாகப் பழுது பார்க்கப்பட்ட வண்டிகளை ஓட்ட வேண்டி நேரிடுகிறது. பாதி வழியில் ஏதாவது கோளாறு ஏற்பட்டால் ரயில் தாமதமாக வரத்தானே செய்யும்? கார்ட் பிரேக் (Guard Brake) இல்லாமல் சில சந்தர்ப்பங்களில் ரயில்களை ஓட்ட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விடுகிறது. அதிகாரிகளைத் திருப்திப்படுத்துவதற்காக விதிகளை மீறிச் செயல்பட வேண்டியிருக்



விரும்புவதைப் பெற முடியாதாகையால், பெற முடிவதை விரும்புவோமாக.

— ஸ்பானியப் பழமொழி

கிறது. 'முடியாது' என்று மறுத்துக் கூற ஊழியர்கள் அஞ்சுகின்றனர். எழுத்து மூலமாக உத்தரவு கொடுங்கள் என்று அதிகாரிகளைக் கேட்கச் சாதாரண சிப்பந்திகளுக்கு முடிகிறதா? எங்கே 'சஸ்பெண்ட்' செய்து விடுவார்களோ என்ற பயம். ராமேசுவரத்தில் நிகழ்ந்த ரயில் விபத்து நினைவிருக்கிறதா? கண்ட்ரோலரின் உத்தரவு காரணமாக நிகழ்ந்த விபத்து அது. ரயில்வே கார்டு, டிரைவர் ஆகியோர் கண்ட்ரோலரின் உத்தரவுக்குக் கீழ்ப்படிந்து பணியாற்ற வேண்டியவர்கள். அந்த அந்த ஸ்தலத்தில் உள்ள பிரத்யட்ச நிலைமை கண்ட்ரோலருக்குத் தெரியாது. இந்த நிலையில் விபத்துக்கள் நேராமல் என்ன செய்யும்?

''ஒரு விபத்து நேர்ந்தால் ஒரு நீதிபதியைக் கொண்டு விசாரணை நடத்த வேண்டும் என்று வெகு காலமாக வற்புறுத்தி வருகிறோம். ரயில்வே அதிகாரிகளே விசாரணை செய்வதில் பல குறைபாடுகள் உள்ளன.

**திரு ஆர். எஸ். அம்ருதராஜ், பிரதம பொதுஜனத் தொடர்பு அதிகாரி, தென் பிராந்திய ரயில்வே, சென்னை:**

''இந்த ஆண்டு 'பட்ஜெட்'டில் ரயில் கட்டணங்களை உயர்த்தியிருக்கிறார்களே? பிரயாணிகளுக்கு அதிகப்படியான சௌகரியங்கள் செய்து தராமல் கட்டணங்களை உயர்த்துவது சரியா?''

''1958 முதல் '65 வரை ரயில் கட்டணங்களை உயர்த்தவில்லை. இந்த ஏழு ஆண்டு காலத்தில் விலைவாசிகள் எவ்வளவோ உயர்ந்துவிட்டன. மக்களின் ஊதியமும் கணிசமாக உயர்ந்துள்ளது. 1966ம் ஆண்டிலும் ரயில் கட்டணத்தை உயர்த்தவில்லை. உலகிலுள்ள மற்ற நாடுகளில் எல்லாம் இந்திய ரயில்வேயைவிடக் கட்டணம் கூடுதலாகவே உள்ளது. அதனால்தான் ஓரளவு உயர்த்தியிருக்கிறார்கள். இந்தக் கட்டணப் பிரிவில் நானும் இரண்டு ஆண்டுகள் பணியாற்றியிருக்கிறேன். கட்டணத்தைக் கூடுதலாக்கியுள்ளது நியாயமே.''

''மற்ற நாடுகளில் கட்டணம் அதிகமாக இருக்கிறது என்பதற்காக இங்கும் கட்டணத்தை உயர்த்துவது நியாயமா? மற்ற நாடுகளில் ரயில் பிரயாணம் எவ்வளவோ வசதியாக உள்ளதே?''

''இந்த ஆண்டு ரூ. 18 கோடி அதிகச் செலவு ஏற்பட்டதாலேயே இந்தக் கட்டண உயர்வு ஏற்பட்டது. ஊழியர்களின் ரொக்கப்படி உயர்வு காரணமாக ரூ. 11 கோடி கூடுதல் செலவு. நிலக்கரி விலை ஏறிவிட்டதால் ரூ. 7 கோடி அதிகம் தேவைப்படுகிறது. இதைச் சரிக்கட்ட வேண்டித்தான் ஒரு கோடி ரூபாய் லாபம் வரும்படி 'பட்ஜட்' போட வேண்டியிருந்தது. அப்படியும் இந்தக் கட்டண உயர்வில் அதிகம் பாதிக்கப்படுபவர்கள் முதல் வகுப்பு, ஏர்-கண்டிஷன் வகுப்புப் பிரயாணிகளே. மூன்றாம் வகுப்புக் கட்டணம் அதிகம் உயரவில்லை.

''ரயில் பெட்டிகளுக்கோ, ரயில் நிலையங்களுக்கோ சேதம் ஏற்படாமல் பாதுகாப்பதில் பொதுமக்களுக்கும் பெரும் பங்கு உண்டு. இதனை மக்கள் உணர வேண்டும். சென்ற ஆண்டில் ஏழு கோடி ரூபாய் பெறுமான மின் விசிறிகள், பல்புகள் நஷ்டமாயின.. ரயில்வேக்கு ஏற்படும் நஷ்டம் சமுதாயத்துக்கு ஏற்படும் நஷ்டம். இது ஒரு சமுதாயப் பிரச்னை அல்லவா? ஒரு பெரிய நாட்டில் ஆயிரக் கணக்கான மைல்கள் தூரத்துக்குப் பரவியுள்ள ரயில்வேயின் சொத்துக்களைப் பராமரிக்க எத்தனை போலீஸ்காரர்களை நியமிப்பது? எந்த இடத்துக்குக் காவல் போடுவது?

''டிக்கட் இல்லாமல் பயணம் செய்வோரின் எண்ணிக்கை பத்துக் கோடிக்கு மேல் போனால் இதைத் தடுப்பது எப்படி? 'இது என் நாட்டு ரயில். டிக்கட் இல்லாமல் ரயில் பெட்டிக்குள் நான் அடியெடுத்து வைக்க மாட்டேன்' என்ற உணர்வும் உறுதியும் மக்களிடம் பிறந்தால் ரயில் நிர்வாகத்தில் ஏற்படும் நஷ்டத்தை வெகுவாகக் குறைக்கலாம்.

''டிக்கட் இல்லாத ஒரு பிரயாணியைக் கீழே இறக்கி விட்டால், 'ஐயோ, பாவம்! வயதான மனிதர்! விட்டுவிடுங்கள்!' என்று பிரயாணிகளே பரிந்து பேசினால் டிக்கட் பரிசோதகர் தம் கடமையைச் செய்ய முடியுமா? இத்தகைய காரணங்களால் ஏற்படும் நஷ்டங்களும்தான் இந்த ஆண்டு பட்ஜெட்டில் கட்டண உயர்வு ஏற்படக் காரணம்.''

''ஒரு வண்டி குறித்த நேரத்தில் ஓடாமல் தாமதமாகி விட்டால் அடுத்தடுத்து வரும் நிலையங்களில் அந்த வண்டியை நிறுத்திவிட்டு மற்ற வண்டிகளை முன்னே செல்ல அனுமதிக்கிறார்கள். உதாரணமாக திருவனந்தபுரம் பாஸஞ்சர் வண்டியை நிறுத்திவிட்டுக் காஞ்சிபுரம் பாசஞ்சரை முன்னே விட்டால் நெடுந்தூரப் பயணிகளுக்கு எவ்வளவோ அசௌகரியம் ஏற்படுகிறதே?''

''காஞ்சிபுரம் பாசஞ்சரில் 2000க்கு மேற்பட்டவர்கள் சென்னை நகருக்கு வருகிறார்கள். இவர்களில் பெரும்பாலோர் பத்து மணிக்கு அலுவலகம் செல்ல வேண்டியவர்கள். இந்த வண்டி தாமதமானால் அவ்வளவுபேரும் நேரத்துக்கு அலுவலகம் செல்ல முடியாமல் போய்விடும்.''

''தாமதமான வண்டியைப் பெரிய ரயில் நிலையங்களில் நிறுத்திப் போட்டால் பிரயாணிகளுக்குக் காப்பி சாப்பிடவாகிலும் வசதி உண்டு. கூடுவாஞ்சேரியிலும் பரனூரிலும் மணிக்கணக்கில் நிறுத்தினால் நெடுந்தூரம் பயணம் செய்வோர் குழந்தைகளுக்குப் பால் வாங்கிக் கொடுக்கக்கூட முடியாமல் அவதிப்படுகிறார்களே?''

''கண்ட்ரோலர் முன் யோசனையுடன் நடந்து கொண்டால் இப்படி நேராமல் தடுக்கலாம். கூடியவரை பிரயாணிகளுக்கு வசதிக் குறைவு நேராமல் பார்த்துக் கொள்ளவே பல வழிகளிலும் முயல்கிறோம்'' என்கிறார் பொதுஜனத் தொடர்பு அதிகாரி.

**பேட்டி கண்டவர்: ரா. பா.**

கோயில் அர்த்தஜாம மணியின் ஓங்காரத்தில் இரவின் நிச்சலனம் அதிர்ந்து, குலுங்கி, மீண்டும் ஸ்தம்பித்தது. கோடு போட்டாற்போல் நீள இழுத்துக் கொண்டே போகும் தெரு நாயின் ஓலம்; அந்த அமங்கல ஒலியைப் பொறுக்க மாட்டாமல், தனக்காகத்தான் கத்துகிறதோ என்ற அஞ்ஞானத்தின் உதறலில் விசிறிக் காம்பைத் தரையில் தட்டி, நாயையும் அதன் கண்களுக்கு மட்டுமே புலப்படும் காலனையும் விரட்டும் பாவனையில் திண்ணைதூங்கிகளின் வாயிலின்று உதிரும் கீழ்வாலக்க வசைகள்; வேளை கெட்ட வேளையில் கத்தும் ஒற்றைக் காக்கையின் கரைப்பு, எல்லாமே ஓய்ந்து இரவு இரண்டு விழிப்பான பகல்களின் நசுக்கலில் திணறி, சொல்லிழந்து, செயலிழந்து, நினைவிழந்து மோனத் துயிலில் மூழ்கிக் கிடந்தது.

கிழக்கு மேற்காக ஓடும் அந்தத் தெருவில் தெற்குப் பார்த்த மூன்றாவது வீட்டில் மட்டும் ரேழியில் அரிக்கேன் விளக்கு எரிகிறது. திண்ணை கொள்ளாமல் ஆண் பிள்ளைகள் படுத்திருக்கிறார்கள். கூடத்தில் பெண்டுகள் மேல் துணி போனது கூடத் தெரியாமல் அப்படி ஒரு தூக்கம். வாசற் கதவு சற்று ஒருக்களித்தவாறு திறந்திருக்கிறது. ரேழியில் ஓர் ஆஜானுபாகு கிடக்கிறார். கழுத்துவரை வெள்ளைத் துணி போர்த்தப்பட்டிருக்கிறது.

பக்கத்தில் அமர்ந்திருப்பது அன்னபூரணி. தவம் செய்கிறாள்; பிடிவாதம் பிடிக்கிறாள்; விடமாட்டேன் என்கிறாள். இது அநியாயம் என்கிறாள். வலக்கை மாங்கல்யத்தை இறுகப் பற்றியிருக்கிறது. உள்ளக் குமுறல் பீறிட்டு விழிகளின் வழியே முத்துக்களாய்க் கொட்டிச் சிதறுகின்றன. ஒரு கேவல்; ஒரு பெருமூச்சு; ஒரு கமறல். மீண்டும் விழிகள் வெண் முத்துக்களை வர்ஷிக்கின்றன. வலக்கை மாங்கல்யத்தை விடவில்லை.

கீழே அந்த ஆஜானுபாகு 'கட்டையோடு கட்டையாக'க் கிடக்கிறார். மூச்சு இழையோடிக் கொண்டிருக்கிறது. ஆனால் அவரது முகத்தோற்றம், ''இந்த உடம்புக்கு எதுவும் நேராது'' என்று ஆணவத்தோடு இருப்பது போல் காண்கிறது.

# நாம் செய்த பாவம்

"பொன்னித்துறைவன்"

ஆனால் பிராயச்சித்தம் என்னவோ எப்பொழுதோ செய்து விட்டார்கள். ''கெடு'' வைத்தாகி விட்டது. அன்னபூரணி வருவதற்கு முன்பே அந்தச் சடங்கு முடிந்து விட்டது. பிறகுதான் அவளுக்குச் சொல்லி அனுப்பினார்கள்.

வெற்றடியிலிருந்த அன்னத்திடம் வந்து ஓர் ஆள் சொன்னான்:

''பெரிய ஐயாவுக்குச் சித்த உடம்பு சுகமில்லேங்க...''

''என்னடா உடம்பு திடீர்னு?''

''அது என்னவோ தெரியாதுங்க...உங்களை ஜல்தி கூட்டியாரச் சொன்னாங்க. கணக்குப் பிள்ளை ஐயா கையோட இட்டாறச் சொன்னாரு.... சட்னு கௌம்புங்க...''

''என்னடா சொல்றே நீ?''

''வெரசா வாங்க, பேசறதுக்குப் பொழுதில்லே...''

அன்னபூரணியின் மண்டைக்குள் கூர்மையான வஸ்து ஒன்று செங்குத்தாக இறங்கி இதயத்தைக் கிழித்துக் கொண்டு வயிற்றுக்குள் பாய்ந்து, குதிகால் வழியே பூமியை ஊடுருவிற்று.

அன்னபூரணி பேசவில்லை. அதிலிருந்து இதுவரை பேசவில்லை. ஒரு கோடியிலிருந்த தன் வீட்டிலிருந்து மற்றொரு கோடியிலிருந்த கணக்குப்பிள்ளை வீட்டுக்கு இவளை ஏதோ ஓர் இக்ஷிணி பெயர்த்துக் கொண்டு போய் வைத்தது.

இதோ, மாங்கல்யத்தைப் பிடித்துக் கொண்டு, அடித்த சிலையாய் உட்கார்ந்திருக்கிறாள். பேசவில்லை. அவள் யாரிடம் பேசுவாள்? பிள்ளையா, குட்டியா?

## 2

அன்னபூரணிக்கும் ரங்கண்ணாவுக்கும் கல்யாணமான ஆறாவது மாதம். மாமியார் 'பொக்'கென்று மண்டையைப் போட்டுவிட்டாள். தாயைப் போக்கிய கையோடு ஈரம் சொட்டச் சொட்ட வாசற்படியில் வந்து நின்ற ரங்கண்ணா, கால்களைக்கூடக் கழுவாமல், ''ஏய்! பிராரப்தமே!'' என்று இரைந்தான்.

நடுநடுங்கிப் போய் அன்னபூரணி கையில் சொம்புத் தண்ணீருடன் வாசலுக்கு ஓடோடி வந்தாள்.

''என்னை விட்டு ஒழிஞ்சு போ! எங்கேயாவது தொலைஞ்சு போ! என் மூஞ்சியிலே முழிக்காதே, ஓடு!''

கர்ஜித்தார் ரங்கண்ணா. பிரமை தட்டி நின்றாள் அன்னபூரணி.

''சனியனே! ஏன் நிக்கறே? ஒழி! நீ ஒழிஞ்சாத்தான் நான் இந்த வீட்டிலே காலடி வைப்பேன். என் கண் முன்னாலே நிக்காதே, போ! இப்பவே போ! இந்த

நிமிஷமே போ! இருட்டோட இருட்டா மறைஞ்சு போ!''

ரங்கண்ணாவின் உடம்பு உதறிக் கொண்டிருந்தது. அன்னபூரணிக்கு எதுவுமே விளங்கவில்லை.

''மாப்ளே! என்ன மாப்ளே இது?''

யாரோ தாயாதி சமரசம் செய்யப் பார்க்கிறார்.

''ராக்ஷஸி! நீ என் வீட்டிலே காலடி வச்ச புண்ணியம், எங்கம்மாவை விழுங்கிட்டே! அடுத்தபடியா என்னையும் விழுங்கறதுக்கு முன்னாடி இங்கேருந்து போயிடு! போய் விடடி, தொடுகாலி! தொலைஞ்சுபோய்விடு!''

ரங்கண்ணாவின் முகம் பயங்கரமாக இருந்தது. திடீரென்று திண்ணையில் உட்கார்ந்து, தூணைத் தழுவியவாறு ''அம்மா, அம்மா!'' என்று தேம்பித் தேம்பி அழுதார். யார் யாரோ அருகில் வந்து சமாதானப்படுத்தப் பார்த்தார்கள். எல்லோரையும்ஒரு தள்ளுத் தள்ளிவிட்டு, மீண்டும் பயங்கரமாக உச்ச ஸ்தாயியில், ''தொலைஞ்சு போடி! ஒழிஞ்சு போ! இந்த ஜன்மத்திலே இனிமே நீயும் நானும் சேர்ந்து இருக்கப் போறதில்லே. இது சத்தியம்! நீ போறயா, இல்லே நான் போகட்டுமா?'' என்றார்.

புரோகிதர் பயந்து கொண்டே ரங்கண்ணாவை நெருங்கினார்.

''ரங்கண்ணா! இது நியாயமில்லே. அவளை உத்தேசித்து இல்லாவிட்டாலும் நீ பண்ண வேண்டிய கர்மாக்களை உத்தேசித்தாவது



அன்னம் இங்கே இருந்தாகணும். அவள் இல்லாம எந்த மந்திரமும் எடுபடாது. நீ சின்னப் பையன். பெரியவா சொல்றதைக் கொஞ்சம் கேளு. உன் கோபத்தையெல்லாம் பத்து நாட்கள் கழிச்சு வச்சுக்கோ. பெரிய காரியம் முதல்லே நடக்கட்டும். என்ன ரங்கு! காதிலே விழறதா?''

கொப்பளிக்கும் ஆர்வத்தோடு ரங்கண்ணு கண்களை உருட்டினார். ''ஓய்! இந்த மூதேவி இல்லாம எந்தக் காரியம் நடக்காம இருந்துடறது பார்த்துடறேன்! அவளை முதல்லே புடிச்சு வெளியே தள்ளும். சத்யமாச் சொல்றேனய்யா! அவளுக்கும் எனக்கும் இனி ஸ்நானப் பிராப்திகூடக் கிடையாது.''

திண்ணையில் மீண்டும் போய் அமர்ந்து விட்டார். கிட்டத்தட்ட இரண்டு மணி நேரம் அப்படியே இருந்தார்.

இரவு பத்து மணிக்கு, கையில் ஒரு சிறிய மூட்டையுடன் அன்னம் வெளியே வந்து கணவனை நமஸ்கரித்தாள். பிறகு எழுந்து தலை நிமிராமல் ஒரு கணம் நின்றாள். கேவலுக்கிடையில் வார்த்தைகள் சிதைந்து, சிதைந்து வெளிப்பட்டன:

''எனக்கு ஒண்ணுமே புரியலையே!''

ரங்கண்ணு பேசவில்லை.

''எனக்கு மன்னிப்பே கிடையாதா?''

மௌனம்.

''இது தெய்வத்துக்கே அடுக்குமா?''

மௌனம்.

''ஐயோ! நான் எங்கேன்னு போவேன்?''

'ஓ'வென்று அலறினாள் அன்னம்.

தெருவெல்லாம் அவரவர்கள் வீட்டுத் திண்ணைகளிலிருந்தே எல்லோரும் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

சரேலென்று எழுந்து உள்ளே போய்க் கதவைச் சாத்திவிட்டார் ரங்கண்ணு.

அன்னம் கைகளில் மூட்டையும், கண்களில் வெள்ளமும், இதயத்தில் சூன்யமுமாகத் தெருவில் இறங்கிவிட்டாள்.

## 3

''அம்பிளைக் காமாட்சி'' கமலத்தம்மாள் தெருவின் கீழ்க் கோடியிலிருந்த ஒரு வீட்டின் ஏகசக்ராதிபதி. எப்பொழுதும் அசுர தைரியம். அவள் வீட்டில் கன்னம் வைத்துத் திருட முயன்ற மூன்று பேர்களை ஒண்டியாகச் சமாளித்து, பெரிய தாம்புக் கயிற்றால் பிணைத்து ஓர் அறையில் பூட்டி வைத்து, விடிந்தவுடன் பத்துப் பேர்கள் முன்னிலையில் அவர்களை அடித்து நொறுக்கியதாக அவளைப் பற்றி ஒரு கதை உண்டு. அப்பேர்ப்பட்ட கமலத்தம்மாளிடம் தெய்வம் அன்னத்தைக் கொண்டுபோய் விட்டது.

''சின்னஞ் சிறிசு! உங்க அம்மா அப்பா உசுரோட இருந்தால் இந்தக் கன்றாவியைப் பார்த்துண்டு சும்மா இருப்பாளா? இந்த அநியாயத்தைக் கேக்கறதுக்கு இந்தக் கிராமத்திலே யாருக்கடி நாதி இருக்கு? அவனவனுக்கு அவன் புள்ளை, அவன் குட்டி, அவன் நெல்லு, அவன் மாடுன்னு அதுக்கு மேல் புத்தி எங்கேடி போறது? அன்னம்! இது உருப்படப் போற கிராமம் இல்லேடி! குத்து வெளக்காட்டமா ஒரு பெண்ணை, நட்ட நடு நிசியிலே ஒருத்தன் துரத்தி அடிக்கிறான். அதை எல்லோரும் வேடிக்கை பார்த்துண்டு தெருவிலே நிக்கறதுகள். தூ.... பூமி பொளந்து இதுகளை வாரிச் சுருட்டிண்டு போகாதோ? போகட்டும் போ! நீ வா. என்னோடு வந்துடு. வாடியம்மா, என் கண்ணே வாடி!''

ஒரே ஊரில், ஒரே தெருவில் — ஆனால் வெவ்வேறு வீடுகளில் — இரு கோஷ்டிகளாய், கிழக்கும் மேற்குமாய், அன்னத்தின் தாலிக்கும் ரங்கண்ணுவின் உயிருக்கும் மட்டுமே பிணைக்கப்பட்ட உறவாய், கமலத்தம்மாளின் ஆதரவில், அன்னத்தின் தாம்பத்தியம் தொடங்கிற்று.

ரங்கண்ணுவோ, தாயாதியான அவ்வூர்க் கணக்குப்பிள்ளையிடம் வருஷத்துக்கு 'இத்தனை' தருகிறேன் என்று கூறி, அவன் வீட்டிலேயே 'டேரா' போட்டுவிட்டார்.

இருந்த சுவடே தெரியாமல், அன்னம் வாழ்ந்து வந்தாள். வீட்டு ரேழியைத் தாண்டி அவள் கால் வைக்கவில்லை. தினமும் இருட்டுத் தெளியு முன்னரே கிணற்றடிக்குப் போய் இரண்டு வாளி தண்ணீரைக் கொட்டிக்கொண்டு ஈரம் சொட்டச் சொட்ட உள்ளே வந்துவிடுவாள்.

குளித்துவிட்டுச் சுவாமி படத்துக்கு முன் கண்களை மூடித் தலை குனிந்து நிற்கும்போது இமைகளுக்குள் ஊறும் கருமையில் ரங்கண்ணுவின் உருவம் — வாசலைச் சுட்டும் விரலும், ''போ வெளியே'' என்ற கர்ஜனையுமாகப் பளிச்சிடும். அன்னம் இரண்டு சொட்டுக் கண்ணீர் வடித்துவிட்டால் தியானம் முடிந்துவிட்டதென்று பொருள்!

சமையல் ஆன கையோடு வாசல் ரேழியில் வந்து உட்காருவாள் அன்னம். தயிர்க்காரி, கறிகாய்க்காரி என்று ஒவ்வொருவராக வந்து, பேரம் பேசி, கொட்டி அளந்து எல்லாம் முடியும்போது, மணி பத்தாகிவிடும். பிறகுதான் முக்கியமான கட்டம்.

எதிர்ச்சாரியில் நாலைந்து வீடுகள் தள்ளி மேற்காக ஒரு வீட்டுத் திண்ணையில் சாப்பாட்டை முடித்துக் கொண்டு கையில் வெற்றிலைச் செல்லத்துடன் ரங்கண்ணு வந்து உட்காருவார். அரை மணியோ அல்லது ஒரு மணியோ, கால் மேல் கால் போட்டு உட்கார்ந்து, மிக ரஸனையோடு நாலைந்து தடவை வெற்றிலையைக் குதப்பித் துப்புவார். பிறகு, ஒரு கனமான புஸ்தகத்தைப் பிரித்துத் தமக்குத் தாமே ரஸித்துப் படிப்பார். அவ்வப்போது விசிறிக் கட்டையால் 'வேகு வேகு'ன்னு விசிறிக்கொண்டு காம்பால் முதுகையும் சொறிந்து கொள்வார். பிறகு மேல் துண்டை உதறிப் போட்டுக் கொண்டு, அந்தக் கனமான புத்தகத்தையே தலைக்கு அணையாக வைத்துக் கொண்டு படுத்தாரானால், விழித்துக்கொள்ள மணி மூன்றாகும். அன்னபூரணி, தன் வீட்டு ரேழியில் மறைந்து நின்றவாறே அவர் தூங்கும்வரையில் இருந்து பார்த்துவிட்டுத்தான் சாப்பிடப் போவாள். சில நாட்களில் ரங்கண்ணு பகல் பன்னிரண்டு மணிக்குத்தான் எதிர்த் திண்ணைக்கு வருவார். அன்னம் துடித்துப் போய்விடுவாள். உடம்புக்கு என்னவோ, ஏதோ என்று பதறுவாள். கமலத்தம்மாள்

உற்சாகமூட்டும் டி: எஸ்.ஆர்

**பானங்கள்**




**டி. எஸ். ஆர். & கோ.** கும்பகோணம் & சென்னை

Criterion-TSR-1529T

அதை ரஸித்து நையாண்டி செய்வாள். "போடி பைத்தியக்காரி! அவன் நன்னா கார்த்தாலே போய் ராயர் ஹோட்டல்லே மூக்கிட்டு வந்திருப்பான். உன் மாதிரி கொலைப் பட்டினியாயிருக்கணும்னு அவனுக்கு என்னடி தலையெழுத்து? பளபளன்னு உடம்பை அவன் என்னமா வச்சுண்டிருக்கான் பாரு!"

இரவு வேளைகளில் கூடத்தில் படுத்துக் கொண்டு, வெட்டவெளியை நோக்கியவாறே அன்னமும் கமலத்தம்மாளும் பேசுவார்கள். பேச்சு, சுற்றிச் சுற்றி ரங்கண்ணாவைப் பற்றித்தான் இருக்கும். ஒரு நாள் கமலத்தம்மாள் சொன்னாள் :

"அன்னம், இதுக்கு ஒரு வழி பண்ணியாகணும்டி. காலம் இப்படியே போயிண்டிருந்தால் என்ன அர்த்தம்? இந்தக் கிராமத்து மனுஷாளை நம்பினா நடக்காது. கோவில் கும்பாபிஷேகத்துக்காக அலையற பெரிய மனுஷாளுக்கெல்லாம், இங்கே ஒரு பெண் தெய்வம் கண்ணீர் வடிச்சுண்டிருக்கறது கண்ணிலேபடாது. அவாளெல்லாம் எப்படி வேணும்னாலும் ஒழியட்டும்டி! நான் எதுக்காக இருக்கேன்? நான் போறேண்டி. உன் கணவனை நன்னா மடக்கிக் கேட்கிறேன். 'ஓய்! உமக்குச் சுரணை இருக்கா'ன்னு கேக்கறேன். வக்கு இருந்தா பதில் சொல்லட்டுமே? கெழக்கேயும் மேற்கேயும், கோயில், கொளம்னு அலையத் தெரியறதோல்லியோ? பெண்டாட்டியை வச்சு சம்ரக்ஷிக்கறதை விட அது எப்படிங்காணும் முக்கியம்னு கேக்கறேன். எனக்கு என்னடி? மேலே ஆகாசம், கீழே பூமி! என்னடி சொல்றே அன்னம்?"

அன்னம் பேசவில்லை. முற்றத்துக்கு மேலே நீல வானையே வெறித்துக் கொண்டிருந்தாள்.

"சொல்லேண்டி?"

"வேண்டாம் மாமி!"

"ஏனா? மயிலே மயிலேன்னா இறகு போடற ஜாதியில்லேடி உன்னோட ஆம்படையான். நன்னாக் கோவில் பிராகாரத்துலே வச்சு, கழுத்துலே துண்டைப் போட்டு உரத்துக்கேக்கணும். 'வெக்கங் கெட்ட ஜன்மி! எங்க அன்னத்துக்கு ஒரு வழி சொல்லிட்டு அந்தண்டை போடா'ன்னு சுருக்குனு தைக்கற மாதிரி கேட்கணும்டி! புரியறதா?"

அன்னம் சிறிது தயங்கிவிட்டுப் பிறகு சொன்னாள்:

"மாமி! அவர் மேலே கோவப்பட்டு என்ன புண்யம்? ஏதோ பிசாசு அவர் மனசுக்குள்ளே புகுந்துண்டு ஆட்டி வைக்கிறது. நீங்க அடிக்கடி சொல்ற மாதிரி, காலம் இப்படியேவா போயிடப் போறது?"

கமலத்தம்மாள் நெகிழ்ந்து விட்டாள். 'இந்தப் பொண்ணு எவ்வளவு அடக்கமாகவும், நம்பிக்கையாகவும் இருக்கு! அந்த மூர்க்கனுக்கு இவளுடைய அருமையை எப்படித் தெரிவிக்கிறது?' என்று எண்ணுகையில் அவள் கண்கள் பனித்தன.

"உன் நிலையைப் பார்த்து என் வயிறு கொதிக்கிறதடி அன்னம்! அதுதான் படபடன்னு பேசிட்டேன். உன் நம்பிக்கைதான் வீண் போகாம நிறைவேற வேண்டும்! காலம் இப்படியேவா போயிடப்போறது?"

அன்னத்தின் கண்கள் குளம் கட்டின. கமலத்தம்மாளின் கைகளை இறுகப் பற்றிக் கொண்டு "மாமி!" என்று குலுங்கிக் குலுங்கி அழுதாள்.

## 4

திடீரென்று ஒரு நாள் அன்னத்துக்கு முப்பத்தைந்து வயதாகி விட்டது.

தைரியத்தையெல்லாம் வரவழைத்துக் கொண்டு அன்னம் கமலத்தம்மாளிடம் கேட்டாள்:

"மாமி! நான் இனிமே கொளத்துலேயே போய் ஸ்நானம் பண்ணினா என்ன?"

"போட்டியே ஒரு போடு!" என்று இடி இடியென்று சிரித்தாள் கமலத்தம்மாள். "ஏண்டி பொண்ணே! உனக்கு இப்படி ஒரு ஆசை இருக்குன்னு இத்தனை நாளா ஏண்டி எங்கிட்ட சொல்லலே! பேசாம என் பின்னாடியே குளிக்க வரலாமோல்லியோ?"

"எனக்கு ஆசையிருந்துதுன்னா ஆயிடுத்தா அவர் துர்வாசராட்டமா மூஞ்சியைத் தூக்கிண்டார்னா?"

"யாரெடிச் சொல்றே நீ?" என்று ஒன்றுமே புரியாதவள் போல் கமலத்தம்மாள் புருவத்தை உயர்த்தினாள்.

"அவர்தான் மாமி!"

"அவரா?" கமலத்தம்மாள் கிண்டினாள்.

அன்னம் தரையையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

"உன் ஆம்படையானா?"

அன்னத்துக்குக் கன்னமும், மூக்கும் காதோரமும் ஜிவு ஜிவுத்தன. முந்தானையைத் திருகியவாறே முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டாள். கமலத்தம்மாள் அக்காட்சியை மிகவும் ரஸித்தாள்.

"பலே குட்டி! அவராமே, அவர்! வெவஸ்தை கெட்ட மனுஷனிட்ட என்னடி பயம்?"

அன்னம் பேசவில்லை.



''இதோ பாருடி, அன்னபூரணி! அவன் உன்னைப் பத்திக் கவலைப்படலே. நீயும் அவனைப் பத்திக் கவலைப்படாதே! குஷாலா உன் இஷ்டப்படி, கோவிலுக்கோ கொளத்துக்கோ நீ போகிறதை யாராலும் தடுக்க முடியாது. அப்படி ரோஷம் பொத்துண்டு வந்ததுன்னா, ஓடி வந்து கையைப் பிடிச்சு நிறுத்தட்டுமே? அந்தச் சாக்கிலாவது உன்கிட்ட ரெண்டு வார்த்தை பேசறானு பார்க்கலாம் ! ஏண்டி ?''

அன்னத்துக்கு உடல் சிலிர்த்தது.

''ஓடி வந்து கையைப் பிடித்து நிறுத்தட்டுமே ?''

'அவர் மீண்டும் என் கைகளைப் பற்றும் பாக்கியம் எனக்கு உண்டா ? என்னோடு இரண்டு வார்த்தை பேசும் மகத்தான சந்தர்ப்பம் என் வாழ்வில் வரப் போகிறதா ?' என்று அவள் எண்ணும்போது கண்களிலிருந்து கரகரவென்று நீர் வழிந்தது.

## 5

ஒரு நாள் கோயில் தென்னண்டைப் பிராகாரத்தில் தக்ஷிணாமூர்த்தி ஸந்நிதிக்கருகில் உட்கார்ந்திருந்த ரங்கண்ணா, எங்கிருந்தோ கொண்டு வந்திருந்த ஆலம் விழுதுகளைப் பேனாக் கத்தியால் நறுவிசாக ஒரே அளவுக்கு நறுக்கிக் கொண்டிருந்தார்.

பிராகாரத்தின் கோடியில் நிழல் தட்டிற்று. அன்னம் வந்து கொண்டிருந்தாள். வருவது யார் என்று தெரிந்தவுடன் ஆலம் விழுதுகளை அப்படியே வாரிக் குப்பலாக மேல் துண்டில் போட்டுக் கொண்டு இடத்தைக் காலி செய்ய ஆரம்பித்தார். அன்னத்தின் நடை விரைவாயிற்று. அருகில் வந்து விட்டாள்.

ரங்கண்ணாவைத் திடீரென்று ஏதோ ஓர் உணர்ச்சி பற்றிக் கொண்டது. அந்தி வேளையும், அகண்டு விரிந்து ஆள் நடமாட்டம் இல்லாத கோயில் பிராகாரமும், ஞான குருவின் சந்நிதானமும் சேர்ந்து, ''நான் செய்வது நியாயந்தானா?'' என்ற எண்ணம் தோன்றிற்றோ என்னவோ ! ஓர் அடி எடுத்து வைத்துவிட்டு அப்படியே, அன்னத்துக்கு முதுகைக் காட்டியவாறே சிலையாகிவிட்டார் ரங்கண்ணா.

அவரால் நகர முடியவில்லை. வஜ்ரம் போட்டாற்போல் பாதங்கள் பூமியோடு அறைந்து கிடந்தன. உச்சி மண்டையிலிருந்து இதயத்தின் வழியே, பாதம் வரையில் ஒரே நேர்க் கோடு போல் ஏதோ ஒரு நரம்பு கண்டி இழுத்துக் கொண்டிருந்தது. அந்தக் கண்டலில் இதயம் சற்றே புரண்டு கொடுத்தது. அந்தப் புரட்டலினால் விடுவிக்கப்பட்டு, பாசி பிடித்து உருமாறிப் போயிருந்த மனைவியெனும் உறவு இதயச் சுவர்களை நெருடும்போது —

''உங்களுக்குப் பிடிக்குமென்னு பண்ணிண்டு வந்தேன்..... உப்புமா கொழுக்கட்டை !''

''.................''

''என் கையால் பண்ணினது உங்க நெஞ்சுலே இறங்கி, வயத்துலே சேர்ந்ததுன்னா, அதைவிட எனக்கு வேறே என்ன வேணும்? வேளாவேளைக்குச் சாப்பிடறேளோ இல்லியோ? உங்க அநாதரவான நிலைமையை நினைச்சா எனக்கு நெஞ்சைக் குமைக்கிறது. அனாதைமாதிரி யார் வீட்டிலேயோ பிக்ஷை! என்னோட பேச வேண்டாம்; ஏன்னு கூப்பிட வேண்டாம்; தொட வேண்டாம்... ஒரே வீட்டிலே இருந்துண்டு, கூழோ கஞ்சியோ நான் சமைக்கிறதை உங்களுக்குப் பரிமாறக் கூடிய பாக்கியத்தை எனக்குக் கொடுக்கக் கூடாதா ? நீங்க என் தெய்வம்! தெய்வத்துக்கு நைவேத்தியம் கொண்டு வருப்ல பொத்திப் பொத்திக் கொண்டு வந்திருக்கிறேன். நீங்க பெரிய மனசு பண்ணி ஏத்துக்குங்கோ. சாப்பிட்ட மிச்சத்தை என்கிட்டே கொடுங்கோ. இனிப்படி செய்ய வேண்டிய இந்தக் காரியத்தை இன்று ஒரு நாளாவது செய்யும்படியாக் கிருபை பண்ணுங்கோ.''

அன்னத்தின் முறையீட்டைக் கேட்டுக் கொண்டு வந்த ரங்கண்ணா ஒரு கணம் — ஒரே ஒரு கணம் — உருகித்தான் போனார். ஆனால் அடுத்தகணமே மனத்தைக் கல்லாக்கிக் கொண்டார். புரண்ட இதயம் மீண்டும் யதா ஸ்தானத்தில் அமர்ந்தது. வஜ்ரம் போட்டு ஒட்டிய பாதங்கள் நெகிழ்ந்து பிரிந்தன. 'தொடு காலி' என்று அழுத்தமும் பாவமும் நிறைந்து வழிய வாய் உறுமிற்று. அடுத்த கணத்தில் அவர் அங்கு இல்லை.

அன்னம், தக்ஷிணாமூர்த்தியின் பாதங்களில் தன் தலையைப் பதித்தவாறே, குலுங்கிக் குலுங்கி அழுதாள்.

எங்கிருந்தோ வந்த ஒரு பூனை உப்புமாக் கொழுக்கட்டையை ருசித்துக் கொண்டிருந்தது.

## 6

தாலிச் சரட்டைப் பற்றியவாறே, தரையில் எமனுடன் போராடும் ரங்கண்ணாவின் உயிரைக் காப்பாற்றக் கணக்குப்பிள்ளை வீட்டு ரேழியில் தவம் கிடந்த அன்னத்தின் மனத்திரையில் இன்னொரு சம்பவம் நிழல் படம் போல் விரிந்தது.

தெருவில் நடந்த உறவினர் வீட்டுக் கல்யாணம் ஒன்றில் அன்னமும் ரங்கண்ணாவும் ஒருவர் வந்திருப்பதை மற்றவர் அறியாமலேயே கலந்து கொண்டார்கள். அன்னம், ஆண் பிள்ளைகள் மத்தியில் வருவதற்கே கூசி, அடுக்களையைத் தாண்டிய இரண்டாங்கட்டிலேயே வளைய வந்து கொண்டிருந்தாள்.

யாரோ ஒரு பெண், பட்டுப் புடவை சரசரக்க, மல்லிகை மணத்தை அள்ளி வீசிக் கொண்டு அன்னத்திடம் ஓடோடியும் வந்து ''மாமி, உங்களை எங்கேயெல்லாம் தேடறது? எல்லாரும் உங்களுக்காகக் காத்துண்டிருக்கா.... வாங்கோ சாப்பிட!'' என்றாள்.

அன்னம் உடம்பைக் குறுக்கிக் கொண்டு, ''ஐயய்யோ ! அங்கெல்லாம் நான் வர மாட்டேண்டி அம்மா ! ஒரே புருஷப் பட்டாளமா இருக்கு!'' என்றாள்.

''ரொம்ப நன்னா இருக்கு மாமி! எல்லாரும் நம்ம உறவுக்காராதான். நன்னாக் கும்மாளம் அடிச்சுண்டு சாப்பிடலாம். கூடத்திலே உங்காத்து மாமாவும் இருக்கார்.

# 'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோஃபைன்ட் செய்யப்படுகிறது

## *அதிவேகமாக* வலியை வெளியே இழுப்பதற்காக

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' செயல்புரியும் விதம்







ஒரு மாத்திரையில் உள்ள அணுக்கூறு எவ்வளவுக் கெவ்வளவு பெரியதாக உள்ளதோ அது உங்கள் உடலில் கலப்பதற்கு அவ்வளவுக் கவ்வளவு நேரமாகிறது. நீங்கள் வலியிலிருந்து நிவாரணம் பெறவும் அவ்வளவுக்கவ்வளவு காக்க வேண்டியிருக்கிறது.

மைக்ரோஃபைன்ட் ஆக இருப்பதனுல் புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' வின் ஒவ்வொரு மாத்திரையிலும் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக்கூறுகள் அடங்கியுள்ளன —எனவே, அது மேலும் துரிதமாக இரண்டறக் கலந்து விரைவில் நிவாரணம் அளிக்கிறது.

**கீழ்க் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:** நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளு • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டைஅழற்சி • பல்வலி

**புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.**

**சாப்பிடும் அளவு:**

**வயது வந்தவர்கள்:** இரண்டு மாத்திரைகள். தேவையானல் மீண்டும் சாப்பிடவும்.

**குழந்தைகள்:** ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர்சொல்படி

A-G-35-48TM






புதிய

**மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'**

அதி வேகமாக வலியை வெளியே இழுத்து விடுகிறது.

நிகோலஸ் (N) தயாரிப்பு


களவோ?

அவர்தான் உங்களைக் கையோடே அழைச்சிண்டு வரச் சொன்னார்!''

மனமறிந்து ஒரு பெரிய பொய்யைச் சொன்னாள் அந்தப் பெண் !

அன்னத்துக்குத் தட்டாமாலை சுற்ற ஆரம்பித்தது. இந்தப் பெண் என்ன சொல்கிறாள் ? ''உங்காத்து மாமா!'' என்று எவ்வளவு அழுத்தமாகச் சொல்கிறாள்.

அன்னம் குழம்பிக் கொண்டிருந்த போது, அப்பெண், இதழ்க்கடையில் குறுநகை மின்ன, அவள் கைகள் இரண்டையும் பற்றிக் கூடத்துப் பக்கம் இழுத்தாள்.

''தடிச்சி ! நான் இருக்காதுடி! வேறே யாரையாவது அழைச்சிண்டு வரச் சொல்லிவிருப்பா..... அடியே! என் கையை விடுடி!''

''உங்காத்து மாமாவேதான்!'' என்று 'வே'யில் நல்ல அழுத்தத்தைக் கொடுத்துக் கண்களைச் சிமிட்டினாள் அவள்.

அன்னத்துக்கு ஒரு நிமிஷம் ஒன்றுமே பிடிபடவில்லை. ''எங்காத்து மாமாவா?'' என்று மீண்டும் கேட்ட அவள் பாகாய் உருகினாள்.

சாப்பாட்டுக் கூடம் வந்து விட்டது. தலைக்குத் தலை என்னவோ சொல்லுகிறார்கள்.

''அதோ பாருடி ! தயாரா மாமாவுக்குப் பக்கத்துலே மணை போட்டு வைச்சிருக்குப் பாரு! பெண்ணை மெள்ள உட்கார்த்தி வை.''

''ஏய் ! யார்ரா அங்கே ! இரண்டு ரோஜா மாலையை எடுத்துண்டு வாடா!''

''கல்யாணி ! ஆரத்தித் தாம்பாளம் தயாரா இருக்கா ?''

''எலே, வாண்டுப் பயலே! அது கல்யாணப் பொண்ணு உட்கார்ற இடம்டா. நீ மூந்திக்காதே, ராஸ்கோல் .....''

''ரங்கண்ணா! நன்னா நிமிந்து கம்பீரமா உட்கார்ந்துக்குங்கோ.... தலையைக் குனிஞ்சிண்டு என்ன வெட்கம் வேண்டியிருக்கு !''

ஒரே கும்மாளம். கைதட்டல் கேலிப் பேச்சு. கூடம் இரண்டு பட்டுக் கொண்டிருந்தது.

அன்னம் கண்களைத் திறக்கவில்லை. இரத்தமெல்லாம் இன்பத் திவலைகளாக நெஞ்சத்தில் மோதுவது போன்ற ஒரு கிளுகிளுப்பு.

இரண்டு மூன்று பேராகச் சேர்ந்து அவளை மணையில் உட்கார வைத்து விட்டார்கள்.

ஓ! அன்னத்துக்குத்தான் என்ன போதை! என்ன உணர்ச்சிப் பெருக்கு! என்ன படபடப்பு !

தன் மடியில் புரள்வது 'அவரது'உத்தரீயத்தின் தலைப்பா ?

உடலெல்லாம் ஜில் !

சை ! என்ன கூச்சல் போடுகிறார்கள் ! இப்படி ஒரு காட்டுக் கத்தலா ?

விருட்டென்று எதையோ உதறினாற் போல் சத்தம் கேட்டது.

அன்னம் கண் விழித்தாள்.

பூமியதிர, ரங்கண்ணா அந்த அறையிலிருந்து சீறி வெளியேறிக் கொண்டிருந்தார்.

''அயோக்கியக் கழுதைகளா !'' என்ற அவரது உறுமல் கூடத்துச் சுவர்களில் மோதித் தெறித்தது.

''ரங்கண்ணா! நீங்க இப்படிப் பண்ணறது நம்ப குடும்பத்துக்கே கேவலம்.... சம்பந்திகளெல்லாம் என்ன நெனைச்சிப்பா ?''



பணத்திடம் நம்பிக்கை வைக்காதே ; நம்பிக்கையான இடத்தில் பணத்தைப் போட்டு வை.

— பலுக்ஸ்தான் பழமொழி

யாரோ அவர் பின்னாலேயே ஓடி வழிமறிக்கப் பார்க்கிறார்கள்.

''சீ, நாயே ! அந்தண்டை போ !'' என்று உதறிவிட்டு ரங்கண்ணா போயே விட்டார்!

## 7

கணத் துளிகளின் சதிராட்டத்தில் பிறக்கும் காலக் குமிழிகள் நவரசக் கலவையை ஆயிரம் வண்ணங்களில் கக்கிவிட்டு, படீரென்று வெடித்துச் சாகின்றன. அறுதியான கால வெள்ளத்தை நேற்று — இன்று — நாளை என்று கூறு போட்டு, சென்றதை நினைத்து அழுகிறோம் ; நடப்பதைப் பார்த்து மலைக்கிறோம்; வருவதை எண்ணி ஏங்குகிறோம். ஆனால் திடீரென்று ஒரு தருணம்—அல்லது கணத்தின் சத கூறுகளில் ஒரு துளி — முக்காலத்துக்கும் பொதுவான உண்மையை, ''இதோ, இதுதான்! பிடித்துக் கொள் !'' என்று விசிறி விட்டுப் போகும்போது, அதைக் கைநழுவ விட்டு இளித்தவாயர்களாய் நிற்கிறோம் !

ஆனால் அன்னபூரணி ஏமாறவில்லை. எப்பொழுதும் தயார் நிலையிலேயே இருந்தாள். உண்மையை விசிறப் போகும் அந்தத் தெய்வத் தருணத்துக்காகக் கையேந்திக் காத்து நின்றாள்.

யார் செய்த புண்ணியமோ, வெள்ளத்தில் விழுந்து மூழ்கி விடாமல், கரையிலிருந்தவாறே அதன் வேகத்தையும், சுழிப்பையும் சீறலையும் அநுபவிக்கக்கூடிய மனப் பக்குவம் அன்னத்துக்கு இருந்தது.

இதோ விடியப் போகிறது. அரிக்கேன் விளக்கு அணைந்து விட்டிருக்கிறது. வைகறையின் வெளுப்பு ரேழியில் படிய ஆரம்பித்து விட்டது.

திடீரென்று ஓர் அதிசயம் நிகழுகிறது.

நெற்றியில் பதிந்திருந்த அன்னபூரணியின் கையை ரங்கண்ணா பிடித்துக் கொள்கிறார்.

அன்னம் திகைக்கிறாள்; தடுமாறுகிறாள் ; இது நிஜமா என்று தவிக்கிறாள். எல்லோரையும் கூவி அழைத்து இந்த அதிசயத்தைக் காட்ட வேண்டும் என்று துடிக்கிறாள். உடல் துவளுகிறது. நெஞ்சம் படபடக்கிறது. கைகள் நடுங்குகின்றன.

''நீயா ?''

பலஹீனத்தால் துடிக்கும் உதடுகளிலிருந்து சன்னக் குரலில் ஒரு வார்த்தை உதிர்ந்து விட்டது.

ரங்கண்ணா பேசி விட்டார் ! அன்னத்திடம் பேசி விட்டார் ! கட்டிய மனைவியிடம் பேசி விட்டார் !

நடக்கக் கூடிய விஷயமா இது? அன்னத்தால் நம்ப முடியவில்லை. கண்கள் ஊற்

றெடுக்கின்றன. சற்றுமுன், எல்லோரையும் கூவி அழைத்துக் காட்ட வேண்டும் என்று எண்ணிய அதே உள்ளம் இப்பொழுது ஏகாந்தத்தை நாடுகிறது! யாரும் விழித்துக் கொள்ளாமல் இருக்க வேண்டுமே என்று பிரார்த்தனை செய்கிறது.

ரங்கண்ணாவா பேசுவது! ஓ! அந்த ''நீயா''வில்தான் எத்தனை கேள்விகள் அடங்கியிருக்கின்றன.

மடிகொள்ளாத இன்பப் பிச்சையின் பாரம் தாங்காமல் அன்னம் தொய்ந்து விட்டாள். அவள் தலை ரங்கண்ணாவின் மார்பில் சாய்கிறது; உடல் குலுங்குகிறது.

''இத்தனை நாட்கள் இப்படி அநியாயமாய்ப் பண்ணிட்டேனே! என் பேரிலே இருந்த கோபமெல்லாம் போயிடுத்தா? நீங்க பொழைச்சிடுவேளா? என்னைத் திருப்பியும் ஏத்துப்பேளா? சாதகப் பட்சிபோல் காத்திருந்த எனக்கு விடிவுகாலம் உண்டா?'' கேள்விகளை அடுக்கினாள் அன்னம்.

ரங்கண்ணா பேசவில்லை. அன்னத்தால் தாங்க முடியவில்லை. என்றோ கமலத்தம்மாள் சொன்னது ஞாபகத்துக்கு வந்தது.

இதோ, கமலத்தம்மாள் சொன்னதைக் கேட்க வேண்டிய நேரம் வந்து விட்டது. அன்னம் காளியானாள். சரேலென்று நிமிர்ந்தாள். ரங்கண்ணாவை நேருக்கு நேர் பார்த்தாள். விழிகளை விழிகளுக்குள் பாய்ச்சினாள்.

''எனக்கு ஒரு வழி சொல்லி விட்டுப் போங்கோ! உங்களை நான் விடவே மாட்டேன். விடவே மாட்டேன்.''

அன்னத்தின் சீற்றத்தைக் கண்டு ரங்கண்ணா ஒன்றும் செய்ய முடியாமல் விழித்தார். ஒரு கையை மிகப் பிரயாசையுடன் தூக்கி விரித்து உதட்டைப் பிதுக்கி, பார்வையில் கெஞ்சல் ததும்ப, ''ஐயோ! என்னால் பேச முடியவில்லையே!'' என்று சொல்லாமல் சொன்னார். கடைவாயில் எச்சில் நுரைத்து, உதடுகளும் நுனிமூக்கும் துடித்தன. ஒளியற்ற கண்கள், பேச முடியாத வார்த்தைகளையெல்லாம் — பேச முடிந்த நாளில் பேசாததால் துருப் பிடித்து மக்கிப் போன வார்த்தைகளையெல்லாம் — கரைத்துக் கண்ணீராய்க் கொட்டின.

அன்னம் துணுக்குற்று, நிதானத்துக்கு வந்தாள். தன் ரௌத்ராகாரத்தை மூட்டை கட்டி வைத்துவிட்டு, அடக்கமாக ரங்கண்ணாவின் மார்பைத் தடவிக் கொடுத்தாள். வழியும் கண்ணீரையும், உதட்டோர நுரைக் கொப்புளங்களையும் ஒற்றி எடுத்தாள்.

''ஐயோ! இப்படி அழறேளே! என்ன பண்றது சொல்லுங்கோளேன்! மாரை வலிக்கிறதா?''

''இல்லை'' என்று கையை விரித்தார் ரங்கண்ணா. இன்னும் ஏதேதோ ஜாடைகளின் மூலம், தான் துடிப்பது பேச முடியாத காரணத்தினால்தான் என்பதை அன்னத்துக்குப் புரிய வைத்து விட்டார்.....

அன்னத்தால் அவரது தவிப்பைக் காண முடியவேயில்லை. புழுவாய்த் துடித்தாள். அவரது மார்பில் தலையை வைத்துக் கொண்டு ஓவென்று அழுதாள்.

அவளது தலையை வருடிக் கொண்டே ரங்கண்ணாவும் குலுங்கிக் கொண்டிருந்தார்.

பிறகு, கடைசி யத்தனமாக, வயிற்றை எக்கிக் கொண்டு விழிகள் பிதுங்க, பாதி வார்த்தையாகவும் பாதி கேவலாகவும் அவர் ''அ....ன்...ன...ம்....!'' என்றழைத்தார்.

அந்த அழைப்பைக் கேட்ட அன்னத்தின் இதய கமலத்துக்குள், ''டொய்'' என்று சுருதி கூடியது. இரட்டை நாயனம் முழங்கிற்று. கெட்டி மேளம் அதிர்ந்தது. சிவப்பும், பச்சையும், மஞ்சளும், நீலமுமாக வாணங்கள் பொல பொலவென்று உதிர்ந்தன. சந்தனமும், பன்னீரும், ஜவ்வாதும் சுகந்தம் வீசின.

''அன்னம்!''

ரங்கண்ணா இன்னொரு முறையும் அழைத்து விட்டார்! முதல் அழைப்பின் போதையினின்றே விடுபடாத அன்னம், மெய்ம்மறந்த நிலையில் ''ஹூம்!'' என்று கேட்கிறாள்.

ரங்கண்ணாவுக்குத் திணறுகிறது. வார்த்தை திரித் திரியாய் உதிருகிறது. விடாமல் — சுபாவமான பிடிவாதத்தோடு — பல்லைக் கடித்துக் கொண்டு — ''எல்லாம்.... நாம.... செஞ்ச பாவம்!'' என்கிறார்.

ரங்கண்ணா கூறியது ஏதோ கனவில் கேட்பதுபோல் அன்னத்தின் காதுகளில் விழுந்தது.

''நாம செஞ்ச பாவமா?'' என்று எதிரொலி போல் கேட்டாள் அன்னம்.

''ஆமாம்!'' என்று தலையசைத்து ஒரு வெளிறிய புன்னகையை உதிர்த்தார் ரங்கண்ணா. தான் சொன்னதை அன்னம் சரியாகப் புரிந்து கொண்டு, ''நாம்''மில் நல்ல அழுத்தத்தைக் கொடுத்துக் கேட்டதில் அவருக்குப் பரம திருப்தி!

''இதோ, இதுதான்! பிடித்துக் கொள்!'' என்று விசிறிவிட்டுக் காலக் குமிழி படாரென்று வெடித்து விட்டது.

பிடிவாதமும் அகங்காரமும் நிரம்பிய ''**நான்**''ஐ, பிணைப்பும் பாசமும் கலந்த, ''**நாம்**''ஆக மாற்ற காலத்தைத் தவிர வேறு யாரால் முடியும்?

கோயில் உஷத்கால மணி 'டாண் டாண்' என்று ஒலித்தது.

## 8

அன்னத்தைத் 'துக்கம்' கேட்கப் பலர் வந்தனர். கமலத்து மாமி அவளைக் கட்டிக் கொண்டு கதறித் தீர்த்தாள். ''என் கண்ணே! உனக்கு இப்படி வரலாமாடி? கடைசி வரையிலும் உன் கழுத்தை அறுத்துட்டுப் போயிட்டானேடி உன் ஆம்படையான்!'' என்று வாய்விட்டு அழுதாள்.

''அதுக்கு என்ன மாமி பண்றது? எல்லாம் நாங்க செஞ்ச பாவம்!'' என்று அவள் பதில் சொல்லும் போது அன்னத்தின் கண்களில் அப்படியொரு ஜ்வலிப்பு பளிச்சிடுவானேன்?

எல்லோரிடமும் அவள் அதே பதிலைத் தான் சொன்னாள். இது ''அவர்'' வாங்கிக் கொடுத்த வைரத்தோடு என்று பெருமை பீற்றிக் கொள்வது போல், அன்னம் பெருமிதத்தோடு, ஏன், கர்வத்தோடு கூட, ''எல்லாம் நாங்க செஞ்ச பாவம்!'' என்று வருபவர்களிடமெல்லாம் சொல்லிக் கொண்டிருக்கிறாள்.

# பஞ்சகல்யாணி







பிரின்ஸிபால் பசுபதி தம்முடைய வலது கன்னத்தில் ஒரு கட்டெறும்பு தன்னிச்சையோடு உலாவி வருவதை உணரவில்லை. மெய்மறந்து தவத்தில் ஈடுபட்டிருக்கும் முனிவரைப் போல் கையில் இருக்கும் புத்தகத்திலேயே கவனமாயிருந்தார்.

திடீரென்று அவருடைய தவத்தைக் கலைத்தாள் காந்திமதி. புராண காலங்களிலும் தவத்தைக் கலைப்பவர்கள் பெண்கள்தானே?

''என்னங்க?'' என்று ஆரம்பித்தாள் அவள்.

''உம்.''

''என்ன 'உம்' கொட்டறீங்க?''

''சொல்லு.''

''உங்க எம். ஏ. பரீட்சைக்கு இவ்வளவு மும்முரமா படிச்சிருப்பீங்களா? ரேஸ் புத்தகத்தை இப்படி விழுந்து விழுந்து படிக்கிறீங்களே ?''

''என்னைத் தொந்தரவு செய்யாதே !''

''இன்னொருவாட்டி அப்படிச் சொன்னீங்கன்னு ரேஸ் புத்தகத்தைக் கிழிச்சு அடுப்பிலே போட்டுடுவேன்..... பெண் கலியாணத்துக்கு என்ன சொல்றீங்க ?''

''நீயாச்சு, ராஜாவின் அம்மாவாச்சு ! டாக்டரும் நானும்தான் ஒத்துப் போகிறோமே...!''

''உங்க டாக்டர் பிள்ளைக்குக் குமாஸ்தா வேலை யாரு வாங்கிக் கொடுத்தா? உங்க தம்பி சஞ்சீவிதானே ?''

''இல்லேன்னு யாரு சொன்னா ?''

''குமாஸ்தா மாப்பிள்ளை கூடாதுன்னு தானே சஞ்சீவி காஷியர் பிரமோஷனும் வாங்கிக் கொடுத்தான் ?''

''நீ நச்சரிச்சே! உன் பெண் நச்சரிச்சா!''

''நாம இவ்வளவு தூரம் செய்ததற்கு மீனாட்சி மனுஷி மாதிரியா நடந்துக்கிட்டா? என்ன பேச்செல்லாம் பேசிட்டா !''

''அதுதான் தெரியுமே? புதுசா ஏதாவது சொல்லு!''

''குமாஸ்தாவா இருந்தபோது ஐயாயிரமே அதிகம்னு சொன்னவ, இப்போ, பிள்ளை காஷியராகி விட்டானதும், தலைகால் தெரியாம குதிக்கிறா ! எட்டாயிரத்துக்கு நாம நகையும் பாத்திரமும் செய்து காட்டணுமாம்! பிள்ளை இனிமே பஸ்ஸிலே போகக் கூடாதாம். ஸ்கூட்டர் கேட்கிறதாம் !''

''கவலைப்படாதே, காந்தி! எல்லாம் சரியாயிடும்.''

டாக்டர் பிரவேசிக்கவே, காந்திமதி அங்கிருந்து அகன்றாள்.

''டேய்! என்னடா பார்த்து வைச்சிருக்கே! கிளினிக்கிலே பார்க்கலாம்னு புஸ்தகத்தை எடுத்தா இரண்டு எமர்ஜென்ஸி கேஸ் வந்து தொலைஞ்சிடுத்து !''

''அது போகட்டும். ராஜாவுக்கும் சகுவுக்கும் நாம எப்போ கலியாணத்தை வைச்சுக்கப் போகிறோம்னு சொல்லு!''

டாக்டர் எழுந்தார்.

''எங்கேடா கிளம்பறே ?''

''உன் அதிகாரத்தை உன் மனைவிகிட்டே காட்ட முடியுமாடா உன்னாலே!''

'' முடியாதுங்கிறதுதான் உலகத்துக்கே தெரியுமே !''

''உன் மனைவி ஊரில் சாதுன்னு பேர் வாங்கியிருக்கிறவள். அவகிட்டேயே உன் ஜம்பம் சாயலில்லை. என் மனைவியைப் பற்றி அக்கம்பக்கத்து மனுஷங்க என்ன சொல்லிக்கிறாங்கன்னு தெரியுமில்லையா? என்னாலே என்ன செய்ய முடியும்?''

''அப்போ ?''

''அவ கேட்கிறதைக் கொடுத்து உன் பெண்ணை மனையிலே உட்கார்த்தி வையடா! இப்போ புஸ்தகத்தைப் பாரு. நாலாவது ரேஸ்தான் ரொம்பக் குழப்பமாயிருக்கு! எல்லாமே நன்னா ஓடக் கூடியது !''

''கொஞ்சம் இரு !''

இரவு எட்டு மணிக்குத் தலை தெறிக்க ஓடி வந்தான் சஞ்சீவி. அண்ணனும் டாக்டரும், குதிரைப் பந்தயம் பற்றிச் சர்ச்சை செய்து கொண்டிருப்பதைக் கண்டபோது, ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது அவனுக்கு.

''டாக்டர், போதும் குதிரைப் பந்தயப் பேச்சு ! முதலிலே வீட்டுக்குப் போங்கள். ராஜா முட்டாள்தனமான காரியம் ஒன்றைச் செய்து விட்டுக் கையைப் பிசைகிறான்!''

''என்ன சித்தப்பா ?'' என்று திகிலோடு கேட்டாள் சகுந்தலா !

''என்னடா செய்திருக்கிறான்?'' என்று கேட்டார் பசுபதி.

''அவனுடைய உடம்புக்கு ஒன்றும் இல்லியே ?'' என்று டாக்டர் கேட்டாரே தவிர எழுந்திருக்கவில்லை. தம்முடைய

பிள்ளை, செய்யும் காரியங்களெல்லாமே முட்டாள்தனமான காரியங்கள்தான் என்பதை உணர்ந்தவரைப் போல் அவர் உட்கார்ந்திருந்தார்.

சஞ்சீவியின் உரத்த குரலைக் கேட்டுக் காந்திமதியும், அவள் பின்னால் பிள்ளை சோனியும் வந்தார்கள்.

''ஆபீசில் பத்தாயிரம் ரூபாய் காணவில்லை. காஷியர் ராஜா திருதிருவென்று விழிக்கிறான்! மானேஜர் எனக்குச் சொல்லி அனுப்பினார். டாக்டர், இன்னும் இங்கேயே உட்கார்ந்திருக்கிறீர்களே?''

டாக்டர் மெதுவாக எழுந்தார்.

அவர் தலை மறைந்ததும் காந்திமதி பயந்து கொண்டே கேட்டாள்:

''பணத்தைக் கையாடி விருப்பானோ ?''

சஞ்சீவி பதில் சொல்லவில்லை. அண்ணனைப் பார்த்தான். அவர் இந்த உலக நினைவையே இழந்து, ரேஸ் புஸ்தகத்தில் மூழ்கியிருந்தார்.

''அண்ணா! என்னிக்குத்தான் இதை ஒழிக்கக் கட்டப் போறீங்களோ !''

''இது ஒரு ஸயன்ஸ்டா, சஞ்சீவி, ஸயன்ஸ்! சூது இல்லே '' என்றார் அவர்.

டாக்டருடைய வீட்டில் ராஜா அழுது கொண்டிருந்தான்.

''என்னடா பண்ணினே பணத்தை ?'' என்று எட்டாவது தடவையாக மீனாட்சி அம்மாள் கேட்டாள்.

''காணாமல் போக்கிட்டேன்'' என்றான் ராஜா ஒன்பதாவது தடவையாக.

''காணாமப் போக்கின பணத்தை என்ன செய்திருக்கே? எங்கே ஒளிச்சு வைச்சிருக்கே?''

''என்னம்மா, பெத்த பிள்ளையைப் பார்த்து இப்படிக் கேட்கிறியே !''

''பெத்துட்டேனே, அதனாலே கேட்கிறேன் ! அந்தச் சகுந்தலாவைக் கலியாணம் செய்து கொள்ளணும்னு இப்படி ஏதாவது செய்துட்டியா ?''

''அதெல்லாம் இல்லே.''

''பின்னே எதுக்காகச் செய்தே?''

'' ஐயோ! நான் எதுவும் செய்யலே, அம்மா !''

'' டேய்! நாளைக்குப் போலீஸ்காரங்க உன்னை இழுத்துக் கொண்டு போய் நகத்திலே ஊசி ஏத்திக் கேட்பாங்களேடா !.... திருடன்னு பேர் வாங்கிட்டியேடா! இப்போ நான் எங்கேடா போவேன் பத்தாயிரத்துக்கு ?''

''கஜபதியைக் கேளேன், அம்மா !''

''அவன் ரொம்பப் பெரிய மனுஷன்டா, முட்டாள். அம்பதாயிரம் தொலைச்சிருந்தா அவன்கிட்டே போகலாம்! பத்தாயிரம் வேணும்னு கேட்டா நம்மைப் பத்தி மட்டமா நினைச்சுக்குவானேடா ! இரு. அதோ உன் அப்பா வர்றார்....!''

டாக்டர் நிதானமாக உள்ளே வந்தார்.

''உங்க பிள்ளை என்ன செய்திருக்கிறான், தெரியுமா?'' என்று ஆரம்பித்தாள் மீனாட்சி.

''எல்லாம் சஞ்சீவி சொன்னான். நம்ப பிள்ளையின் முட்டாள்தனம் அஞ்சு பத்தோடு தான் இதுவரையில் இருந்தது. இப்போ ஒரே அடியாய்ப் பத்தாயிரத்துக்கு ஏறிடுத்து !''

''இப்போ என்ன செய்யறது?''

''என்னைக் கேட்டா ஒரே ஒரு வழிதான் இருக்கு !''

''என்னங்க வழி !''

''காந்திமதி கலியாணத்துக்குன்னு ஐயாயிரம் தனியா வைச்சிருக்கா ! இன்னும் ஓர் ஐயாயிரம் எப்படியாவது கடன் வாங்கித் தரச் சொல்லுவோம்..... அப்புறம் மெதுவா ஐயாயிரத்தைத் திருப்பிக் கொடுப்போம். ராஜா மாப்பிள்ளைன்னு ஆயிட்டா, அவங்களுக்கும் கேட்க நா வராது!''

''அது சரிதான். ஐயாயிரம் ரொக்கமா கொடுத்துட்டா நகையே வராதே ?''

''அதுக்கென்ன பண்ணறது? கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை என்றால் எப்படி ? ஏதாவது ஒண்ணுதான்.''

''பின்னே தப்பணும்னு.....''



''சரிங்க!'' என்று இழுப்பதைத் தவிர மீனாட்சிக்கு வேறு வழி புலப்படவில்லை.

தன் பெண்ணின் கலியாணத்துக்கென்றே இப்படிப்பட்ட ஓர் அரிய சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது என்று எண்ணிய காந்திமதி, மீனாட்சியின் குழைவையும் கனிவையும் கவனியாமல் தன்னுள் கணக்குப் போட்டுப் பார்த்தாள். அன்று மத்தியானம்தான் மீனாட்சி எட்டாயிரத்துக்குச் சீர்வரிசைகளும் ஸ்கூட்டரும் வந்து சேர வேண்டும் என்று விடாப்பிடியாய் நின்றாள். ஆனால் இரவுக்குள் தெய்வம் தண்டனையே கொடுப்பதுபோல் அவளைச் சங்கடத்தில் ஆழ்த்திவிட்டது. வேறு சமயமாக இருந்தால் காந்திமதி தன்னுடைய ஆத்திரத்தைத் தீர்த்துப் பழி வாங்கியிருப்பாள். ஆனால் பெண்ணை உத்தேசித்து வாய்மூடித்தானே இருக்கவேண்டும்?

அவள் போட்ட மனக் கணக்கில் ஐயாயிரம் கடனாக வாங்குவது ஒரு கடினமான காரியமாகப் படவில்லை. எவர்சில்வர் செட்டியாருடைய மனைவி மரகதம் ஏன் எதற்கு என்கிற கேள்விகளே கேட்காமல் இரண்டாயிரம் கொடுப்பாள். பண்டாபீஸில் ஏழுநூறு இருக்கிறது. சஞ்சீவியிடம் ஓர் ஆயிரம் பெயரும், கைவசம் ஐயாயிரம் தயா



ராக இருக்கிறது. பாக்கி ஆயிரத்துச் சில்லறையை ஒட்டியாணம், வளையல்கள் இவற்றைக் கொண்டு ஒப்பேற்றி விடலாம். அதன் பின், — சகுந்தலா — ராஜா கலியாணத்தை யார் நிறுத்திவிட முடியும்?

டாக்டரும் மீனாட்சியும் அவன் கொடுத்த வாக்குறுதியுடன் வெளியேறினாலும், காந்திமதி சஞ்சீவியையும் அழைத்துக் கொண்டு, ஏவர்சில்வர் செட்டியார் வீட்டுக்கு விரைந்தாள். மீனாட்சிக்கு ஒரு சபலம். அடம் பிடித்து டாக்டருடன் கஜபதி வீட்டுக்குச் சென்றே ரூக்க விட்டாள்.

''இந்த அற்பத் தொகைக்காக நீங்கள் உங்கள் மனைவியையும் அழைத்துக் கொண்டு வந்திருக்கவேண்டியதில்லை'' என்றார் கஜபதி. உடனடியாக நோட்டுக் கத்தையைக் கொடுத்துவிடப் போகிறார் என்று மீனாட்சி நினைத்தாள். ஆனால் கஜபதி, ''நாளைக்குக் கரெக்டா பத்து மணிக்கு இங்கே வாருங்கள்.... உங்களுக்குப் பணம் தயாராக இருக்கும்!'' என்றார்.

வழி நெடுக மீனாட்சி கணவரைப் பொரிந்து தள்ளி விட்டாள். 'நான் அப்பவே சொன்னேனே, கேட்டீர்களா?' அவசரப்பட்டுக் கொண்டு பிரின்ஸிபால் வீட்டுக்கு நாம் போயே இருக்க வேண்டாம்' என்றாள். அதே கையோடு, காந்திமதிக்கும் 'சிரமப்பட வேண்டாம்' என்று சொல்லி அனுப்பி விட்டாள்.

மறு நாள் மீனாட்சிக்கு இருப்புக் கொள்ளவில்லை. பின்னே தொலைந்த பத்தாயிரம்கூடப் பொருட்டாகத் தோன்றவில்லை. முந்தின இரவு எதை மாபெரும் பிரச்னை என்று கருதி மாய்ந்து போனாளோ, அதை நொடிப் பொழுதில் தீர்த்து வைக்க அவளுடைய உறவினன் கஜபதி முன்வந்து விட்டான்! இத்தனை நாட்களாக அவள் கஜபதி வீட்டாருடன் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொள்ளாததே பெரிய தவறு! பின்னே ராஜாகூட இனிமேல் காஷியர் உத்தியோகத்துக்குப் போக வேண்டாம். கஜபதி போன்ற கோடீசுவரரின் தயவாலும் சிபாரிசாலும் ஒரு பெரிய கம்பெனியில் உதவி மானேஜர் போன்ற வேலையில் சேர்ந்துவிடலாம்.

காந்திமதியை நினைத்தபோது மீனாட்சிக்குச் சிரிப்புத்தான் வந்தது. வெகு எளிதாக ஐயாயிரத்தைக் காட்டிப் பெண்ணைக் கலியாணம் செய்து கொடுத்து விடலாம் என்று மனக் கோட்டை கட்டினாளே! 'உதவி மானேஜர் ஆனபிறகுதான் ராஜாவுக்குக் கலியாணம்!' என்று சொல்லி விட்டால் அவள் முகத்தில் கரி பூசினாற்போல் ஆகிவிடும்.

சரியாகப் பதினொரு மணிக்கு டாக்டர், கஜபதியின் வீட்டிலிருந்து திரும்பி வந்தார். மீனாட்சி திண்ணையிலேயே அவரை மடக்கிக் கேள்விகள் கேட்டுத் துளைக்க ஆரம்பித்து விட்டாள்.

''கொஞ்சம் பொறு, மீனு! எதற்கு அவசரம்?''

கண்ணாடியைக் கழற்றிக் கையில் வைத்துக் கொண்டே, ''கஜபதி ரொம்பப் பெரிய ஆள்! அவனைப் போல் யாருக்கும் கொள்கைகள் இருக்க முடியாது!'' என்றார் டாக்டர்.

''அப்படித்தான் இருக்கணும்!''

''சரியா ஒன்பது மணிக்குப் பணத்துடன் வர வேண்டுமென்று யாரிடமோ சொல்லியிருந்தானாம்! ஒன்பது மணிக்கு வரவேண்டியவன் பத்தே முக்கால் ஆகியும் வரவில்லை. அதனாலே, அவனுடைய பணம் நமக்குத் தேவையில்லை என்று கஜபதி கண்டிப்பாகச் சொல்லி விட்டான்!''

''ரொம்பக் கறாரான பேர்வழி!''

''ஆமாம். அதனாலே பணம் பெயரலே!''

மீனாட்சியின் தலை சுற்றியது.

அவளை ஆசுவாசப்படுத்த டாக்டராலுமே முடியவில்லை.

அன்று மத்தியானமே ராஜா பிரின்ஸிபால் வீட்டை நோக்கி ஓடினான்.

பசுபதியைப் பார்த்ததும் கண்களில் நீர் மல்க, ''மாமா!'' என்று கேவினான்.

''என்னடா, ராஜா!''

''இனிமேல், ஜெயில்தான் கதி, மாமா! உங்களை யெல்லாம் பார்த்துச் சொல்லிக் கொண்டு போகலாம் என்று வந்தேன்! கஜபதியை நம்பி என் அம்மா என்னைத் தீர்த்துக் கட்டிட்டா! உங்ககிட்டே மறுபடியும் பணம் கேட்க வரமாட்டேன்னு சொல்லிட்டா!''

''உம்......!''

''உன் அம்மாவின் பெத்த வயிறு கலங்காமப் போயிடுச்சு! ஆனா உன்னைக் கண்டா என் மனசு நெகிழ்கிறது! இந்தா, இதிலே பத்தாயிரம் இருக்கு! கட்டிவிட்டு, உன் வேலையையும், குடும்ப மானத்தையும் காப்பாற்றிக் கொள்!'' என்று கவரை நீட்டினாள் காந்திமதி.

அவளுடைய செய்கையைக் கண்டு எல்லோரும் ஸ்தம்பித்துப் போனார்கள். ராஜா கையை நீட்டிப் பணத்தைப் பெற்றுக் கொண்டான். அடுத்த விநாடியே பணம் கையிலிருந்து பறிக்கப்பட்டது. ராஜா திடுக்கிட்டுத் திரும்பினான். சஞ்சீவி நின்றுகொண்டிருந்தான் பணத்துடன்.

''சஞ்சீவி சார்!'' என்று கேவின ராஜா, ''நீங்க வேலையும் காஷியர் பிரமோஷனும் வாங்கிக் கொடுத்தீங்க! ஆனா அந்த வேலையை நீங்களே பிடுங்கிக் கொள்றீங்க! பரவாயில்லே சார்..... நான் வரேன்!'' என்றான்.

சஞ்சீவி கலகலவென்று சிரித்தான்.

''என்னடா சிரிப்பு?'' என்றார் பசுபதி.

''ஸார்.... ஸார்....! சக்குவுக்கு முன்னாடி முட்டாப் பயல்னு சொல்லாதீங்க, ஸார்!''

''இந்த முட்டாப் பயல் என்ன செய்திருக்கிறான், தெரியுமா? நூறு ரூபாய் நோட்டுகளைப் பத்து ரூபாய் நோட்டுக்குப் பதிலா வாரி வழங்கியிருக்கிறான். பம்பாய்க்கு அவசரமா போற மானேஜர்கிட்டே ஆயிரம் ரூபாய் கொடுத்து விட்டு, ரசீதைக் காலடியில் போட்டிருக்கிறான்! ஒன்பதாயிரம் நூறு ரூபாய் நோட்டாகவும் தொள்ளாயிரம் சில்லறையாகவும் இருந்திருக்கு! வாங்கினவன் யாரு? கம்பெனி பார்ட்னர்! அவசரம் அவசரமா ஹைதராபாத்துக்குப் பிளேனைப் பிடிக்க ஓடினவன்! இன்னிக்குத்தான் அங்கேயிருந்து போன் வந்தது.....'' சஞ்சீவி நிறுத்தினான்.

டி எம் பி ட்ரக் உபயோகிப்பவர்கள்

அனைவருக்கும்

தமிழ்ப் புத்தாண்டு வாழ்த்துக்கள்



**TATA**

**MERCEDES-BENZ**

டாடா என்ஜினீயரிங் & லோகோமோட்டிவ் கோ., லிட்.

148, மகாத்மா காந்தி ரோடு, பம்பாய் -1

''அப்பாடா ! தலைக்கு வந்தது....'' என்று இழுத்தாள் காந்திமதி.

''அண்ணி! தலைப்பாகையோடு போச்சு ! வேலையிலிருந்து நீக்கிவிடணும்னு சொன்னார்கள். நான்தான் வாதாடினேன். ஆனா இனிமே காஷியர் வேலை இல்லை. குமாஸ்தா தான். அதிலும் இரண்டு இன்க்ரிமென்டு குறைஞ்சுதான் சம்பளம் !''

ராஜா வீட்டை நோக்கி ஓடினான் !

ஞாயிற்றுக்கிழமை காலை.

கையில் இருக்கும் ஒரே பத்து ரூபாய் நோட்டையே வெறித்துப் பார்த்த பசுபதி கடைசியில் மகன் சோனியை அழைத்தார்.

''டேய், உடனே கிண்டிக்கு ஓடணும்!''

''டிக்கெட் வாங்கத்தானே !''

''ஆமாம். ஜாக்பாட் டிக்கெட். இதோ நம்பரை எழுதியிருக்கேன். முதல் நாலு குதிரைகள் நம்பர் மூணு. கடைசிக் குதிரை நம்பர் இரண்டு.''

''சரிப்பா ! பணம் வந்தா என்ன வாங்கித் தர்றே ?''

''டெரிலின் ஷர்ட் !''

''தாங்க்ஸ்......3,3,3,3,2தானே?''

''ஆமாம்.'' அடுத்த நிமிஷம் சோனி வெளியேறினான்.

பசுபதி வீட்டினுள்ளே வளைய வளைய வந்தார். காலையிலேயே காந்திமதியும் சகுந்தலாவும் ஒரு சீமந்தக் கலியாணத்துக்குப் போய் விட்டார்கள். சோனி போனபிறகு, சமையலறைக்குச் சென்று ஒரு தம்ளர் காப்பி கலந்து சாப்பிடலாம் என்று தோன்றியது. மெதுவாக நடந்து சென்றார்.

பாலை எடுக்கையில் சாவிக் கொத்து கண்ணில் பட்டது. அடுத்த வினாடி ஆயிரமாயிரம் யோசனைகள் மண்டையில் உதயமாயின. காப்பியை மறந்த அவர், சாவியை எடுத்துக் கொண்டு ஹாலுக்கு ஓடி வந்தார். எவர் சில்வர் செட்டியார் வீட்டில் திருப்பிக்கொடுத்தது போக மீதி ஐயாயிரம் அப்படியே இருந்தது.

கண்முன்னால் அவர் ரொம்ப நாட்களாகக் கனவு காணும் பஞ்ச கலியாணி எனும் குதிரை நின்று, நாலு கால் பாய்ச்சலில் ஓட ஆரம்பித்தது. இன்றைக்கு அதை யாருமே வெல்ல மாட்டார்கள். ஆயிரம் ரூபாய் கட்டினால் பத்தாயிரம் வரும்.

அடுத்த நிமிடமே பசுபதி வீட்டைப் பூட்டி, சாவியைப் பக்கத்து வீட்டில் கொடுத்துவிட்டு, டாக்டர் வீட்டை நோக்கி விரைந்தார்.

அன்று இரவு எட்டு மணிக்கு மேல் பிரின்ஸிபால் பசுபதியை அம்பட்டன் வாராவதிக் கருகே, சஞ்சீவி கண்டுபிடித்து வீட்டுக்கு இழுத்து வந்தான்.

கூடத்தில் கண்ணீர் பெருகக் காந்திமதி கதறிக் கொண்டிருந்தாள்.

''எறும்பு சேர்க்கிற மாதிரி சேர்த்து வைச்சதை ஒரு நொடியில் தொலைத்துவிட்டீர்களே!'' என்று புலம்பினாள் அவள்.

பசுபதியின் கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் கொட்டியது. கேவல்



பெண் முடிந்தபோது சிரிப்பாள்; ஆனால் நினைத்தபோது அழுவாள்.

—பிரஞ்சுப் பழமொழி

களிடையே, ''பஞ்சகல்யாணி! என்னை மோசம் செய்து விட்டாள் ! இனிமேல் நான் கிண்டிப் பக்கம் தலையை வைக்கப் படுக்க மாட்டேன்!'' என்றார்.

''சத்தியமாக?'' என்றான் சஞ்சீவி.

''தெய்வத்தின் மீது ஆணையாக, இனி மேல் நான் கிண்டிக்குப் போகமாட்டேன்!''

''இனிமேல் சத்தியம் செய்து என்ன புண்ணியம்?'' என்று நொந்து கொண்டாள் காந்திமதி.

அடுத்த நிமிடம் சஞ்சீவி மடியை அவிழ்த்தான். நாலு ரூபாய் நோட்டுக்கள் சிதறின.

''அண்ணா, அண்ணி! இருபத்தெட்டாயிரம் இருக்கு!''

பசுபதி மூர்ச்சை போட்டு விழாமல் இருக்கச் சுவரில் சாய்ந்துகொண்டார்.

''இது என்னடா, சஞ்சீவி?'' என்று கேட்டாள் காந்திமதி.

''அண்ணி! காலையிலே சோனி டிக்கட் வாங்கினான் இல்லையா?''

''அது நாலு மூணும் ஒரு ரெண்டு மாச்சே? அதிலே எல்லாம் தோற்றுப் போயிடுச்சே!'' என்றார் பசுபதி!

''ஆனா, சோனி என்ன டிக்கட் வாங்கினான் தெரியுமா? நாலு ரெண்டும் ஒரு மூணும்! உங்களை ரேஸ்கோர்ஸெல்லாம் தேடினேன். கொஞ்சம் பணத்தையாவது காப்பாத்தலாம்னு. முடியலே! கடைசியிலே ஜயமான ஜாக்பாட் ஒன்றுக்கு இருபத்தெட்டாயிரம் ரூபாய் வந்திருக்கிறது என்று போர்டிலே போட்டிருந்ததைப் பார்த்தேன். என்னையும் மீறி ஆசையில் டிக்கட்டை எடுத்துப் பார்த்தால்....''

''அந்த ஆசைதான்டா காம்பினேஷன் டிக்கட். ஜுதாடணும்னு தோணற துடிப்பு!''

''கொஞ்சம் இருங்கள்...சஞ்சீவி, சொல்லு மேலே!''

''நாலு ரெண்டும் ஒரு மூணும் இருந்தது டிக்கட்டிலே.''

''இனிமே சகுந்தலா கல்யாணம் நிச்சயம்! எனக்கு டெரிலின் ஷர்ட்டும் நிச்சயம். ஆனால் அப்பா சத்தியம் செய்ததுதான் நிச்சயமில்லை!'' என்றான் சோனி.

''அதுதான் நடக்காது இந்தப் பசுபதியிடம். பிரின்ஸிபால் சொன்னால் சொன்னது தான்! நான் சத்தியம் செய்தவுடனேதான் ஆண்டவனைப் பார்த்து இதுவரையில் நான் குதிரைப் பந்தயத்தில் விட்ட பணத்தை,—அதாவது இருபத்தெட்டாயிரத்துக்கு ஒரு பைசா கூடவும் இல்லை, குறையவும் இல்லை,—திருப்பிக் கொடுத்து விட்டார்!'' என்ற பிரின்ஸிபால் பசுபதியின் முகத்தில் ஓர் உறுதி இருந்தது.



# கலைக் கண்ணகி

சோமு

திருவல்லிக்கேணிக் கடற்கரையின் விரிந்து பரந்த வெண் மணற்பரப்பில், நாள் தோறும் நான் அந்தக் காட்சியைக் காணத் தவறுவதில்லை. இத்தனை வயதான அந்த இருவரும் கணவனும் – மனைவியும் – இத்தனை நுட்பமான தொழிலை ஏன் விடாமல் நடத்துகிறார்கள்? முதிர்ந்த விழிகளுக்கு இத்தனை தொல்லை தருகிற இந்த ஒரு வியாபாரத்தில் இவர்களுக்கு அத்தனை பெரிய ஊதியம் என்ன கிடைத்துவிடப் போகிறது என்று பல தடவை நான் சிந்தித்ததுண்டு!

''தேங்காய்மாங்காய் பட்டாணி சுண்டல்'' என்று எதுகையோடு விலை கூறி விற்கும் இளமைசாலிகள் ஒருபுறம், ''முறுக்கு சுண்டல் மினருவடை'' என்று தகர டப்பாக்களோடு சந்தம்பாடிப் பையும் கையுமாக

வளைய வருகிற சிறுவர்கள் ஒருபுறம். இவர்கள் நூற்றுக் கணக்கில் மனித நாவின் சிறு தேவைகளை வைத்துத் தங்கள் தேவைகளை நிரப்பி வரும்போது, இந்தக் கூட்டத்தின் நடுவிலே இப்படியும் ஒரு விநோதமான தொழிலில் இந்த முதிர்ந்த சதிபதிகள் எதற்காக ஈடுபடவேண்டும்?

சில ஆண்டுகளுக்கு முன் முதன் முதலாக நான் இந்த இருவரையும் சந்தித்தபோது இவர்கள் பஞ்சுப் பொம்மைகள் விற்பதைக் கண்டேன். அவற்றிலும் நவ நாகரிக மக்கள் விரும்புகிற விதத்தில் நடன நாட்டிய நங்கைகளின் பொம்மைகளாகச் செய்யக்கூடாதோ? இல்லை! எல்லாம் கண்ணகி பொம்மைகள்! கையிலே சிலம்பை ஏந்தித் தலைவிரி கோலமாக நின்ற கண்ணகி இல்லை. சாந்தமும் அமைதியும் கமழ அரசருக்கும், ஆளுநருக்கும், மக்களுக்கும் ஆசி வழங்குகிற நிலையிலே தெய்வமாக மாறி நிற்கிற கண்ணகிக் கடவுள். அந்தக் கடவுளைப் பஞ்சிலே உருவாக்கி விற்பனைபுரிந்தார்கள் இவர்கள். ஏதோ சில அணாக்கள் கொடுத்து ஒரு பொம்மை வாங்கியதாக நினைவு. இரண்டொரு நாட்களில் அந்தப் பொம்மையும் பஞ்சாகப் பறந்து விட்டது!

சில ஆண்டுகள் கழித்து மீண்டும் இவர்களை நான் பார்த்தபோது கிளிஞ்சல்களிலே வண்ணங்கள் பூசி ஒட்டுப் பொம்மைகள் செய்து விற்றார்கள் இதே கடற்கரையில்! அதே பழைய கண்ணகிதான். ஏதோ சில பைசாக்கள் கொடுத்து அந்தக் கண்ணகிப் பொம்மைகளிலே ஒன்றை வாங்கியதாக நினைவு. இரண்டு மூன்று நாட்களில் கிளிஞ்சல் உடைந்து அந்த நினைவும் சிதறி விட்டது!

இப்போது நாள்தோறும் மீண்டும் அவர்களை இந்தக் கடற்கரையில் மாலை நேரங்களில் தவறாமல் காணுகிறேன். பஞ்சும், கிளிஞ்சலும் போய் இவர்கள் இப்போது மண் பொம்மைகள் செய்து விற்கிறார்கள். இவற்றிலும் அதே பழைய கண்ணகிதான். பாண்டிய மன்னனோடு தலைவிரிகோலமாக நின்று வழக்குரைத்தவளும், மதுரை மாநகரத்தை எரித்தவளுமான கண்ணகி இல்லை. அந்தப் பொம்மையைச் செய்வதற்கு இவர்களுக்கு ஏதோ ஒருவித அச்சம் போலும்! அமைதியும் ஆசியும் நிரம்பிய தெய்வக் கண்ணகியை, கலைக் கண்ணகியை, நூற்றுக்கணக்



விலே செய்து, திருவல்லிக்கேணியின் மணற்பரப்பிலே பரப்பி யிருந்தார்கள்! இதில் இன்னும் விசித்திரமான ஒரு பொருத்தம் என்னவென்றால், சில மாதங்களாக இவர்கள் கலைக் கண்ணகியை விற்பனை செய்கிற அதே இடத்துக்கு அருகில் வீரக் கண்ணகியே வந்து குடியிருக்கத் தொடங்கிவிட்டாள்!

ஆம்; உலகத் தமிழ் மாநாட்டை யொட்டிக் கண்ணகியின் சிலையைப் புதிதாக உருவாக்கி நிறுத்தி யிருக்கிறார்களே, அதே இடத்தில்தான் பழைய கலைக் கண்ணகியும் சிறு சிறு வடிவங்களிலே விற்பனைக் கொலுவில் வீற்றிருந்தாள்!

ஒரு நாள் மாலை இந்த முதிய சதிபதிகளின் கலைக் கண்ணகி எப்படிப்பட்டவள் என்பதை எனக்கு எடுத்துச் சொன்னார் முன்னாள் நாடக மேடை நடிகர் அண்ணாசாமி. அந்த வரலாற்றைக் கீழே தருகிறேன்:

## 2

இருபது முப்பது ஆண்டுகளுக்கு முன்பு தமிழகத்து நாடக மேடைகளில் எல்லாம் கோவலன் — கண்ணகி நாடகம் 'ஸ்பெஷல்' நாடகமாக ஒரே கோலாகலத்தோடு நடந்து வந்தது நேயர்கள் சிலருக்கு நினைவிருக்கும். அதிலும் கோவலன் குமாரசாமி பாகவதரைப் பலரும் மறந்திருக்க மாட்டார்கள். திருநெல்வேலி மாவட்டத்தில் சாம்பூர் வடகரைக்கு அருகே ஒரு சிறிய கிராமத்தில், பரம்பரையான பாகவதர் குடும்பம் ஒன்றில் பிறந்தவர் இந்தக் குமாரசாமி. குரல் 'கணீர்' என்று வெண்கலமாக ஒலிக்கும். பேச்சிலே அழுத்தம் திருத்தம்! கனமான குரலில் ஒரு கவர்ச்சியான இனிமை இணைந்திருந்த காரணத்தால் மேடையில் முதன் முதலாக வந்து தோன்றிய சில மாதங்களிலேயே குமாரசாமியின் புகழ் தமிழகம் எங்கும் 'கணீர்' என்று ஒலிக்கத் தொடங்கிற்று. அவருடைய 'கோவலன்—கண்ணகி' என்றால், அந்த நாடகத்துக்குப் பத்து நாட்களுக்கு முன்பே அச்சாரம் கொடுத்து நாடக அன்பர்கள் கொட்டகையில் இடம் பிடித்துக் கொள்வார்கள். இதனால் பல ஊர்களில் இந்த ஒரே நாடகம் தொடர்ச்சியாகப் பத்து நாள் பன்னிரண்டு நாள் என்று நடக்கும்!

கோவலன் குமாரசாமி பாகவதர் என்று சொல்லும்போது அந்தப் பெயரின் ஒலிக் குறிப்பிலிருந்து அவருக்கு நாற்பது நாற்பத்தைந்து வயதிருக்கும் என்று ஊகித்து விடக் கூடாது! அது தவறு. இருபத்தைந்து வயதுக்கு மேற்படாத இளஞ் சிங்கம் குமாரசாமி. கலியாணம் ஆகாத கட்டிளம் வயது. சாம்பூர் வடகரை மண்ணின் வளமானது, உடம்பு முழுதும் பரவித் தளதள என்று மினுக்கும்! முகத்தில் பொதிகை மலையின் தென்றல் வந்து விளையாடி விளையாடி ஒரு மோகனத்தை மெருகேற்றி யிருந்தது. கண்களில் ஒரு கவர்ச்சி. சதைப் பற்றுள்ள கன்னங்கள். கன்னங் கரேலென்று கோடிட்டது போல் வளைந்து கிடந்த ஊசி மீசை! அதில் அழகோடு இணைந்த ஒரு சிறு எச்சரிக்கை! நீண்ட மூக்கும் உதட்டிலே குழி சுழற்றுகிற ஒரு புன்முறுவலும் யாரையும் ஒரு கிறக்குக் கிறக்கும்! அப்படிப்பட்ட இளவரசத் தோற்றம். இதுதான் கோவலன் குமாரசாமி பாகவதர்!

கதாநாயகர் மேடையிலே நம் கண்முன் தோன்றுவதற்கு முன்பாகத் திரைக்குப் பின்னால் நின்று 'மணியோசை வரும் முன்னே' என்ற வசனத்துக்கு ஏற்பப் பாகவதரின் குரல் ஒலிக்கும். அவருக்கு என்று அவருடைய 'ஸ்பெஷல்' பாட்டு ஒலிக்கும்.

''செந்தில் மாநக
ரந்தனில் மேவிய
தேசிக ஷண்முக நேசன்''

என்ற அண்ணாமலை ரெட்டியாரின் காவடிச் சிந்துதான் பாடுவார் குமாரசாமி பாகவதர். அந்தக் காலத்தில் அதற்கு இங்கிலீஷிலே தான் பெயர் சொல்லுவார்கள், ''என்ட்ரன்ஸ் ஸாங்'' என்று!

''செந்தில் மாநக
ரந்தனில் மேவிய
தேசிக ஷண்முக நேசன் - மயில்
வாசியில் ஏறுஉல் லாசன்''

என்று தொடங்கி, அந்த ஆரம்பப் பகுதி பாடி முடியும்வரை திரை விலகாது! பிறகு திரை தூக்கியதுமோ என்றால்,

''இந்து எழுந்து நயங்கு மாலையில்
வந்துவண்டு முழங்கு சோலையில்
இன்பசாகர மாகிய லீலைகள்
அன்புடனே செய்தான் மானே - அந்தச்
சம்பிரமம் என்னசொல் வேனே''

என்று முருகப் பெருமானுடைய கீர்த்தியை அந்தச் சொல்லடுக்குகளிலே மடக்கி, வளைத்து ஆர்மோனியச் சக்கரவர்த்தியும் மிருதங்கப் பயில்வானும் மூச்சுத் திணறும்படியாகச் சரவெடி வெடித்தது போல் 'சடசட' என்று உதிர்த்து நிறுத்தியதும் மக்கட் கடல் நூறு நூறு இடிகள் சேர்ந்து இடிப்பது போல் 'சடசடசட' என்று கைதட்டுவது அந்தக் காலத்தில் ஒரு பெரிய அரிய காட்சியாகவும் மெய்சிலிர்க்கும் அனுபவமுமாகவும் இருக்கும்!

இப்படிப்பட்ட சங்கீதக் கோவலனாகிய, குமாரசாமி பாகவதரின் வாழ்விலே, மேடையில் மட்டுமல்லாமல் வாழ்விலுமே, வந்து தோன்றினாள் ஒரு கண்ணகி. அவள் பெயர் கமலவல்லி! கோவலனுக்கு ஏற்ற கண்ணகி என்று தமிழகம் முழுவதும் கைதட்டி ஆரவாரம் செய்து வரவேற்றது அந்தக் கலைக் கண்ணகியை!

கணவனோடு மதுரை நோக்கிப் புறப்படும்போதும் சரி, கணவன் கொலையுண்டான் என்று கேட்டுத் துடிக்கும்போதும் சரி, கையிற் சிலம்புடன் பாண்டியன் நெடுஞ்செழியனோடு வழக்காடும்போதும் சரி, பின்னர் அமைதியே உருவாகத் தெய்வமாக நின்று கோலம் தரும்போதும் சரி, கமலவல்லியின் நடிப்பை நாடக அன்பர்கள் ஆயிரம் ஆயிரம் இணைக் கைகள் தட்டி ஆமோதித்தார்கள்.

'ஸ்பெஷல்' என்று அகில உலக மொழியாகிய ஆங்கிலத்தில் அழைக்கப்பெற்ற




வந்தவர் : நீங்க எப்பவும் விருச்சிக ராசிக்கு மோசமான பலனே எழுதறீங்களே, ஏன் ?
ஆசிரியர் : அது என் மாமியாரின் ராசி !

சிறப்பு நாடகங்களில் 'கோவலன் ஸ்பெஷல்' என்றால் அது 'ஸ்பெஷலிலும் ஸ்பெஷல்'! இந்த ஸ்பெஷல் நாடகம் நடக்கும் ஸ்பெஷல் கொட்டகைக்கு அருகிலே ஸ்பெஷல் ஹோட்டல்கள், இந்த இடத்துக்கு வந்து போக ஸ்பெஷல் ஜட்கா வண்டிகள், ஸ்பெஷல் பஸ்கள், ஸ்பெஷல் கார்கள், ஸ்பெஷல் ரயில் வண்டிகள் — எல்லாம் ஒரே ஸ்பெஷல் மயம்! 'இஸ்பெஷல்' என்று ஒரு ''இ'' போட்டுச் சொல்லுவார்கள் என்றால் பார்த்துக்கொள்ளுங்களேன்! 'ஒன்ஸ்மோர்' அங்கீகரிக்கப்படமாட்டாது என்று விளம்பரத்தில் ஒரு விதி போட்டிருந்தாலும், நாடக அன்பர்களுக்காக 'ஸ்பெஷல்-ஒன்ஸ்மோர்கள்' இந்த ஸ்பெஷல் நாடகத்தில் அங்கீகரிக்கப்படுவதுண்டு. அதிலும் மாதவியிடம் மோசம் போனதாக வந்து நின்ற கணவனை உதாசீனம் செய்யாமல், அவனே தெய்வம் என மதித்து அந்த நிலையிலும் கண்ணகியானவள் தனது சிலம்பை அவனிடம் தர முனைகிற அந்தக் கட்டத்திலே நாடகம் பார்க்கும் அன்பர்கள், முக்கியமாக ஆடவர் இலக்கங்கள் எழுந்து நின்று நூற்றுக்கணக்கில் 'ஒன்ஸ்மோர்' கேட்பார்கள், அந்தக் கண்ணகியின் வசனத்துக்கு!

மாதவியோ? அவளுக்கு அந்த நாடகத்தின் ஆரம்பத்தில் உள்ள காட்சிகள் தவிர மற்றபடி அத்தனை முக்கியம் இல்லை. போகிற ஊர்களில் யாராவது ஒரு நடிகையை ஏற்பாடு செய்து கொள்வார்கள். குமாரசாமி பாகவதரும் கமலவல்லியுமே 'ஸ்பெஷல்' ஒப்பந்தம்!

## 3

இவ்வாறு கண்ணகியும் கோவலனும் நாடக மேடைகளிலே சதிபதிகளாகிப் பிறகு வாழ்க்கை அரங்கிலும் கணவன் மனைவியுமாக இணைந்தார்கள். இதன் பிறகுதான் இந்தக் கோவலன் — கண்ணகியின் வாழ்விலும் ஒரு மாதவி — மெய்யான மாதவி— நாடக மாதவியாக வந்து தோன்றி வாழ்வின் மாதவியாக உருவானாள்!

ஆம்; போகிற ஊர்களில் அங்கங்கே மாதவி வேடத்துக்கு யாராவது நடிகையைப் பார்த்து அமர்த்திக் கொண்டவர்களின் நாடக வாழ்வில் இப்போது மீனகுமாரி என்ற ஒரு நடிகை புகுந்தாள்! மதுரையில் ஒரு ஸ்பெஷல் நாடகத்துக்குப் போயிருந்த போது இந்தப் புதிய மாதவி நாடக மேடையிலே தோன்றி நாடக அன்பர்கள், பெருமக்கள் அனைவருடைய ஒருமித்த பாராட்டையும் பெற்றுப் பல 'ஒன்ஸ்மோர்'களை வாங்கினாள். அன்றிலிருந்து குமாரசாமி பாகவதரையும் அவர் மனைவி கமலவல்லியையும் ஸ்பெஷல் நாடகத்துக்கு ஒப்பந்தம் செய்கிற முதலாளிகள் எல்லோரும், மீனகுமாரியையும் சேர்த்து ஸ்பெஷல் ஒப்பந்தம் செய்யத் தொடங்கினார்கள். பொதுமக்கள் அந்த இருவரோடு இந்த மீனகுமாரியும் சேர்ந்து மேடையிலே தோன்றினால்தான் அந்த நாடகம் நூற்றுக்கு நூறு 'ஸ்பெஷல்' என்று ஏற்றுக் கொண்டார்கள்.

கோவலன் — கண்ணகி நாடகத்தில் இப்போது புதிதாகச் சூடு பிடித்தது! அதே சமயம் நாடகத்தில் சூடு பிடிக்கப் பிடிக்க அந்த நாடக நடிகர்களின் இதய அரங்கிலும் வாழ்க்கை அரங்கிலுமே ஒரு புதிய சூடு பிடிக்கத் தொடங்கியது. ஆனால் அந்தச் சூடு ஒரு பெரு நெருப்பாகக் கனிந்து இத்தனை பெரிய விபரீதத்தை விளைவிக்கும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. அப்படி என்ன நடந்தது?

நாடகக் கதை எல்லோருக்கும் தெரிந்தது தான். வாழ்விலே கணவனும் மனைவியுமாக இணைந்து விட்ட குமாரசாமி பாகவதரும் கமலவல்லியும் நாள்தோறும் நாடக அன்பர்களின் கண் முன்பு மேடையிலே நின்று ஒருவரை ஒருவர் கைப்பிடித்துக் கணவனும் மனைவியும் ஆகிறார்கள். வாழ்வைத் தொடங்குகிறார்கள். அங்கே குறுக்கிடுகிறாள் மாதவியின் வேடத்திலே மீனகுமாரி! நாடகமும் வாழ்வும் ஒன்றோடொன்று குறுக்கிட்டன!

''நீங்கள் ஏன் அந்தக் கடற்கரைக் காட்சியிலே அப்படி நடந்து கொண்டீர்கள்?'' என்று கணவனைக் கேட்டாள் கமலவல்லி.

''எப்படி நடந்து கொண்டேன்?'' என்று திகைப்போடு கேட்டான் கோவலக் கணவன்.

''அந்த யாழை மாதவியின் கையிலிருந்து நீங்கள் வாங்கும் போது, எதற்காக உங்கள் விரல்கள் அவளுடைய விரல்களை அத்தனை உரிமையோடு தொட வேண்டும்?'' என்று பதறினாள் கமலவல்லி.

''தொட்டேனா ? இல்லையே !'' என்றான் குமாரசாமி.

''இல்லையா ? ஏன் மழுப்புகிறீர்கள் ? மேடையின் மறைவில் ஓரத்திலே நின்று கொண்டு இமை கொட்டாமல் பார்த்தேனே நான் !''

''கமலி! என்ன சொல்லுகிறாய் நீ? இந்த வாழ்வில் நீ ஒருத்தி தவிரக் கனவிலும் வேறொரு பெண்ணைச் சிந்திக்காதவன் நான். தெரியுமா?'' என்றான் குமாரசாமி.

"நாடக மேடைக் கோவலனும் அப்படியெல்லாம் ஒப்பித்தான் கண்ணகியைக் கரம் பற்றினன். ஆனால் நடந்தது என்ன?" என்றாள் கமலவல்லி.

"அது நாடகம் !" என்றான் குமாரசாமி.

"எது நாடகம் ? மீனகுமாரியின் விரல்களோடு விளையாடியதா நாடகம்? மாதவியிடம் கோவலனை வழங்கி ஏமாந்து போன நாடகக் கண்ணகி இல்லை நான். நான் கமலி, நான் கமலி. உங்களை மாலையிட்ட மனைவி! தெரிகிறதா ?"

கமலவல்லியின் உடம்பெல்லாம் உணர்ச்சியினால் ஆடியது. கையும் கால்களும் துடித்தன. உதடு படபடத்தது.

"கமலி ! நீ வீணாக என்னைச் சந்தேகப்படுகிறாய். கண்ணகியை மறந்து மாதவியிடம் பித்தாகிக் கிடந்த நாடகக் கோவலன் இல்லை நான் ! என்னை அப்படி எண்ணாதே. இந்த உடம்பில் உயிர் உள்ளவரை, இந்த வானமும் பூமியும் சாட்சியாகச் சொல்லுகிறேன். உன்னைத் தவிர நான் வேறு ஒரு பெண்ணைத் தொடேன். இது உறுதி. இது சத்தியம் !"

"நிறுத்துங்கள் ! நாடக வசனங்களைப் பேசிப் பேசி நீங்கள் வாழ்க்கையிலும் வசனம் பேசத் தொடங்குகிறீர்கள்! வெறும் வேடம். வெறும் நடிப்பு. வெறும் நாடகம் !"

"கமலி ! நிறுத்து அந்தச் சொற்களை. நீ விரும்பினால் இனிமேல் நம்முடைய நாடகங்களில் அந்த மீனகுமாரி தோன்றுவதையே தவிர்க்கிறேன். சரிதானா ?"

இவ்வாறு சொன்னான் குமாரசாமி. ஆனால் நாடக அன்பர்களும், அவர்களுக்காக என்றே சிறப்பு நாடகங்கள் நடத்துகிற முதலாளிகளும் என்ன சொன்னார்கள்? குமாரசாமி பாகவதரும், கமலவல்லியும் கோவலனும் கண்ணகியுமாகத் தோன்றினால், அவர்களுக்கு இணையாகத் தோன்றக்கூடிய தகுதி பெற்றவள் இந்தத் தமிழகத்திலே மீனகுமாரி ஒருத்திதான் ! ஒருத்தியேதான் என்றது நாடக உலகம்! எனவே ?

எனவே, சிறப்பு நாடகம் மீண்டும் தொடர்ந்தது. வாழ்வின் நாடகமும் அதன் விபரீதச் சிக்கலும் மறுபடியும் தொடர்ந்தன!

"இன்று கடற்கரைக் காட்சியிலே யாழ் வாசிக்கிற சமயத்தில் நீங்கள் ஏன் மீனகுமாரியைப் பார்த்து அத்தனை இங்கிதக் குறும்போடு புன்முறுவல் செய்தீர்கள்? அவள் வீட்டு மெல்லணையில் அமர்ந்த போது நீங்கள் ஏன் அத்தனை குழைவு குழைந்தீர்கள்? இதெல்லாம் என்ன நாடகம் ? சொல்லுங்கள். எனக்குத் தெரியும் ! தெரியும் எனக்கு !"

இவ்வாறு சொல்லிக் கண்களிலே தீப்பொறி கொட்டினாள் கமலக் கண்ணகி ! குமாரசாமி எத்தனையோ சமாதானம் சொல்லிப் பார்த்தான். பயனில்லை. கண்ணகிக்கு நெருப்புத் தணியவில்லை !

மறு நாள் இரவு மறுபடியும் அதே ஸ்பெஷல் நாடகம்! அது முடிந்து வீட்டுக்குத் திரும்பிய போது கமலவல்லிக்கு உடம்பெல்லாம் நெருப்பு ஒரே காய்ச்சலாகக் காய்ந்து கொண்டிருந்தது ! அன்று மறுநாளும் நாடகம் ! காய்ச்சல் அதிகரிக்கும்படி விடுவாரா நாடக முதலாளி? பெரிய பெரிய டாக்டர்கள் வந்தார்கள். மதுரை நகரத்தில் நடைபெறும் அந்த ஸ்பெஷல் நாடகத் தொடரில் அன்றிரவுதான் பன்னிரண்டாவது கடைசி இரவு ! டாக்டர்கள் ஸ்பெஷல் நாடகத்துக்கு என்று ஸ்பெஷல் ஊசியிலே ஸ்பெஷல் மருந்துகளை அரைமணி நேரத்துக்கு ஒருதரம் குத்தி நோயை வசப்படுத்தினார்கள். ஆனால் உள்ளத்துக்குள் ஏற்கனவே குத்தியிருந்த ஊசியைப் பற்றி அந்த டாக்டர்களுக்கு என்ன தெரியும்?

ஜுரம் தணிந்தது. பன்னிரண்டாவது இரவு. அந்தத் தொடரின் கடைசி நாடகம் மதுரையிலே ! அதே நாடகம். அதே கோவலன், அதே கண்ணகி, அதே மாதவி ! அதே மதுரை நெருப்பு ! ஆனால் ?

அரங்கிலே திரை விலகியது. கோவலனும் கண்ணகியும் கணவனும் மனைவியுமாகக் கரம் பற்றுகிறார்கள். இதோ மாதவி அவர்களுடைய வாழ்விலே குறுக்கிடுகிறாள். கோவலன் மாதவியின் மாலையைப் பெறுகிறான். அவள் வீட்டுக்குப் போகிறான். காதல் நாடகம் தொடர்கிறது!

இந்திர விழா ! வானவரும் மன்னரும் மக்களுமாகக் காவிரிப்பூம்பட்டினக் கடற்கரையிலே பூம்புகாரின் எழிலைப் பன்மடங்காக்கிக் கேளிக்கைகளிலே களிக்கிறார்கள். கோவலனும் மாதவியும் யாழை எடுத்து மீட்டி அதிலே இதயங்களை இணைத்துக் கூட்டிக் காதல் மயமான பாடல்களைப் பாடுகிறார்கள். திரை மறைவிலிருந்து இதையெல்லாம் இரு கண்ணும் ஒரு மனைவியின் இதயமும் இணைந்து கூர்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறாள் கமலவல்லி ! நாடகத்தின் காட்சிகள் தொடர்கின்றன !

அரங்கிலே கோவலனும் மாதவியும் தப்பெண்ணம் கொண்டு பிரிகிறார்கள். கண்ணகியிடம் திரும்புகிறான் கோவலன். 'மாதவியிடம் கொடுப்பதற்குப் பணம் இல்லையே என்று கவலை கொள்ள வேண்டாம்' எனத் தேறுதலும் ஆறுதலும் சொல்லுகிறாள் கோவலனிடம், நாடகக் கண்ணகியான கமலவல்லி ! ரசிகர்கள் அந்த இடம் பார்த்து 'ஒன்ஸ்மோர்' கேட்கிறார்கள். கமலவல்லி மீண்டும் மீண்டும் அந்த வசனத்தை ஒப்பிக்கிறாள். அவளுடைய இதயமோ என்றால் ஆழத்திலே குமுறுகிறது ! அது அந்த மேடைக்கு எதிரே இருக்கும் நாடக அன்பர்களுக்கு எப்படித் தெரியும்! கைதட்டுகிறார்கள். ஆரவாரம் செய்கிறார்கள். 'ஒன்ஸ் மோர்', 'ஒன்ஸ்மோர்' என்கிறது ரசிகக் கடல் !

அடுத்த காட்சி. கண்ணகியும் கோவலனும் மதுரை நோக்கி நடக்கிறார்கள். அடுத்த காட்சி மதுரை ! அதற்கு அடுத்தது வஞ்சிப் பத்தன்! அடுத்தது, அதற்கு அடுத்தது என்று மேலே மேலே நாடக அன்பர்கள் அந்த 'ஸ்பெஷல்' நாடகத் தொடரின் கடைசி இரவை இமை கொட்டாமல் கைமட்டும் கொட்டி, ஒரேயடியாக அநுபவிக்கிறார்கள்!

எமது மனமார்ந்த புத்தாண்டு வாழ்த்துக்கள்!




# கலியாண கால விற்பனை!

- காஞ்சீபுரம்
- பனாரஸ்
- தர்மாவரம்

**பட்டு சேலைகள்** || மற்றும் **சோளி** பீஸ்கள்

## நல்லி சின்னசாமி செட்டி

பனகல் பார்க்

தி.நகர் (போன்: 444115 • 444111) சென்னை-17

மற்றும் எழில்மிக்க எண்ணற்ற நூதன சேலைகள்!

- பனாரஸ் ஜார்ஜெட் • டஸ்ஸார் • தன்சோய்
- கோட்டா • வெங்கடகிரி • கத்வால் —

கைத்தறி சேலைகள், வேஷ்டிகள், அங்கவஸ்திரங்கள் - மில் வேஷ்டிகள் & ஜவுளிகள்.

Myers

OR

# Wasp

# PUMPS FOR EVERY PURPOSE









A wide range of pumps for every purpose, sturdily built and designed for optimum efficiency, by experts with an enviable background of over a hundred years' experience in manufacturing every type of pump—hand, power, pressure, turbine, centrifugal, rotary, etc. Also available pumps for pumping oil, chemicals, milk or fruit juices!

For your requirements, please contact:

**WATER SUPPLY SPECIALISTS PVT. LTD.,**

Bombay-1, P.B. 684 • Calcutta-1, P.B. 424 • Madras-1, P.B. 1707 • New Delhi-1, 4E/13 Jhandewalan Extn., Secunderabad (A.P.) 2670/74, Ghasmandy Rd.

இதோ, மதுரையில் கோவலன் கொலையுண்டு மடிகிறான். கையிற் சிலம்போடு தலைவிரி கோலமாக நின்று மன்னனிடம் வாதிடுகிறாள் கண்ணகி! அரசன் அப்படியே அதிர்ந்து விழுந்து மடிகிறான். அரசியும் மூச்சு இழந்து விழுகிறாள். மடிகிறாள். கற்புக்கரசி கண்ணகி கற்புக்கனலாகக் கனன்று இதோ மதுரைக்கு நெருப்பூட்டுகிறாள்!

நாடக மேடையிலே நெருப்பு! நாடக நெருப்பா அது? நாடக நெருப்புத்தானா? கைதட்டி ஆரவாரம் செய்கிற மக்கள், அந்த ஆயிரம் ஆயிரம் அன்பர்கள், அத்தனை பேருக்கும் தெரியாமல் திரைமறைவிலே மெய்யாகவே நெருப்புப் பிடித்துவிட்டதா?

கண்ணகி மதுரைக்குத் தீமூட்டுவதை நாடகமேடையின் திரை மறைவிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த மீனகுமாரியின் முந்தானையிலே ஏதோ தீப்பொறி வந்து சிதறியது போல் இருந்தது! மூடி விழிக்கும் நேரத்துக்குள் எங்கிருந்து வந்த நெருப்போ அது. கண்ணகி நின்ற இடத்திலிருந்து பாய்ந்து வந்த பொறிதானோ என்று மீனகுமாரி நினைப்பதற்குள், 'மள மள' என அந்த நெருப்பு மேலே பற்றத் தொடங்கியது!

"ஐயோ தீ! தீ! தீ!" என்று திரைக்குப் பின்னால் இருந்து மாதவி கூச்சலிட்டாள்.

"தீ! தீ! நெருப்பு! நெருப்பு!" என்று பலப் பல குரல்கள் மேடைக்குப் பின்னால் கூப்பாட்டோடு ஒலித்தன!

"வாளி! தண்ணீர்! மணல்!" — நாடக முதலாளி கூக்குரலிட்டார்.

மேடையின் ஓரத்தில் நின்று கொண்டிருந்த குமாரசாமி ஒரு விநாடியில் நிலைமையை உய்த்து உணர்ந்துவிட்டான். பாய்ந்தான் அப்படியே மீனகுமாரி நின்ற இடத்தை நோக்கி! தரையிலே அவளை உருட்டித் துணியிலே பற்ற முனைந்த நெருப்பை உறுதியோடும் துணிவோடும் மண்ணிலே தேய்த்துத் துடைத்து எத்தகைய விபரீதமும் நேராதவாறு ஒரு விநாடியில் தடுத்து நிறுத்தினான். மறுவிநாடி கோபக் கனலோடு நிற்கும் கண்ணகியை, நாடகக் கண்ணகியை அல்ல தனது மனைவியான கண்ணகிக் கமலியை, அப்படியே செந்தூக்காகத் தூக்கி வாரி அணைத்துக் கொண்டு, கண்ணகியோடு விமானத்தில் ஏறி மறைந்த கோவலனைப் போல் அந்த நாடக அரங்கிலிருந்து மறைந்தான் கோவலன் குமாரசாமி!

## 4

மதுரையில் நடைபெற்ற இந்த நாடக நெருப்புக்குப்பிறகு, குமாரசாமி பாகவதரின் ஸ்பெஷல் நாடகம் வேறு எந்த இடத்திலும் நடைபெறவில்லை! நாடக மேடையிலே பிடித்த அந்த மதுரை நெருப்பிலே தங்கள் வேடங்களையும் கலைந்து எறிந்து, தங்கள் நடிப்பை யெல்லாம் சுட்டுப் பொசுக்கி விட்டார்கள் கோவலக் கணவனும், அவனுடைய கண்ணகி மனைவியும்! மாதவி இருந்த இடமே தெரியாமல் எங்கோ போய் மறைந்தாள், நெருப்புக்குத் தப்பி!

நடிப்பு என்ற அரிய கலையை உடுப்பைக் களைவது போல் நெருப்பிலே கலைந்து எறிந்து எரித்துப் பொசுக்கி விட்டார்கள். ஆனால்? ஆனாலும் கலை என்ற ஊற்றுக் கண்ணை அவர்களால் அடைக்க முடியவில்லை, இதயத்துக்குள்ளே!

கலைக் கனலானது பஞ்சிலே பிடித்தது. கிளிஞ்சல்களிலே பற்றியது. களிமண்ணிலே சுடர்விட்டது!

முறுக்கு விற்கலாம். 'தேங்காய் மாங்காய் பட்டாணி' என்று விளம்பலாம். ஆனால் குமாரசாமி பாகவதருக்கும் கமலவல்லிக்கும் கைவராத கலை அது!

ஆம்; அவர்கள் இருவருக்கும் கைவந்த கலையானது மெல்லிய பஞ்சிலும், சின்னஞ்சிறு கிளிஞ்சல்களிலும், குழைந்து நிற்கும் களிமண்ணிலும் உருவாகிப் பலப் பல வண்ணங்கள் தாங்கியது. கண்ணகியின் வேடத்தில் சிலப்பதிகாரத்தை நடித்தது!

கோபக் கனல் வீசும் கண்ணகியை, நெருப்புப் பொறி பறக்கும் கண்ணகியை, மதுரையை எரியூட்டிய பத்தினியை, அவர்கள் எண்ணும்போதெல்லாம் நெஞ்சிலே அனல் பிடித்தது! எனவே, இப்போது அவர்களுடைய பஞ்சிலே சீற்றத் தீ பற்றவில்லை! இப்போது அவர்களுடைய கிளிஞ்சல்களிலே நெருப்புப் பிடிக்கவில்லை! இப்போது அவர்களுடைய களிமண்ணிலே தீப் படரவில்லை. அமைதி தவழ்ந்தது. சாந்தம் பரவியது. தண்மையின் குளிர்ந்த வண்ணங்கள் அந்தப் பொம்மைகளிலே மெருகு பூசிக் கோலம் இட்டன! கண்ணகி ஆசிவழங்கும் கடவுட் கோலத்திலே காட்சி தந்தாள்!



திருவல்லிக்கேணிக் கடற்கரையிலே, அதன் குளிர் காற்றிலே, மாதவியைப் பற்றியோ அவளுடைய மகள் மணிமேகலையைப் பற்றியோ கவலைப்படவில்லை, நம்முடைய கோவலனும் அவனுடைய கண்ணகியும்! மதுரையைத் தீயிட்ட கண்ணகி சாந்தமும் அமைதியும் தவழும் தெய்வமாக மாறி நின்றாள் அல்லவா? அது போலவே இந்தத் தள்ளாத வயதிலும் தன் கணவனும் தானுமாக அமைதி தவழும் முகத்தோடு எத்தனையோ பொம்மைகளுக்கு, எத்தனையோ கலைக் கண்ணகிக்குத் தாயாகச் சென்னைக் கடற்கரையில் கலையரசி உலவுகிறாள்!

மாதவிக்கு ஒரு மணி மேகலை! இவளுக்கோ இவர்கள் செய்கிற ஒவ்வொரு பொம்மையுமே ஒரு மணிமேகலை! கண்ணகி உருவில் நிற்கும் ஒரு மணிமேகலை!

# எப்பவும், எதையும்!

அது ஒரு சின்ன ஸ்டேஷன்!

சின்னதோ, பெரிதோ ஸ்டேஷன் என்றால் அதற்குச் சில அங்க பாரங்கள் இருந்துதானே தீர வேண்டும்!

வண்டி நீளத்துக்கு மேலே நீண்ட பிளாட்பாரம். அதற்கு ஒரு பாளத் தகட்டுக் கூரை; வெளியே மாட்டு வண்டிகள் நிற்க ஒரு இடம். நிழலுக்குச் சில மரங்கள்; ஊருக்குள் வண்டி—வாகனங்கள் போவதற்கு வேண்டிய ஒரு ரோடு — எல்லாம் அந்த ஸ்டேஷனுக்கு உண்டு. அந்தச் சாலையை அடுத்து மைதானமும் அதன் எல்லையாக உருட்டுக் கம்பி வேலியும் உண்டு. ஆனால் நடுநடுவில் இருந்த கம்பிகளைத்தான் இப்போது காணோம்!

அதோ மைதானத்தைப் பார்த்துக் கொண்டு நிற்கும் கூரை வீட்டின் மேலண்டைப் பகுதியில் துணிகள் உலர்த்தப்பட் டிருக்கிறதே — அந்தக் கம்பி இந்த வேலியின் அங்கமாக இருந்திருக்கலாம்.

சரி, அது போகட்டும்; மற்றக் கம்பிகள் எங்கே என்றால் யாருக்கும் தெரியாது.



அது ஒரு வீடு என்றுதான் பார்ப்பவர்கள் நினைப்பார்கள். அது ஒரு வீடு மட்டும் அல்ல. நன்றாகக் கவனித்துப் பார்த்தால் கூரைச் சார்ப்பில் ஒரு போர்டு தொங்குவது தெரியும். சிந்தாமணி விலாஸ் காப்பி, சாப்பாடு ஹோட்டலும் அது தான். நல்லவேளை; இந்தப் பட்டிக்காட்டிலே பச்சைத் தண்ணீர்கூடக் கிடைக்காது என்று பெருமூச்சு விட வேண்டியதில்லை, காப்பியே கிடைக்கும் என்று ஆறுதல் கொள்ளலாம். காப்பி என்கிற பெயரில் ஏதோ ஒன்று சூடாகக் கிடைத்தால் போதாதா? மணம், குணம், நிறம் எல்லாம் பொருந்தி யிருந்தால்தான் காப்பியா? அந்தக் கூரையும், ஆளோடியில் அடுக்கி யிருந்த சவுக்கைக் கட்டைகளும் வயிற்றுக்கு ஏதோ கிடைக்கும் என்பதை அறிவுறுத்தின.

சிறப்புச் சிறுகதை

அந்த ஸ்டேஷனில் இறங்கித் தான் இரண்டு இரண்டரை மைல் தூரத்தில் உள்ள ஸ்ரீ கோதண்ட ராமஸ்வாமி கோவிலுக்குப் போக வேண்டும். யாரைக் கேட்டாலும் அந்த இடத்திலிருந்து கோயில் இரண்டு, இரண்டரை மைல் என்று உத்தேசமாகத் தான் சொல்வார்கள். அந்த நாளிலிருந்தே அப்படித்தான் மைல் கல்லைப் பார்த்தால் தெரியுமே என்றால் தெரியும்தான். ஆனால் மைல் கற்கள் இருந்தால் தானே? ஸ்டேஷனுக்கு அருகில் இருந்த மைல் கல் அந்தக் கூரை வீட்டை அடுத்த குளத்திலும், கோவிலுக்கு அருகில் இருந்த கல் கோவில் குளத்திலும் கிடந்தன. மைல் கணக்குப் பார்ப்பதற்குப்



ஆர்வி





பயன்படுவதைவிட, பக்தர்களுக்கு உடையழுக்குப் போக்கப் பயன்படுவது பெரிது இல்லையா?

சிந்தாமணி விலாஸ் பெரும்பாலும் இந்தச் சின்ன ஸ்டேஷனில் மணியடிக்கிற சத்தத்தை நம்பித்தான் காலத்தை ஓட்டிக் கொண்டிருந்தது. சிந்தாமணி விலாஸ் என்ன, வெறும் ஹோட்டலா? ஐந்துபேர் அடங்கிய ஒரு குடும்பத்தைத் தாங்கும் பொறுப்பு அதன் தலையில் தான் விழுந்திருந்தது. சிந்தாமணி ஒன்று; அவருடைய இளைய தாரம் சிவகாமி இரண்டு. மூத்தாளுடைய பெண்கள் இரண்டு. ஆக நாலு; கடைசியாக இளையதாரத்துக்கு ஒரு பையன்; மொத்தம் ஐந்து பேர் அசதத் திரும்பட நடத்தி, வயிற்றையும் வளர்த்தாக வேண்டும். அப்படியே இதுவரையில் நடத்திக் கொண்டுதான் வந்திருக்கிறார்கள். அதாவது கிட்டத்தட்ட இருபத்தெட்டு வருஷங்களாக. மூத்த பெண் பார்வதி பிறந்த முதல் வருஷம் தான் சிந்தாமணி விலாஸம் பிறந்திருந்தது..

நடுநடுவில் அந்த எளிய குடும்பத்தில் சிறுசிறு சூறைக் காற்று வீசிவிட்டுப் போயிருக்கிறது. இருந்தும் அது முருங்கை மரத்தைப் போல் கிளைகள் உடைந்து முறிந்து விழுந்தாலும், மொட்டை மூளைக்கருகே துளிர்த்துக் கிளைத்துக் கொண்டுதான் வந்திருக்கிறது. சிந்தாமணியின் மூத்த மனைவியாள் இரண்டு பெண்களைத் தலையில் கட்டிவிட்டு, கடைசி வரையில் ஓயாமல் உழைத்து விட்டு இறந்து போனாள். அந்தச் சூறைக் காற்றினால் விளைந்த சேதத்திலிருந்து மீள்வதற்குள் அவர் திண்டாடிப் போனார். இரண்டாவது சூறைக் காற்று, இருந்த கொஞ்ச நிலமும் விளையாமல், விளைந்த வருஷம் வெள்ளத்தில் அடிபட்டுப் போனது. வீட்டுக்குப் புதிதாக வந்த மனைவி, அறியாக் குழந்தைகள் இரண்டு — பாவம், சிந்தாமணி விலாஸ் சீர்குலைந்து போகிற நிலைக்கு வந்துவிட்டது. அப்புறம் இப்படி இன்னும் சில நிகழ்ச்சிகள்; அதிர்ச்சிகள்!

பிறகுதான் சிந்தாமணி விலாஸ், இறைடைப்புறம் சார்ப்பு இறக்கி, தாழ்வாரத்தைத் தடுத்து வருகிறவர்கள், போகிறவர்கள் தங்கும் விடுதியாகவும் உரு மாறியது. ஒரு காலத்தில் அது மாட்டுக் கொட்டில்தான். இப்பொழுது தாழ்வாரமும் தனாறமாக, மாற்றியிருந்தார்கள். ஒரே சமயத்தில் இரு குடும்பமே வந்து தங்கியிருக்கலாம். பெட்டி படுக்கைகளை வைத்துக் கொண்டு தூங்குவதற்குத்தானே இடம்? சாப்பாடு குளியலுக்கு எல்லாம்தான் பக்கத்திலேயே ஹோட்டலும், குளமும் இருக்கின்றனவே!

''பாவம் பாவம்னு இப்ப விட்டுட்டா அப்புறம் அதுகளுக்கு வேலை செய்யவே உடம்பு வணங்காது. தின்னுத் தின்னுப்புட்டு தின்னு உடம்புதான் ஒதியாட்டமாப் பருத்துப் போகும்'' என்றாள் சிவகாமி.

''இப்ப மட்டும் அதுக வேலை செய்யாமலா இருக்கு? படுக்கப் போகிற வரையிலே அதுகளுக்கு வேலை சரியாகத்தானே இருக்கு?'' என்றார் சிந்தாமணி.

''செய்யட்டும், செய்யட்டும்; நம்ம வீட்டு வேலைதானே? இன்னொருத்தன் வீட்டு வேலை செய்யப் போகலியே. செய்யட்டும்; ஒன்னும் குறைஞ்சி போயிட மாட்டாளுக!''

தாய் இருந்தால் அந்தப் பெண்கள் இன்னும்கூடக் கடுமையாக உழைக்க வேண்டி இருக்கும் என்பது சித்தியின் கட்சி. பார்க்கிறவர்கள் பெண்ணைக் கொடுமைப்படுத்துவதாகச் சொல்லப் போகிறார்களே என்று பயந்து பயந்து போக வேண்டியிருப்பதாக அவள் நினைத்தாள். அதை அடிக்கடி சொல்லவும் சொன்னாள்.

அது நியாயமான பேச்சு என்று பட்டது சிந்தாமணிக்கு. மிஞ்சி மிஞ்சிப் போனால் அவரே முன்வந்து அந்தப் பெண்களுடைய கண்களில் ஒரு வேலையையும் காட்டாமல் செய்து விட்டுப் போய்விடுவார். ஆனால் இப்பொழுது வரவர அவர் செய்தாக வேண்டிய வேலைகளையே அவரால் செய்ய முடியவில்லை. யாராவது கூடமாட உதவி செய்தாக வேண்டியிருந்தது. எத்தனை நாட்களுக்குத் தான் வண்டி ஓடும்? மனசிலே தெம்பா, உற்சாகமா ஒன்றுமே இல்லை.

அதோ குளத்தங்கரையிலிருந்து முகத்தைத் துடைத்துக் கொண்டு வருகிறார் சிந்தாமணி. காலில் ஒட்டிய மணலை வாசல் குறட்டில் தட்டிக் கொள்கிறார். பார்வை கம்பா வாசல் பக்கமாகப் போகிறது.

பாயின்ட்ஸ்மேன் வீரையன் காக்கி உடுப்பும் செருப்புமாக 'டூட்டி' பார்க்கப் புறப்பட்டு விட்டான். நீராகாரம் ஆகிவிட்டது என்பதை நெற்றித் திருநீறே சொல்கிறது. சிந்தாமணி உள்ளே திரும்பிப் போனார்.

''ஏய்! மணி எட்டாகப் போகிறது. இன்னும் ஒண்ணும் சரியாக ஆனதாகக் காணலியே. ஏ, பாரு, ஏய்!'' என்று அழைத்தார் சிந்தாமணி.

''ஏம்ப்பா!'' என்று பக்கத்திலிருந்தே பதில் குரல் வந்தது.

''இங்கேதான் இருக்கியா நீ? வெய்யில்லே வந்தது வெளிச்சம் தெரியலே. மணி எட்டாகப் போகுதுன்னேன். இன்னும் சித்தெக்கெல்லாம் லயன் பிளாக் ஆகப் போறது. வீரையன் வேலைக்குப் போயிட்டான்.''

''என்கிட்டே ஏன் சொல்றே அதை?''

''அப்படின்னு—?''

''உள்ளே போய், சித்திக்குச் சொல்லு. அவதான் பொழுது விடிஞ்சதிலேருந்து சிடுசிடுன்னு எரிஞ்சு விழுந்திண்டே இருக்காள்.''

''எதுக்கு?''

''அது எதுக்கோ? நீயே போய்க் கேளு.''

முற்றத்தை மறைத்துக் கொண்டிருந்த தட்டியைத் தாண்டிப் போய் எட்டிப் பார்த்தார் அவர். அவர் மனைவி சிவகாமி அடுப்படியில் வேலையாக இருந்தாள். பார்வதியின் தங்கை சம்பா அம்மியில் என்னவோ அரைத்துக்கொண்டிருந்தாள்.

அவர் வெறுமேதான் எட்டிப் பார்த்தார். எதையும் போய்க் கேட்பதற்காக இல்லை.

''சரி, படத்துக்கு விளக்கு ஏத்தி வைச்சுட்டியா,—பாரு!''

''அதோ எரியறதே; தெரியல்லியா?''

''எலக்கட்டு!''

# இண்டியனாயில்

## எங்களுடையது-நாட்டுக்குச் சொந்தமானது !

நாட்டின் பாதுகாப்புப் பணியில் ஈடுபட்டுள்ள நாங்கள் **இண்டியனாயிலின்** நெருங்கிய துணையுடன் நம் நாட்டை அந்நிய ஆதிக்கத்தினின்றும் பாதுகாக்க வேண்டி தரையிலும் ஆகாயத்திலும் கடலிலும் இடைவிடாமல் சேவை புரிகிறோம். எல்லைப்புற யுத்தகாலங்களில் **இண்டியனாயில்** ஒரு மகத்தான பொறுப்பை ஏற்று வந்திருக்கிறது. இந்திய விமானப்படைக்கு தேவையான விமான எண்ணை சப்ளை செய்வதற்கும் சரி, எந்த வகைப்பட்டயுத்த விமானத் திற்கும் கண நேரத்தில் எண்ணை நிரப்புவதற்கு விசேஷ வசதிகள் செய்து கொடுப்பதற்கும் சரி, பகலென்றும் இரவென்றும் பாராமல் பணியாற்றி வந்தது. **இண்டியனாயிலின்** அபரிமித வேகம் தரும் டீசல் எண்ணையினால் சக்தி பெறும் டிரக்குகளும் மற்றும் சப்ளை அலுவல்களை இடைவிடாமல் செய்து வந்தன. சுதந்திரதீபம் சுடர்விட்டுப் பிரகாசிக்கச் செய்வதில் **இண்டியனாயில்** எங்களுக்கு பேருதவி புரிந்தது.

**இண்டியனாயில்** இவ்வளவும் செய்ய முடிகிறதென்றால் அது நமக்குச் சொந்தமாக இருப்பதே காரணம்.




இண்டியன் ஆயில் கார்ப்பொரேஷன் லிட்.,

''இன்ன அவசரம்? பொழுது விடியறச்சே எங்கே யார் வந்து நிக்கறு? மெதுவாக் கொண்டு வச்சாப் போறது?''

பாரு இதைச் சொல்லி வாய் மூடவில்லை. அதற்குள் வாசல் நிலைப்படியைத் தாண்டி நீளமாக ஒரு நிழல் விழுந்தது. தொடர்ந்து குரல் வந்தது.

''என்ன சார், ஏதாவது கெடைக்குமா? இல்லை, நேரமாகுமா?''

இருவருமே திரும்பிப் பார்த்தார்கள். எதிர் வெளிச்சம் கண்ணைக் கூச அவர் கைகளால் புருவத்தை மறைத்துக் கொண்டு வந்தவனைப் பார்த்தார். நேற்று ராத்திரி வண்டியில் வந்திருந்த பிள்ளையாண்டான். பத்தரை மணிக்கு மேல் அவன் வந்தது. அவனுக்குக் கீழண்டையுள்ள விடுதியில் இடம் கொடுத்தது. அவன் பட்டினியாகவே படுத்துக் கொள்ள நேர்ந்தது — எல்லாம் நினைவுக்கு வந்தன. அதுவரையில் அவன் ஞாபகமே இல்லை.

ராத்திரி அவன் முகம் மங்கலான வெளிச்சத்தில் சரியாகத் தெரியவில்லை. இப்போது தான் நன்றாகக் கவனித்தார். வந்திருந்தவன் நல்ல வசதியான நிலையில் இருப்பவனைப் போல் தெரிந்தது.

''வாங்க, வாங்க, இதோ ஆச்சு: அஞ்சே நிமிஷம்!'' என்று வரவேற்றார் அவர்.

அவன் அங்கே கிடந்த பெஞ்சு ஒன்றில் நிதானமாக, நாசூக்காக உட்கார்ந்து கொண்டான். வாசல் வெளிச்சம் அவன் முகத்தில் பட்டது. பார்வதி அங்கே நிற்பதையோ, அவள் தன்னையே பார்த்துக் கொண்டிருப்பதையோ அவன் கவனிக்கவே இல்லை. அவன் கண் இன்னும் இருட்டுக்குப் பழகவில்லை.

''என்ன ஆச்சு, போய்ப் பாரேன், பாரு!'' என்றார் சிந்தாமணி.

அவர் சொல்வதை அவள் காதில் வாங்கிக் கொண்டதாகவே தெரியவில்லை. அவனையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

''சரி, நானே போறேன்.''

அப்புறம்தான் அவன் முகம் அவள் இருந்த பக்கமாகத் திரும்பியது. இருட்டிலே தெரியும் வர்ணச் சித்திரம் போல் அவள் நிற்பதை இப்போதுதான் அவன் தெரிந்து கொண்டான்.

'அப்பா! இத்தனை நாழியாச்சாக்கும் முகத்தைத் திருப்ப!' என்று அவள் நினைத்துக் கொண்டாள். அவளுக்கு ஒன்றும் அவன் கண்ணில் படுவதற்குக் கூச்சமில்லை. நன்றாகப் பார்த்துக் கொள்ளட்டுமே என்றுதான் நின்றாள். ஆனால் அவன்தான் பார்க்கவில்லை. சட்டென்று பார்வையைத் திருப்பிக்கொண்டு விட்டான். பாருவுக்குக் கொஞ்சம் ஏமாற்றமாகப் போயிற்று. 'உக்கும்; பெண்களை இப்படியெல்லாம் கவனிக்கப்படாதாம். அவ்வளவு யோக்யமாம்!' என்று உதட்டைப் பிதுக்கிக் கொண்டாள்.

அவளுக்கு நேற்று ராத்திரியே தெரியும். பேச்சுக் குரல் கேட்டதுமே, அந்தக் குரலுக் குரியவனைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் அடித்துக் கொண்டது. தட்டிக்குப் பின்புறம் தான் அவள் படுத்திருந்தாள். எப்போதும் அவளுக்கு அங்கேதான் படுக்கை. மழையோ, பனியோ, அந்த இடம் தான் அவளுக்குக் காணியாட்சி. தட்டியை ஒட்டினாற்போல் இரண்டு ஒற்றைப் பெஞ்சுகளை இணைத்துப் போட்டுக் கொண்டு படுத்தால்தான் அவளுக்குத் தூங்கினாற்போல் இருக்கும். தூக்கம் வருகிற வரையில் முற்றத்தின் வழியாக ஆகாசத்தைப் பார்த்து ஆனந்தப்பட்டுக் கொண்டிருப்பாள். கண்ணைச் சிமிட்டிச் சிரிக்கும் வைர மணிப் பொட்டுக்களைப் பார்த்து, மனத்தைப் பறி கொடுத்தவாறு படுத்திருப்பாள். அதுவும் கூடச் சிலவேளைகளில் சலித்துப் போகும். தட்டியில் உள்ள சின்ன இடுக்கு வழியாக அந்தப் பக்கம் வருவது யார், போவது யார் என்று பார்ப்பது அவளுக்கு இன்னொரு பொழுதுபோக்கு. சுவாரசியமாக இருந்தால் சரி; இல்லாவிட்டால் அந்தச் சின்ன இடைவெளியைச் சிலாம்பினாலேயே மூடி விடுவாள். ராத்திரி பேச்சுக் குரல் கேட்டதும் அந்த மந்திரக் கண்ணை மெல்ல விலக்கித் திறந்து, அதன் வழியே பார்த்தாள். அங்கிருந்த மங்கலான வெளிச்சமே அவளுக்குப் போதும். ஆனால் அப்பாவின் தலை மறைத்தது. அந்த முகத்தைச் சரியாகப் பார்க்க முடியவில்லை. இருந்தாலும் அந்தக் குரலை எப்போதோ கேட்டது மாதிரி இருக்கிறதே. மற்றக் குரல்களிலிருந்து தனியே பிரித்து நினைவு வைத்திருக்கும் குரல் போல இருக்கிறதே!—

அவனைக் கீழண்டைப் பக்கத்து அறையில் விட்டு விட்டுச் சிந்தாமணி திரும்பி வந்தார்.

அவள் திரும்பிப் படுத்துக் கொண்டே, ''யார் அப்பா அது?'' என்றாள்.

''யாரோ, மெட்ராஸாம். கோவிலுக்கு வந்திருக்காப்பலே இருக்கு.''

''இன்னும் வேறே யாரு?''

''ஒருத்தரும் இல்லை; அவன் மட்டும் தான்!''

பார்வதி சிறிது தயங்கினாள். நெஞ்சில் ஏதோ ஒரு கேள்வி குறுகுறுத்தது. அதை எப்படிக் கேட்பது என்று தெரியவில்லை.

''பட்டினி கிடந்து பிரார்த்தனை செலுத்தறது நல்லதுதான்!'' என்றாள் யாருக்கோ சமாதானம் சொல்வது போல.

''பிரார்த்தனையா இருந்தா நல்லதுதான்! ஆனால் காமிராவெல்லாம் கொண்டு வந்திருக்கிறதைப் பார்த்தால் படம் எடுக்கிறதுக்கு வந்திருக்காப்பிலேன்னு தோன்றது!''

''அப்படியே நினைச்சேன் நான்!'' என்றாள் பார்வதி. ஆனால் அந்த வார்த்தைகள் அவள் வாயை விட்டு வெளிப்படவில்லை. நெஞ்சுக்குள்ளேயே அடங்கி விட்டன. அப்படியானால் அவனாகத்தான் இருக்கும். ஏழெட்டு வருஷங்களுக்கு முன்னால் வந்து மறந்துபோக நினைத்தவைகளை மறுபடியும்



அறிவு உள்ளவர்கள் அதிகம் பேசுவதில்லை; அதிகம் பேசுகிறவர்களுக்கு அறிவு இருப்பதில்லை.

—சீனப் பழமொழி

னைறிவிட்டு விட்டு, அதற்கு ஒரு வழியும் செய்வதாகச் சொல்லிவிட்டுப் போனவனுக்குத் தான் இருக்கும். போனதுமே ஏற்பாடு செய்வதாகச் சொல்லிவிட்டுப் போனவன், எட்டு வருஷங்கள் கழிந்து வந்திருக்கிறான்.!

''இருக்கட்டும்; காலேயில் பார்த்தால் தெரிஞ்சு போகிறது!'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டு அவன் புரண்டு படுத்தான். ஆனால் தூக்கம் வந்தால்தானே!

நெஞ்சு ஆவலால் கொந்து துடித்தது.

''பாரு — பார்வதி என்கிறது யார்? நீயா, இன்னொரு பெண் இருக்கிறாளே, அவளா?'' என்று கேட்ட குரல் இதுதான்; சந்தேகமே இல்லை.

''ஏன்?'' என்று சந்தேகத்துடன் திருப்பிக் கேட்டாள் பாரு.

''இல்லே; யாருன்னு சும்மாத் தெரிஞ்சுக்கலாம்னுதான் கேட்டேன்.''

''அந்தப் பேரு உங்களுக்குப் பின்னே எப்படித் தெரியும்?''

''ஏன்? இந்தப் பேரைத் தெரிஞ்சுக்க முடியாதா? அது ஒரு கஷ்டமா?''

பாருவின் முகம் சட்டென்று மாறிப் போயிற்று. அவள் சற்று மனஸ்தாபத்துடன், ''கஷ்டமா இருந்தால் இருக்கட்டும்; நான் போகிறேன்'' என்று சொல்லிவிட்டுத் திரும்பிப் போக முயன்றாள்.

''இல்லே, மெட்ராஸிலே எனக்கு ஒரு நண்பன். அவன் அடிக்கடி இந்தப் பேரைச் சொல்லிக் கொண்டிருப்பான். அதனாலே கேட்டேன்.''

பாருவின் நடை தடைப்பட்டது. அவள் மந்திரத்துக்குக் கட்டுப்பட்டது போல் நின்றாள்.

''மெட்ராஸிலேயா?''

''ஆமாம்.''

''உங்க சிநேகிதரா?''

''ஆமாம்.''

''அவர் பேரு?''

''சொன்னு உனக்குத் தெரியுமோ?''

''அவர் என் பேரைச் சொல்றப்ப எனக்கு அவர் பேரைத் தெரிஞ்சுக்க முடியாதா?''

அவன் இதைக் கேட்டவுடன் கலகல வென்று சிரித்தான்.

''பார்த்தியா, நான் கண்டுபிடிச்சு விட்டேன்! பாரு நீதான்!''

''அது சரி, அவர் பேரு?''

''உனக்குத் தெரியும் அவன் பேரு.''

பாரு அலுத்துப் போய், ''அப்படி என்ன சொல்வார் அடிக்கடி?'' என்று கேட்டாள்.

''உன் பேரைத்தான் அடிக்கடி சொல்வான். நீ எப்படி இருப்பேன்னு சொல்வான். அதைப் பார்க்கணும்னே பாதி வந்திருக்கேன்.''

பார்வதி சிறிது யோசித்தாள். முகம் முறுகிச் சிவந்தது.

''சரி; நான் எப்படி இருக்கேன்?''

அவனும் சிறிது யோசித்தான். அவளே அப்போதுதான் பார்ப்பதுபோலக் கவனித்துப் பார்த்தான்.

''அவன் என்ன சொன்னானோ, எப்படிச் சொன்னானோ, அப்படியேதான் இருக்கிறாய். இன்னும் கூட....''

''அது சரி; அவர்? அவர் இப்ப எப்படி இருக்கார்?''

''எப்பவும் போலத்தான். இன்னும்கூட....''

''இன்னும் கூட—?''

''ஜோராக, டிப்டாப்பாக, பிரமாதமாக இருக்கான்!''

பாரு இதைக் கேட்டுப் பெருமூச்செறிந்தாள்.

''ஆமாம், நீ இங்கே எப்படி இருக்கே?''

''எப்படின்னு?''

''நீயும் அவன் பேரை அடிக்கடி சொல்லிண்டுதானே இருக்கே?''

''ஏன், எதுக்காக?''

''எதுக்காகவா?''

''ஆமாம், எதுக்காகச் சொல்லிண்டு இருக்கணும்? எப்பவும் நினைச்சிண்டிருக்கிறபோது அடிக்கடி என்ன அடிக்கடி? எப்பவும், எந்த நேரமும் நினைச்சிண்டே இருக்கேன். அடிக்கடி இல்லே. எப்பவும்!''

''அதானே கேட்டேன்? ராமதாஸ் சொல்லியிருக்கான் அதையும்!''

''யாரு, யாரு?''

''யாரா? ராமதாஸைத்தான் சொல்லுறேன். அவனைத்தானே சொல்றே நீயும்?''

''உங்க சிநேகிதருன்னு சொன்னது அவரைத்தானே?''

''அவனையேதான்; அந்த ராமதாஸையே தான்!''

''அப்பா! என்ன ஆனந்தமாய் இருக்கு!''

''எது?''

''அந்தப் பேரைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கேக்கறது!''

''அதானே பார்த்தேன். நான் வேறே என்னமோ நினைச்சுட்டேன். நீ யாரு யாருன்னு கேட்டதும்.''

''கடைசிவரையிலே நீங்க பேரைச் சொல்லாமலே இருந்தால், நான் வேறே என்ன தான் செய்யறது?''

இப்படிச் சொன்னதும் இருவருமே சிரித்தார்கள்.

''நான் இன்னிக்கே புறப்பட்டுப் போய்ச் சொல்றேன், அவன்கிட்ட. வேலையிலே இப்ப அவன் எனக்கு மேலேதான். இருந்தாலும் என் பேச்சை இதுவரையிலும் தட்டினது இல்லே. அதனாலே போய்ச் சொல்றேன்....''

''என்னன்னு?''

''இந்த மாதிரி அடிக்கடி அவ பேரைச் சொல்லிண்டிருந்தாப் போதாதுடாப்பா. எப்பவும் எப்பவும் நினைச்சுண்டே இருக்கிறதுக்கு என்ன வழியோ, அதைப் பாருன்னு சொல்றேன்.''

''வெறுமே சொல்லி என்ன புண்ணியம்? வழியைப் பார்க்கத் தெரிஞ்சிருந்தா மூணு வருஷத்துக்கு மேலேயே ஆகியிருக்குமா?''

''தெரியல்லேன்னு நானே கூட இருந்து சொல்லிக் கொடுக்கிறேன். அதுவும் போதாதுன்னு அதுக்கு வேண்டியதை நானே இருந்து செய்யச் சொல்றேன். பாரேன் நீ, போனதும் முதல் வேலே இதுதான்!''

அன்றைக்குச் சாயங்காலம் ஐந்தரை மணி வண்டிக்குப் புறப்பட்டுப் போனவன்தான். அப்புறம் அவனைப் பற்றி ஒன்றுமே தெரிய வில்லே. அவன் பேச்சுக் குரலும் அவன் காது

களில் வெகு நாள்வரை ஒளித்துக் கொண்டேயிருந்தன. எட்டு வருஷங்கள்...அந்த ஒளி வர வர வலுவிழந்து, தேய்ந்து, மாய்ந்தே போய்விட்டது.

'அன்றைக்கு அத்தனை நம்பிக்கை ஒளியை வீசி விட்டுப் போனவரா இத்தனை வருஷங்கள் கழித்துத் திரும்பி வந்திருக்கிறான்? அவன் குரலா கேட்கிறது? அவனாக இருந்தால் ஏன், எதற்காக வந்திருப்பான்? என்ன செய்தி கொண்டு வந்திருப்பான்?' — ராத்திரி பெல்லாம் அவளுக்கு இதே குடைச்சல்தான்; நல்ல தூக்கமே இல்லை.

பொழுது விடிந்து வெளிச்சத்தில் இதோ நேருக்கு நேர் பார்க்கிறான். அவனேதான்.... அவனேதான்! ஆனால் அவன் என்னவோ ஒன்றுமே தெரியாதவன் மாதிரி பார்வையைத் திருப்பிக் கொள்கிறானே! நன்றாகப் பார்த்தால்தான் என்ன? ஒருவேளை சொன்னபடி செய்யாமல் போய்விட்டதற்காக இப்படிக் கூச்சப்படுகிறானோ? இதற்கெல்லாம் யார் தான் என்ன செய்ய முடியும்?

அவள் சரசரவென நடந்து வெளிச்சமான பகுதிக்கு வந்தாள். கூச்சப்படாமல் தன்னைக் கவனிக்கட்டும் என்று சுவாமி படத்துக்கு முன்னால் ஏற்றி வைத்திருந்த விளக்கைச் சிறிது தூண்டி விட்டாள். இப்போதாவது கவனிக்கிறானா என்று ஜாடையாகக் கடைக்கண் வழியாகப் பார்த்தாள்.

பார்க்கிறான். அவள் தன்னைக் கவனிக்கவில்லை என்று நினைத்துக்கொண்டு பார்க்கிறான். அவள் திரும்பினால் அவன் பார்வையும் திரும்பிவிடும். அதற்கு இடம் கொடுக்கிறதாவது என்று அவள் மார்பிலே இரு கைகளையும் கட்டிக் கொண்டு அவனைப் பார்த்தவாறு திரும்பி நின்றாள். 'குற்றவாளி மாதிரிக் குனிந்து கொண்டுவிட வேண்டாம். நன்றாக நிமிர்ந்து பார்!' என்கிற பாவனை. உதட்டில் எங்கிருந்தோ ஒரு முறுவலை நெளிய விட்டுக் கொள்கிறாள்.

அவன் அப்புறம்தான் அவளைப் பார்த்தான். இவ்வளவு நேரம் நின்றும் கவனிக்கவில்லை என்று சொல்ல வழியில்லாதபோது தான் அவளை நேருக்கு நேர் பார்த்தான். ஆனால் அந்தப் பார்வையில் ஏன் உயிரே இல்லை?

''பாரு, பாரு!''

அவள் பொறுமையை இழந்து, கடைசியாக அவனை ஒரு முறை பார்த்துவிட்டு, தட்டியைத் தாண்டி வேகமாக மறைந்து சென்றாள்.

உள்ளே போனதுமே அவளுக்கு ஒரு புதுப் பொறுப்பு ஒன்று காத்திருந்தது. எரிந்து விழுந்து கொண்டிருந்த சித்தி இப்போது அவசரம் அவசரமாகச் சிங்காரித்துக் கொண்டிருந்தாள். சம்பாவையும் சுறுசுறுப்பாகப் புறப்படும்படி தூண்டிக் கொண்டிருந்தாள். அவளுக்கு விஷயம் புரிந்துவிட்டது. அடுத்த ஊரில் ஒரு கல்யாணம். அதற்குத்தான் புறப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

''இந்த எட்டரை வண்டிக்குப் போய் விட்டு, சாயங்காலம் ஆறரைக்குத் திரும்பி விடுவோம். கொஞ்சம் பார்த்துக்கோ. தம்பியும் கூடத் துணைக்கு இருப்பான்!''

என்று சொன்னாள் சித்தி. எரிந்து எரிந்து விழுந்து கொண்டிருந்த சித்தியா இவ்வளவு நயமாகப் பேசுகிறாள்?

''இரண்டே போது; எல்லாம் ஏற்பாடா வச்சிருக்கேன். ஒண்ணும் தேடவேண்டியா இல்லே. முடிஞ்ச வரையிலே செய்தால் போதும். பால் ஜாக்கிரதை. திரிஞ்சு போயிடாமே பார்த்துக்கோ. போயிட்டு ஓடி வந்துடறேம்'' என்று போகிறபோது சொல்லி விட்டுப் போனாள் சித்தி.

பாரு வாசலில் வந்து நின்று பார்த்தாள். எட்டரை மணி வண்டி வந்து பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்தது. சித்தி இப்போதுதான் மெதுவாகப் போகிறாள். அப்பா இன்னும் மெதுவாகப் போய் டிக்கட் வாங்கிக்கொண்டு போகிறார். சம்பா ஒரு வண்டியைப் பார்த்து ஏறிக் கொண்டு, சித்தியை ஏறிக்கொள்ளும்படி அழைக்கிறாள். அப்பா! வண்டி இவ்வளவு நேரம் காத்திருக்கிறதே! தினம் இவ்வளவு நேரமா நிற்கிறது? வந்தது கூடத் தெரியாது. உடனே 'ஊ' என்று ஊதிக் கொண்டு புறப்பட்டு விடுமே!

தம்பி, இரும்புக்கிராதியைப் பிடித்துக் கொண்டு, அவர்களை வழியனுப்பிவிட்டுத்

## தாடி செய்த மோசடி



பிரெஞ்சுக் கவிஞரான செயின்ட் பாக்ஸ் என்பவர் நிறையச் சம்பாதித்தார். ஆனால் அதற்கு மேலும் அவருக்குக் கடன் இருந்தது.

ஒருநாள் முக க்ஷவரம் செய்து கொள்வதற்காக ஒரு சலூனுக்குப் போனார். முகத்தில் சோப்பும் தடவியாயிற்று.

அப்போது பார்த்து அவருக்குக் கடன் கொடுத்திருந்த வியாபாரி சலூனுக்குள் நுழைந்தார். கவிஞரைப் பார்த்தாரோ இல்லையோ, மிகவும் ஆத்திரத்துடன் 'பணத்தை உடனே கொடுத்தால் தான் ஆச்சு' என்று 'தாம் தூம்' என்று குதித்துக் கொண்டு கத்தினார்.

''நான் முகக்ஷவரம் முடித்துக் கொள்ளும்வரை மின் பெரிய மனசு வைத்து அவகாசம் தரக் கூடாதா?'' என்று கெஞ்சினார் கவிஞர்.

வியாபாரிக்கு ஆறுதல் ஏற்பட்டது. ''அதற்கென்ன காத்துக் கொண்டிருக்கிறேன்'' என்றார்.

கவிஞர் எழுந்தார். ஒரு டவலை எடுத்தார். முகத்திலுள்ள சோப்பு நுரைகளைத் துடைத்தெறிந்தார். சலூனை விட்டுக் கிளம்பி வீட்டை நோக்கி நடையைக் கட்டினார். அதன் பிறகு தம் வாழ்நாள் முடியும்வரை முகக்ஷவரமே செய்து கொள்ளவில்லை. தாடி வளர்த்துக் கொண்டார்.

-'சிவமயம்'

திரும்பி வருகிறான். வண்டி ஆர்ப்பாட்டமாகப் புறப்பட்டு விட்டது. புகை மறைகிறது.

''ஏய் தம்பி, உள்ளே போய் உட்காருடா, இதோ ஒரு நொடியிலே வரேன்!'' என்று சொல்லிக் கொண்டே பாரு, மேலண்டைச் சார்ப்புப் பக்கமாகப் போனாள். அங்கே இருந்த இரண்டு அறைகளையும் மாறி மாறிப் பார்த்தாள். இரண்டும் பூட்டிக் கிடந்தன.

''ஏ, கோபாலு! இங்கேயிருந்து யாரானும் வண்டியிலே போனாங்களாடா?'' என்று வண்டிகள் நிற்கும் இடத்தைப் பார்த்துக் கூவிய படியே விசாரித்தாள்.

கோபாலு அங்கிருந்தபடியே பதில் குரல் கொடுத்தான்.

''ஆமாம்மா. மொட்டையன வண்டியிலே போனாரு ஒருத்தரு!''

பிறகு மைதானத்தைக் கடந்து வந்து, ''யாரு, கையிலே தோல் பெட்டி எடுத்துக்கிட்டு, செவலையா, உசரமா ஒரு ஆளு... அவரைத்தானே அம்மா கேக்கிறீங்க? மெட்ராஸ்காரர் மாதிரித் தோணிச்சே — அவருதானே?'' என்று அங்க அடையாளங்களைச் சொல்லிக் கேட்டான் கோபாலு.

பாருவின் நெற்றியிலே முத்து முத்தாக வேர்வை அரும்பியது அவள் எரிச்சலோடு, ''போறபோது சொல்லிட்டுப் போனா என்ன கேடு? அப்புறமாப் போனாத்தான் என்ன கொள்ளை?'' என்று எரிந்து விழுந்தாள்.

தம்பி மேஜையடியில் உட்கார்ந்து சிந்தாமணியாக நடித்துக் கொண்டிருந்தான். யார் யாரோ வருவது போலவும் சாப்பிட்டு விட்டுச் சில்லறை கொடுப்பது போலவும் அதை வாங்கிக் கிண்ணத்தில் போடுவது போலவும் நோட்டாக நீட்டுபவர்களுக்கு மீதிச் சில்லறையை எண்ணிக் கொடுப்பது போலவும் ஒத்திகை நடத்திக் கொண்டிருந்தான்.

''எங்கே, சரியாத்தானே கொடுத்திருக்கேன், எண்ணிப் பாரேன். ஆம்... ஏமாத்தப் பார்க்கிறியா?'' என்று கற்பனையாக யாரிடமோ நாடகம் நடத்திக் கொண்டிருந்தான்.

''பாத்தியா? நானே பத்துக் காசு அதிகமாகக் கொடுத்திருக்கேன்!'' என்று சட்டென்று மேஜைமேல் போட்ட சில்லறையில் ஒரு பத்துக் காசை எடுத்துக் கிண்ணத்துக்குள் போட்டுக் கொண்டான்.

''தம்பி! யாருடா அங்கே?''

''ஒருத்தருமில்லியே?''

''பின்னே நீ யாரோட பேசிண்டிருக்கே?''

''இல்லியே — நான் சும்மாத்தானே பேசாமல் இருக்கேன்!''

''இன்னும் அவர் வரல்லியா? வாசல்லே போய்ப் பாரு! மொட்டையன் வண்டி நிக்கிறதோ பாரு!''

அவன் போய்ப் பார்க்கிறானோ, பார்க்கவில்லையோ என்று அவளே வாசலில் வந்து நின்று பார்த்தாள். வண்டித் திடல் காலியாகக் கிடந்தது. ஆலமரத்தடியில் எருமைக் கன்றுக்குட்டிதான் படுத்திருந்தது.

''காணுமே இன்னும். சமையல் எல்லாம் ஆறிப் போறதே!'' என்று திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டாள்.

ஒரு மணி வண்டி வந்துவிட்டுப் போயிற்று. யாரோ இரண்டு பேர் வந்து, 'வடை இருக்குமா, தோசை பலகாரம் ஏதாவது இருக்குமா?' என்று கேட்டார்கள்.

''இன்னிக்கு ஒன்னுமில்லே! தோசையுமில்லே, ஓசையுமில்லே!'' என்று வருவதற்கு முன்பே அவர்களை விரட்டியனுப்பிவிட்டாள் பாரு.

''அக்கா — பாருக்கா! அதோ மொட்டையன் வண்டி வருது'' என்று கூவினான் தம்பி.

அவள் வாசல் குறட்டில் வந்து நின்று பார்த்தாள். அவன் வந்து விட்டான். தோளிலே காமிரா தொங்க, கையிலே தோல் பை ஒன்றை எடுத்துக் கொண்டு, மைதானத்தைக் குறுக்கே கடந்து அவன் வந்து கொண்டிருந்தான்.

பாருவுக்கு வெளிச்சத்தைப் பார்க்கவே பிடிக்கவில்லை. அவள் வாசல் வெளிச்சம் படாத இருட்டிலே போய் நின்றாள். நெஞ்சு என்ன காரணத்தாலோ படபடவென்று அடித்துக் கொண்டது. அவனுக்கு எதிரில் வந்து நிற்க இப்போது அத்தனை கூச்சமாக இருந்தது.

''எங்கே, யாரையும் காணோம்?'' என்று கேட்டுக் கொண்டே அவன் மேஜையடியில் வந்து தயங்கி நின்றான்.

''இருக்காளே — பாருக்கா இருக்காளே!''

''எங்கே?''

''அதோ!''

அவன் திரும்பி அவள் நிற்குமிடத்தைப் பார்த்தான். கண்கள் இருட்டுக்கு இன்னும் பழகவில்லை. அதனால் உற்றுக் கவனித்தான்.

''இருட்டு; ஒன்னுமே தெரியல்லே!''

அவள் ஒன்றுமே பதில் சொல்லவில்லை. பேசாமல் உள்ளே விரைந்து சென்றாள். அங்கிருந்தபடியே, ''தம்பி! அப்பவே இலை போட்டாச்சுடா. சாப்பிட அழைச்சிண்டு வா!'' என்று குரல் கொடுத்தாள்.

சமையல் என்னவோ அருமையாகத்தான் இருந்தது. ஆனால் அவனுக்குத்தான் சரியாகச் சாப்பிட முடியவில்லை.

''எல்லாம் ஆறி அவலாப் போச்சு!''

''ஆமாமாம்; அப்பவே கவனிச்சேன். என்ன செய்யறது?''

பாருவுக்கு அவன் பேச்சுப் புரியவில்லை

''நீங்க வந்தது ...''

''அவனுக்குத் தெரியும்; சொல்லிண்டுதான் வந்தேன்.''

''ஒன்னும் சொல்லல்லியா?''

''சொன்னானே, ஒன்னும் சொல்ல வேண்டாம்னு சொன்னான்.''

''......................''

''அவனைப் பத்தி ஒன்னும் சொல்ல வேண்டாமாம். ஆனா நான் சொல்லத்தான் போறேன். எதுக்காக மறைக்கணுமோ, தெரியல்லியே!''

''எதை?'' — அவளுக்கு நெஞ்சு தழுதழுத்தது.

''அவன் எதைச் சொல்ல வேண்டாம்னு சொன்னானோ, அதைத்தான் சொல்றேன்! எதுக்காக மறைக்கணும்?''

''ஊஹூம்; வேண்டாம், வேண்டாம். எதையும் எங்கிட்டே சொல்லவே வேண்டாம்!'' என்று கூவினாள் அவள்.

அவனுக்கு என்னவோ போல ஆகிவிட்டது.



# உங்கள் செல்லப் பாப்பாவுக்கு "பாம்பீனு!"

*அன்புள்ள பெற்றோர்களே,*

இத்தாலிய மொழியில் 'பாம்பீனு' என்றால் குழந்தை என்பது பொருள். ஆகையால் உங்கள் குழந்தைகளுக்கென்று 'பாம்பீனு' என்ற பிரத்யேக மெத்தையைத் தயாரித்துள்ளோம். இந்த மெத்தை மிருதுவானது. லேசானது. இதை நனைத்து உலர்த்துவது எளிது. வெகு சுகாதாரமானது. அழகிய பூப்போட்ட உயர்தர துணி உறைகூடியது. சுலபமாகக் கழட்டி வெளுக்கலாம். குழந்தைகள் கொஞ்சும் பொம்மைகளும், தலையணைகளும், தள்ளு வண்டி மெத்தைகளும் யூ:போமில் தயாராகின்றன. உங்கள் செல்லப் பாப்பாவுக்கு இன்றே ஒன்று வாங்குங்கள்.

*என்றும் தங்கள்,*

**யூ-ஃபோம் பிரைவேட் லிமிடெட்**
**ஸனத் நகர், ஹைதராபாத்-18.**
பூரண விற்பனை ஏஜெண்டுகள்:
**அஸோஸியேடட் ஸேல்ஸ் அண்டு**
**அட்வர்டைஸிங் கம்பெனி**
*126, சரோஜினிதேவி ரோட், ஸிகிந்தராபாத்-3 (A.P.)*

# யூ-ஃபோம்

பல்வேறு உபயோகமுள்ள அற்புத யூரிதேன் ஃபோம்

**U-FOAM**

சென்னை மற்றும் கேரள ராஜ்யங்களுக்கு விநியோகஸ்தர்கள்: தோர்ன் வேர் ஹவுஸ் கம்பெனி, 66, பீட்டர்ஸ் ரோடு, சென்னை-6 (போன்: 87441) ஷோரூம்: 163, லாயிட்ஸ் ரோடு, சென்னை-14 (போன்: 81437) கிளைகள்: கோயமுத்தூர் & எர்ணாகுளம்

FDSUF 926 TM

# பாதுஷாவின்

கோவி. மணிசேகரன்




இளங் காலைப்போதின் உதய ரேகைகள் கலைந்து கொண்டிருந்தன. பாதுஷா ஔரங்கசீப்பின் அவசர அழைப்புக்கிணங்கி அதிகாரிகள் அரண்மனை நோக்கிப் பறந்து கொண்டிருந்தனர். டில்லி மாநகர் வீதியே திகைத்தது.

பொன்னாலும் மணிகளாலும் அலங்கரிக்கப்பெற்ற அழகுமிகு அரண்மனைக் கூடத்தில், பாதுஷா ஔரங்கசீப், பெரிதான ஆலோசனையில் மூழ்கித் தம்மை மறந்திருந்தார். அந்த உருவத்துக்கே ஓர் அலாதிப் பொருள்! அந்தக் குரலுக்கே ஒரு தனியான மதிப்பு!

எதிரே சின்னஞ்சிறு மர மேடையின் மீது பொன் வேலைப்பாடுகளுடன் கூடிய பட்டுத் துணி விரித்து, அதன் மேல் இரண்டு அலங்காரச் செருப்புக்கள் — பாதுகைகள் வைக்கப் பெற்றிருந்தன. ஏன், எதற்கு என்பன போன்ற கேள்விக் குறிகள்தாம் எத்தனை எத்தனை முகங்களில்!

அரசியல் அதிகாரிகள் அனைவரும் சூழ்ந்து விட்டனர். பாதுஷா ஔரங்கசீப்பின் செக்கச் சிவந்த கண்கள் வலம் வந்தன. கொடூரம் நிரம்பிய முகத்தில் பொருளார்ந்த புத்தம் புதிய தெளிவு! கொக்கரிப்பு நிறைந்த அந்த உதடுகளில் சித்தம் செறிந்த தெளிவு!

''ஷா இன்ஷா அவர்கள் எங்களை அவசரமாக அழைத்ததன் காரணத்தைத் தெரிவிக்குமாறு வேண்டுகிறோம்!'' — அதுவரையில் நிலவியிருந்த அமைதியை மெல்லக் கலைத்தார் முதலமைச்சர்.

பாதுஷா ஔரங்கசீப்பின் சிரிப்பொலி புகைத்தது. ''தென்னாட்டவர் பலர் கப்பம் செலுத்தாமல் ஏமாற்றி வருகின்றனர். அவர்களுக்குப் பாடம் கற்பிக்க வேண்டும்...!''

''எப்படி என்பதை நாங்கள் அறியலாமா, பாதுஷா?''

''அறியத்தானே உங்களை அழைத்தேன்! இதோ இருக்கும் பாதுகைகளில் ஒன்றை யானையின்

மீது வைத்து ஊர்வலமாக அழைத்துச் செல் லுங்கள். தென்னாட்டு மன்னர்கள் இதற்குத் தலை வணங்கித் திறை செலுத்த வேண்டும். தவறிய வர்களை நான் படைகொண்டு சிறைப்பிடிப்பேன்!''

''பாதுஷா !''

''ஏன் இந்த வியப்பு?''

''அறம் பற்றியதிலும், கலை பற்றியதிலும் முன்பே அநீதியான பெயர்கள் கங்களைப் பற்றி அடிபட்டு வருகின்றன. இதனால் கொந்தளிப்பே ஏற்படும்!''

''இல்லை; ஔரங்கசீப்பின் இதயம் இமயத்தை வெல்லும் !''

''யானை இந்துக்களின் புனித ஜீவன்!''

''அதனால் என்ன?''

''பாதுகையை அதன்மீது ஏற்றி, இந்துக்களைத் தலை வணங்கச் செய்வது அறமாகாது.''

''இந்துக்களின் இராமாயணத்தில் பரதன் இப்படிச் செய்யவில்லையா ?''

''அவர் தம் தலை மீதே அதைச் சுமந்தார்!''

''இவை என் அண்ணனின் பாதுகைகள் அல்ல; என்னுடையவை! வீண் வாதங்களை நான் விரும்ப வில்லை. முடிந்த முடிவாகத்தான் இதனைச் செய் கிறேன். ஔரங்கசீப் ஒரு புதிய சரித்திரத்தை எழுதுகிறான் ! நாளையே இந்தப் பாதுகை யாகம் நடைபெற வேண்டும் !''

தில்லி பாதுஷா ஔரங்கசீப்பின் கட்டளையை மீற யாருக்குத் துணிவு உண்டு ?

அந்நாளையத் தென்னகமே அரட்சி கண்டது; ஆவேசம் கொண்டது. என்ன கண்டு யாது பயன் ?

வழிநெடுகத் தலைகள் வணங்கின; வழிபாட்டுக் கரங்கள் காணிக்கை செலுத்தின. பெருநில மன்னர்களும், குறுநிலச் சிற்றரசர்களும் வருநிலை உணர்ந்து வாய் பொத்தி, பாதுஷாவின் பாதுகைக்கு வழிவிட்டனர். பாதுகைப் பயணம் தமிழக எல்லையைத் தாண்டியது.




# பாதுகை

வெகுண் டெழுந்த னர் வீர மிகு தமிழர் கள்! ஆயினும் என்ன செய்ய முடியும்? அவர் களையே அப்போது ஆளுவது நாயக்கர் மரபுதானே?

வெறிச் சோடிய வீதிகளில்தாம் பய ணம் சென்றது. ஆயிர மாயிரம் இஸ்லாமிய வீரர்களுக்கே அது ஆச்சரியத்தை விளை வித்தது. இந்தத் தமி ழர்களோ விசித்திர நாகரிகப் போக் குடையவர்கள் தாம்! எதிர்க்க முடியாத நிலை என்று தெரிந்து,

மதிக்க முன்வராமல் இருப்பது அவர்களுடைய நாகரிக முதிர்ச்சிதான் !

பொங்கழல் உருவன் பூதநாயகன், நால்வேதமும் பொருள்களும் அருளி, அங்கயற்கண்ணி தன்னொடும் அமர்ந்த ஆலவாய் அழகர்வாழ் அழகுமிகு மாமதுரையைத் தலைமைப் பீடமாகக் கொண்டு அப்போது ஆண்டு வந்தவர், மூன்றாம் முத்துவீரப்ப நாயக்கர்.

தில்லி பாதுஷா ஔரங்கசீப்பின் இந்தப் புதிய ஏற்பாட்டைக் கேள்விப்பட்டு, வெட்டுண்ட அரவை வால்போல் துடிப்புக் கண்டார் முத்துவீரப்ப நாயக்கர்.

அங்கயற்கண்ணியாம் மீனாட்சிவாழ் ஆலவாய் மதுரையில், ஔரங்கசீப்பின் பாதுகையை யானை முதுகு சுமந்து வர விரும்பாத முத்துவீரப்ப நாயக்கர், திருச்சிராப்பள்ளிக்குப் பயணமானார். அப்படிப் பயணமாகும் போது அன்னை மீனாட்சியை வழிபட்டார்.

மதுரையை விட்டுச் சிராப்பள்ளி நாடி வந்த மறைவு பலருக்குப் புரியாத புதிராக இருந்தது. அரசர் முத்துவீரப்ப நாயக்கர் யாரிடமும் "எந்தவிதப் பேச்சையும் வைத்துக் கொள்ளவில்லை. பாதுகையின் மர்மம் ஏதாக இருக்க முடியும் என்பதிலேயே அவருடைய சிந்தனை சுழன்றது.

ஒரு வாரம் கழிந்தது. பாதுகைப் பயணம் திருச்சிராப்பள்ளி எல்லையுள் நுழைந்தது. நாயக்கரின் முன்னறிவிப்புப்படி அந்தப் பயணத்துக்கு மக்கள் எவ்வித எதிர்ப்பையும் காட்டிக் கொள்ள வில்லை. ஆனால் தாங்க முடியாத அவமானம் என்கிற பொருமல் மட்டும் அனைவருடைய உள்ளத்திலும் பொங்கி எழுந்தது.

அரசர் மாளிகையின் தலைவாயிலை அடைந்து நின்றது யானை. காவல் நின்ற வீரர்கள் கவனியாது போல் வாளாய் நின்றனர். முகமதியர்கள் முகங்களில் சீற்றம் வெடித்தது. அவர்களைச் சாந்தப்படுத்தினான் தளபதி நஸீர்கான்.

தங்கத் தாம்பாளத்தில் வைக்கப்பெற்றிருந்த அந்தப் பாதுகையைச் சுமந்து கொண்டு மாளிகையுள் நுழைந்தான் நஸீர்கான். அரியாசனத்தில் வீற்றிருந்த அரசர் முத்துவீரப்ப நாயக்கர் ஒரு விருந்தினரை வரவேற்பதுபோல் வரவேற்றார் :— ''வாருங்கள் தளபதி ! உங்கள் வருகை மனிதர்களை மதிப்பதாக இருக்கட்டும் !''

நஸீர்கான் கலகல வென்று நகைத்தான் : ''மதுரை நாயக்கரே ! இந்தப் பாதுகையை நீங்கள் மதிப்பீர்களேயானால், எங்கள் பாதுஷாவும் உங்களை மதிப்பவராவார் !''

''இது என்ன பாதுகை? புரியும்படி சொல்லுங்கள் !''

தளபதி நஸீர்கான் விளக்கினான்.

அரசர் முத்துவீரப்ப நாயக்கர் இப்போது கடகடத்த சிரிப்பொலியை எழுப்பினார். ''அப்படியா? வெகு நேரமாக அதனைச் சுமக்க வேண்டாம் ; தரையில் வையுங்கள். அதற்குரிய மதிப்பை நான் தருவேன்!''

முத்து வீரப்ப நாயக்கரின் பேச்சின் உள்ளடக்கத்தை நஸீர்கான் புரிந்துகொள்ள வேண்டுமே ! அவன் மிக்க மரியாதையுடன் தரையில் தாம்பாளத்தை வைத்தான்.

அரியணையை விட்டு எழுந்து வந்த அரசர் முத்துவீரப்ப நாயக்கர், யாரும் நினைத்துப் பாராத ஒன்றைச் செய்துவிட்டார். தம்முடைய இடக்காலுக்கு அந்தப் பாதுகையை அணி செய்து, வலக்காலை நீட்டி, ''எங்கே இன்னொரு பாதுகை நஸீர்கான்? உங்கள் பாதுஷா ஒரு காலில்தான் பாதுகை அணிவாரோ?'' என்று கூறி, வேதனையும், வேகக் களிப்பும் கலந்த ஆவேசப் பெருநகை புரிந்தார். அந்தப் பெருநகையின் எதிரொலி போல் முகம்மதிய வீரர்களின் வாட்கள் உருவப்பட்டன. தொடர்ந்து தமிழ் மக்களின் வீரவாட்கள் கர்ஜனை செய்தன.

அரசர் முத்துவீரப்ப நாயக்கரின் குரல் கணீரென்று ஒலித்தது : ''நஸீர்கான் ! நீங்கள் இருப்பது திருச்சிராப்பள்ளி! இங்கு ஒரு சிரமும் தப்ப முடியாது. அமைதியாக விடைபெறலாம்! விருப்பமிருப்பின் இன்னொரு பாதுகையுடன் உங்கள் பாதுஷாவைச் சந்திக்கச் சொல்லுங்கள்!''

அரண்டு மருண்ட தில்லிப் படைகள் திரண்டு நடந்து வடக்கு நோக்கின. முத்துவீரப்பரின் துணிவை அறிந்த தென்னகமே வியந்தது; பயந்தது ! ராணி மங்கம்மாளின் திருமகனாயிற்றே முத்துவீரப்ப நாயக்கர் !

தில்லி பாதுஷா ஔரங்கசீப்பின் சினச் சீற்றத்தில் தெறிக்கும் தீப்பொறிகளால், தமிழகமே சாம்பலாகப் போகிறது என்று பலரும் கருதினர் ; கணித்தனர். முத்துவீரப்பநாயக்கரின் கரங்களில் விலங்கிட்டு, ஒரு சொறி நாயைப் போல வீதிக்கு வீதி இழுத்து வரப் போகிறார்கள் என்று காதுக்குக் காது வைத்தது போல முணு முணுக்கத் தொடங்கினர்! பாதுஷா அனுப்பிய பாதுகையைக் காலில் அணிவதா? என்ன செருக்கு?

கொலு மண்டபத்தில் அமர்ந்திருந்த தில்லி முகலாயக் கொற்றவர் ஔரங்கசீப், செய்தியைக் கேள்விப்பட்டு, சிங்கத்தின் பிடரிச் சிலிர்ப்பு போலெழுந்து, யானையின் மதத்த நிலையில் அசைந்து, புலியின் உறுமலைப் போல் குரல் விடுத்துப் பகபக வென்று பெருநகை எழுப்பினார். அந்தக் கடகடத்த சிரிப்பொலி கேட்டு மாளிகை அதிர்ந்தது ; மனிதர்கள் விதிர்த்தனர்.

பாதுஷாவின் வாயிலிருந்து ஏதோ பயங்கரக் கட்டளை வெளிவரப் போகிறது! தென்னாடு கண்டிராத போர்ப் பயணம் தொடங்கப் போகிறது.

ஔரங்கசீப்பின் நாவசைந்தது: சொற்கள் வெடித்தன: ''பிரதானியரே ! அதோ அந்த மற்றுமொரு பாதுகையை யானை முதுகில்—இல்லை, நவரத்தினப் பல்லக்கில் வைத்துப் படைப் பயணத்துக்கு ஆவன செய்யுங்கள். படையென்றால், சாதாரணப் படையல்ல; பெரும்படை; அதன் நடையதிர்ச்சியிலேயே தென்னகம் நடுங்கிப் பொடிந்து விடவேண்டும். படைக்குத் தலைமை தாங்கப் போகிறவன் உங்கள் பாதுஷா !''

எல்லாரும் எல்லாவற்றையுமே எதிர்பார்த்தனர். ஆனால் பாதுஷாவே படைக்குத்

தலைமை தாங்கப் போகிறார் என்பது எவரும் எதிர்பாராதது !

மறுநாள் புலர்பொழுதில் ஔரங்கசீப்பின் மகாசேனை புறப்பட்டது! முன்னே நவரத்தினப் பல்லக்கு; பின்னே முகலாயநாயகராம் ஔரங்கசீப்பின் அலங்காரப் போர்ப் பயணம்!

தென்னகத்தில் நெடுந்தூரம் முழுதும் 'பொன்னகத்தில் பொலிந்த பொலிவு !' என்று விளக்குமளவுக்கு ஒப்பனை! ஔரங்கசீப் என்றால் அந்நாளைய சிம்மசொப்பனம் அல்லவா ?

இடையிடையே இருந்த அரசர் பலர் தங்கள் அரணுக்குப் பாதுஷா எழுந்தருளுவார் என்றுதான் எதிர்பார்த்தனர். ஆனால் பாதுஷாவோ இலக்கை நோக்கிச் செல்லும் அம்பு போல், திருச்சிராப்பள்ளியை நோக்கிச் சென்றார். அதுவே அவருடைய முதல் பயணமும்கூட !

இடைப்பட்ட அரசர்கள், எதிர்பார்ப்பு தடைபட்ட காரணத்தால், கைகூட்டி வணங்கினர்; வழிபட்டுப் படை கூட்டியனுப்பினர். இப்படியாகச் சேர்ந்த சேனைசமுத்திரம் நாலு திசைகளையும் நிரப்பி, கண்டோரைக் கலக்கியது; விண்டோரை மயக்கியது !

முகலாயப் படைகள் திருச்சி எல்லைக்குள் நுழைந்தன. அங்கே —

அரசர் முத்து வீரப்பரைக் காணவில்லை. அவர் மதுரையில் இருப்பதாகச் செய்தி கிடைத்தது. 'என்ன திமிர் இந்த முத்து வீரப்பனுக்கு' என்று எண்ணிச் சினந்தனர் இஸ்லாமிய வீரர்கள்! ஆனால் பாதுஷா ஔரங்கசீப்....?

ஏனிந்தப் புன்னகை? ஓகோ! எல்லையற்ற வெற்றியின் எதிர்நடிப்போ இந்தப் புன்னகை— அல்லது ஏளனப் புன்னகை?

மகாசமுத்திரம் போலத் திரண்ட படைகள் மதுரைமாநகரை அடைந்தன.

இம்முறை தமிழ் மக்களின் வரவேற்பில் புதிய முறை தென்பட்டது. சென்ற முறை வெறிச்சோடிய வீதிகளில் பாதுகை சென்றதுபோல அல்லாமல், வழி நெடுக மக்கள் நின்று வேடிக்கை பார்த்தனர். அவர்களுக்குப் பின்னால் பயங்கரமான ஆயுதங்கள் மறைந்திருந்தன. திடுமென்று ஏதேனும் ஏற்பட்டால் பாதுகாப்புத் தேவையல்லவா ?

ஒற்றர்கள் மூலம் பாதுஷா ஔரங்கசீப்பின் வருகையில் தெரிந்த மாறுதலைக் கேள்விப்பட்டுத்தான், நாயக்க அரசர் மக்களைப் பார்வையிடப் பணித்தார். மேலும், பாரதமே வியந்த பாதுஷாவல்லவா ஔரங்கசீப்!

தமிழகத்தின் பேரெழிலைப் பார்க்கப் பார்க்கத் தார்வேந்தர் ஔரங்கசீப்பின் கண்கள் கனன்று காட்சி தருகின்றனவா, இல்லை பனிக்கின்றனவா என்றே புரியவில்லை பலருக்கு! பயணம் நீடிக்க நீடிக்கப் பலருக்குப் பாதுஷா ஒரு புரியாத புதிராகவே தோற்றமளித்தார்.

வானளாவிய எழுநிலை மாடம் கொண்ட அரண்மனையின் தோற்றம் ஔரங்கசீப்பை வியக்கச் செய்தது. அவரை வரவேற்க அரண்மனை அதிகாரிகள் முன்வந்தனர். களம்



"புடவை பெரிசா இருக்குதுங்க."
"அப்படியா? நானிக்குக் கடைத் தெருவுக்குப் போகச்சே ஞாபகப்படுத்து."
"புதுப் புடவை வாங்கிண்டு வந்து கொடுக்கிறீங்களா ?"
"ஊசியும் நூலும் வாங்கிட்டு வர்றேன்!"

காண வருபவராக இருந்தால் எல்லையில் நின்று போர் முரசம் கொட்டுவார்! இவர் காணிக்கை காணத்தானே வருகிறார் !.... எனவே, அதிகாரிகள் முன்வந்து வரவேற்று மாமன்னர் திருமலை நாயக்கர் கட்டிய கலைத்திறன் வாய்ந்த பெருங்கூடத்துக்கு—மகாலுக்கு அழைத்துச் சென்றனர். அங்கே —

நாயக்க அரசர் முத்து வீரப்பர், வீரார்ந்த கோலத்துடன் நின்றிருந்தார். ஒரு காலில் பாதுஷாவின் பாதுகை; மறு காலில் தம்முடைய பாதுகை ! இடுப்பில் வீர வாள்! தலையில் மணி மகுடம்!

அம்பாரியிலிருந்து இறங்கிய பாதுஷா, வீர நடை போட்டு அருகே வந்து நின்றார். அவருக்கு முன்னே, முகலாயப் பிரதானி, கையில் தங்கத் தாம்பாளத்தில் ஏந்திய பாதுகையுடன் நின்றிருந்தார்.

இப்படி எதிரும் புதிருமாக எவ்வளவு நேரம்தான் நிற்க முடியும்? யாராவது ஒருவர் வணங்க வேண்டும்; வாய் திறக்க வேண்டுமே! அனைவருமே விழிப்பும் களிப்புமாக அரண்டு காட்சி தந்தனர்.

ஔரங்கசீப்பின் கண்கள் முத்துவீரப்ப நாயக்கரின் காலை நோக்கின. அங்கே, முன்னம் கப்பத்துக்காக அனுப்பிய பாதுகை காட்சி தந்தது. அடுத்து —

"வணக்கம், டில்லி பாதுஷா !" என்றார் முத்துவீரப்ப நாயக்கர். நாயக்கர் குரல் முதலில் வந்தது சொந்தக்காரர்களுக்கு வியப்பு ; அந்நியர்களுக்கோ மகிழ்ச்சி. பாதுஷா ஔரங்கசீப் பொருளார்ந்த குறுநகை புரிந்து, "சலாம், நாயக்கரே ! சலாம்!" என்றார். "நாயக்கரே! நீங்களாக வணங்கியதற்கு மகிழ்கிறேன்."

முத்துவீரப்ப நாயக்கர் முத்துநகை புரிந்தார். "இல்லை; நீங்கள் வணங்கிய பிறகு

******************************



குழந்தையைத் தூக்கி வைத்துக் கொள்ளக் கை நோகிறது; அதைக் கீழே இறக்கினால் மனம் நோகிறது.

— பொலிவியப்பழமொழி

******************************

தான், நட்புறவோடு வந்திருக்கிறீர்கள் என்று உணர்ந்து மறு வணக்கம் செலுத்தினேன்!''

''என்ன! நான் வணங்கினேனா ?''

''உங்கள் கண்கள் என் பாதத்தைத் தொட்டன.''

''என் பாதுகையைப் பார்த்தேன்!''

''அது என் காலில் இருக்கிறது !''

முத்துவீரப்பரின் புத்திக் கூர்மையைச் சோதிக்க, இந்தப் பதிலே பெரு வியப்பை அளித்தது ஔரங்கசீப்புக்கு! மேலும் பேசினார்:

''இன்னொரு பாதுகையையும், உங்கள் கட்டளைப்படி கொண்டு வந்திருக்கிறேன்.''

''மெத்த மகிழ்ச்சி ! கப்பம் கட்ட வேண்டுமா ?''

''எதிர்பார்க்கிறேன்!'' என்று கூறிய பாதுஷா ஔரங்கசீப், இன்னொரு பாதுகையுள்ள தங்கத் தாம்பாளத்தைத் தரையில் வைக்குமாறு தம் கண்களால் உத்தரவு பணித்தார்.

தாம்பாளம் தரையில் வைக்கப்பட்டது.

கொஞ்சமும் தாமதியாமல் நாயக்க அரசர் முத்துவீரப்ப நாயக்கர், வலக் காலை எடுத்துப் பாதுகையுடன் நுழைத்து அணிந்து கொண்டார். மறுகணம் —

முகலாய வீர வாட்கள், பேரோசையுடன் உருவப்பட்டன. ஆனால் —

பாதுஷாவின் வணங்காத திருமுடி, வணங்கியது. ''நாயக்கரே! உங்கள் துணிவையும், புத்திகூர்மையையும் மெச்சுகிறேன்! இப்போது நீங்கள்தாம் பாதுஷா !''

தமிழ்க் கண்களிலே காவிரிப் பிரவாகம்! தலைகள் யாவும் தாழ்ந்தன. நாயக்கரின் சிரம் நயந்து பணிந்தது. ''நன்றி, பாதுஷா ! மிக்க நன்றி ! நான் எதிர்பாராத ஒன்று இது! வரலாறு எதிர்பாராத ஏடு இது !''

பாதுஷா ஔரங்கசீப்பின் கண்களில் புனித நீர்ப் பிரவாகம்! அவருடைய நயந்தரு நாவு அசைந்தது: ''முத்துவீரப்பரே! என்னுடைய இந்த வருகையால் தென்னகமே மண்ணகமாய் விடும் என்று பலரும் எதிர்பார்த்தனர். ஏன் நீங்களும் எதிர்பார்த்திருப்பீர்கள். உண்மை அதுவல்ல. ஔரங்கசீப்பைப் பற்றி அநியாயமான விமரிசனங்கள் நாட்டில் பலவாறு பரவின. என் வாழ்நாளில் நான் சரித்திரத்தை மூட ஆசைப்படவில்லை. தொடக்க ஆசைப்பட்டேன். ஔரங்கசீப் இதயமில்லாதவன் — கலைக்கு விரோதி என்பன போன்ற பழிச் சொற்களுள் என்னைச் சமாதி வைக்க நான் விழையவில்லை. ஔரங்கசீப்பின் அரசியல் ஒரு புதிய அத்தியாயம் — இதயம் நிரம்பிய படலம் என்பதை உருவாக்கி அதன் மேல் அமர ஆசைப்பட்டேன். என்னுடைய இந்தப் புதிய பணியை — அடக்கம் நிறைந்த அரசியல் தொடக்கத்தை எவர் மூலம் தொடங்குவது என்று பல நாட்கள் ஆய்ந்தேன். ஒருவரும் என் கண் முன் தென்படவில்லை. ஆனால் செவிகள் மூலமாக உங்கள் பெயர்தான் கேள்விப்பட்டேன். எனவே இந்தப் பாதுகை யாகம்! இதனால் என்னை எதிர்த்தவர் என் பக்கத்திலே இருந்தனர்; வைதவர் வழிநெடுகக் காணப்பட்டனர். பாவம், அவர்கள் ! அவர்களுக்கு உங்களுக்குத் தோன்றியது போன்ற துணிவோ புத்தி கூர்மையோ, தன்மான உணர்வோ ஏற்படவில்லை. காவிரியின் நீர், கங்கையினும் தூய்மையானதுதான்-வாய்மையானதுதான்- ஆண்மை நிறைந்ததுதான்! நான் கேள்விப்பட்டது மிக மிக உண்மை !''

டில்லி பாதுஷா ஔரங்கசீப் அன்பொழுக, பண்பொழுக நாயக்க அரசர் முத்து வீரப்பரை மார்போடு மார்பு தழுவி அணைத்துக் கொண்டார். ''ஒழுக்கசீலரான உங்களை அல்லா காப்பாற்றி விட்டார் !''

ஒரு வார விருந்தோம்பலுக்குப் பிறகு, பாதுஷா விடைபெற வேண்டிய கட்டம் வந்தது. நண்பர்கள் இருவரும் மார்போடு மார்பு தழுவி மீண்டனர். பாதுஷா ஔரங்கசீப் மெல்லக் கேட்டார்: ''நாயக்கரே ! நான் செல்வச் சீமானாக வந்தேன்; ஏழையாகத் திரும்புகிறேன்.''

பலர் வியந்தனர். நாயக்கர் நளினமாகச் சிரித்தார். ''என்ன வேண்டும் பாதுஷா ? என்ன வேண்டுமானாலும் தந்துவிடுகிறேன்.''

''வேண்டாம்; உங்கள் நாட்டு மக்களின் சரித்திரத்தில் நான் நல்லவிதமாக இடம் பெற வேண்டும். எனக்குத் தேவையானவை, அந்த இரண்டு பாதுகைகள்தாம் !''

''அணிந்த பாதுகையை மற்றவருக்கு அளிப்பது எங்கள் மரபல்ல !''

''வேண்டாம்; அவற்றுக்குரிய செல்வத்தைக் கொடுத்து விடுங்கள். உங்கள் நண்பன் செல்வந்தனாகவே திரும்புவான் !''

மீண்டும் அதே நளினமான சிரிப்பு முத்துவீரப்பருடைய பொருள் புதைந்த இதழ்களில் ! அடுத்துக் கொஞ்சமும் தாமதியாமல் இடுப்பிலிருந்த குத்துவாளை எடுத்து, பாதுகைகள் இரண்டையும் கழற்றி, தங்கத் தாம்பாளத்துக்கு நேரே பிடித்துத் துண்டு துண்டாகக் கிழிக்கத் தொடங்கினார். என்ன வியப்பான காட்சி அது.....!

பலப்பல வாய்களில் வியப்பார்ந்த ஒலிகள்! பலப் பல நாவுகளில் புகழார்ந்த சொற்கள் !

பெரிதும் சிறிதுமான நவரத்தினங்கள் அந்த இரண்டு பாதுகைகளிலிருந்து பொல பொலவென்று கொட்டியவண்ணம் இருந்தன. அடா அடா! வண்ணமான அந்தக் கற்களும், முத்துக்களும் தங்கத் தாம்பாளத்தை நிரப்பியவண்ணம் இருந்தன! தாம்பாளத்தை மட்டும்தானா அவை நிரப்பின ! எத்தனை எத்தனை இதயங்களை அவை நிரப்பி விட்டன !

Printed & published by R. Anaothanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

